॥ श्रीः ॥

श्री गुरुभ्यो नमः

नमो वृद्धाय च संवृध्वने च ।

# वरिवस्यारहस्यम्

प्रकाशव्याख्योपेतं

श्री भास्कररायमखिप्रणीतम्

ब्रह्मविद्यारत्न - तन्त्रशास्त्रनिपुण - राष्ट्रतिसंमानित

वैद्य शि.वे. राधाकृष्णशास्त्रिणा

*ஸ்ரீ பாஸ்கர்ராயமகி இயற்றிய*

# வரிவஸ்யாரஹஸ்யம்

*ப்ரகாச ஸம்ஸ்க்ருத உரையுடன்*

*ப்ரம்ஹவித்யாரத்ன - தந்த்ர சாஸ்த்ரநிபுண*

*ராஷ்ட்ரபதி ஸம்மானித*

**வைத்ய சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்திரியின்**

தமிழ் விரிவுரையுடன்


*வெளியிடுவோர் :*

**ஸ்ரீ வாஞ்சா கல்பலதா ஸ்ரீவித்யா கணபதி**

உபாஸநா யோகபீடம் - தஞ்சாவூர்

ஸுபானு 2004

*முதல் பதிப்பு : 2004*

*வெளியிடுவோர் :*

**ஸ்ரீ வாஞ்சா கல்பலதா ஸ்ரீவித்யா கணபதி உபாஸநா யோகபீடம்,** ஸ்ரீவித்யா கணேச நிகேதம்,
21, ஸ்ரீநகர், திருநகர், விரிவாக்கம், தஞ்சாவூர்-613009

கிடைக்குமிடம் :
1. வைத்ய **S.V.** ***ராதாகிருஷ்ண சாஸ்திரி***
*22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு,*
*ஸ்ரீரங்கம் - 620 006, திருச்சிராப்பள்ளி*

**Price Rs. 200/-**

Laser Typeset & Printed at
**V.K.N. ENTERPRISES,**
8/1, Dr. Rangachari Road, Mtylapore, Chennai-4, Ph: 24950775.

# श्रीगुरुभ्यो नमः

## गुरुवन्दनम्

वन्दे गुरुपदद्वन्द्वं अवाङ्मनसगोचरम्।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥ १

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम्।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥ २

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काऽप्यन्यतमिका।
मदाराध्य श्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥ ३

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम्।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥ ४

अपारकरुणासिन्धुं ज्ञानदं शान्तरूपिणम्।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥ ५

परित्यज्य मौनं वटाधः स्थितिश्च
व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम्।
मधुस्यन्दिवाचा जनान् धर्ममार्गे
नयन् श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥ ६

नमामि शङ्करान्वाख्यविजयेन्द्रसरस्वतीम्।
श्रीगुरुं शिष्टमार्गानुनेतारं सन्मतिप्रदम् ॥ ७

मद्ब्रह्मरन्ध्रगांभोजकर्णिकापीठवासिनम्।
शिवरूपं मदीयाघगणनाशनतत्परम् ॥ ८

दयार्द्रदृष्टिं स्मेरास्यं वराभय करांबुजम्।
देवीसपर्यारसिकं सद्गुरुं प्रणमाम्यहम्।। ९

तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम।
अनीदृशस्त्वं प्रथितस्तादृशो ते गुरो नमः।। १०

वन्दे वेङ्कटरामार्यं तातमम्बां च शङ्करीम्।
मातामहाग्रजन्मानौ वरुणब्रह्मचारिणम्।। ११

वेदायुर्वेदवेदान्त मुखविद्याप्रदायकान्।
सदाचार्यवरान् वन्दे उपदिष्टप्रसिद्धये।। १२

नमामि शङ्करानन्दं बालामन्त्रोपदेशकम्।
नौमि भागवतानन्दं वक्रतुण्डमनोर्गुरुम्।। १३

कृष्णानन्दं भजे दत्तगिरिवासं गुरूत्तमम्।
वाञ्छाकल्पलताविद्यागणेशक्रमबोधकम्।। १४

शान्तानन्दगणेशार्यसुब्रह्मण्याभिधान्विताम्।
वन्दे गुरुत्रयीं दुर्गाश्रीमन्त्रक्रमसिद्धिदाम्।। १५

महागणेशानन्दाख्य गुरुवर्य प्रसीद नः।
न जाने त्वां योऽसि सोऽसि सुपथा नय भूतये।। १६

गुरुत्रयं परं ब्रह्म परं शिवमथोत्तरम्।
महागणेशं श्रीविद्यागणेशाकृतिमाश्रये।। १७

गुरुवर्य त्वदादेशात्प्रवृत्तो मितधीरपि।
भास्करग्रन्थविवृतौ धिषणाग्रं जुषस्व मे।। १८

உ

# श्रीगुरुभ्यो नमः

# श्रीमात्रे नमः

## அறிமுகம்

என் தந்தை சிமிழி பிரும்மஸ்ரீ. கி. வேங்கடராமசாஸ்திரி அவர்கள் எனது ஆதி குரு. ஸ்ரீமத் ராமாயணமும் ஸ்ரீமத் பாகவதமும் பாராயணத்திற்கு, சிவபஞ்சாயதனம் பூஜைக்கு, பகவன் நாமஸ்மரணத்தில் ஆர்வத்தை வளர்ப்பதற்கான சொற்பொழிவு பின் மாலையிலும் முன்னிரவிலும் என்று வாழ்நாளைக் கடத்திய தந்தையிடம் இளம் வயதில் யஜுர்வேத அத்தியயனமும் காவிய சாஸ்திரபாடங்களும் நிகழ்ந்து, சென்னையில் ஆயுர்வேதத்தில் ஸ்ரீவேங்கட ரமண ஆயுர்வேத கலாசாலையில் பயிற்சி பெற்று ஆயுர்வேத வைத்யனுகத் திருச்சியில் எழுபது வயது வரை இருந்தேன். இளம் வயதில் சாஸ்திரபாடத்தில் தேர்ச்சிபெற, ஒரு மகான் (வருணபிரும்மசாரி என்று அவரை என் தந்தை அழைப்பார்.) ஸ்ரீ வாக்வாதினி மந்திரம் உபதேசித்தார். அந்த மந்திரம் என் கல்வி நாட்களில் வகுப்பில் முதல் மாணவனுக, சிரோமணி பரீக்ஷையில் சென்னை மாகாணத்தில் முதல்வனுக என்னைப் பக்குவப்படுத்தியது. 1955ல் என் நண்பர் கரூர் வைத்ய ஸ்ரீR.V. ராமன் என்னை சிற்றலைவாயில் மடத்தில் தங்கியிருந்த பூஜ்யஸ்ரீ சங்கரானந்தர்களிடம் அழைத்துச் சென்றுர். என் வேண்டுகோளின்படி ஸ்ரீபாலாமந்திரத்தை அவர் உபதேசித்தார். அன்று பெற்ற குருவருள் இன்று வரை அணைத்துக்காத்து வருகிறது. புரச்சரியை, யந்திர விக்ரஹப்பிரதிஷ்டை பூஜாவிதானம் முதலியவற்றில் குருவரரின் துணை பெரிதும் உதவியது. அவரது மறைவிற்குபின் ஹிருஷீகேசத்திலிருந்து வந்து திருவையாற்றில் வசித்து வந்த ஸ்ரீ பாகவதானந்தஸ்வாமிகள் பாலாவின் உபாஸனையை

ஸ்ரீமஹாகணபதியின் உபாஸனையுடன் இணைத்து உபாஸனை விதியைச் சீரமைத்துத் தந்தனர்.

அவரது மறைவிற்குப்பின் என் சாஸ்திரா சார்யரான சென்னை ஸ்ரீ V.H. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் ஸ்ரீதுர்க்காமந்திரத்தையும் ஷோடசியையும் உபதேசித்து கைலாஸ பிரஸ்தாரக்கிரமத்தில் ஸபர்யா விதானத்தையும் தந்தருளினர். ''அவரவர் தன் தன் உபாஸனையால் மட்டுமே தெய்வத்தை உணரமுடியும். அதற்கும் தெய்வ அருள் தேவை. அவரவருக்கெனத் தனி உபாஸனை முறையையும் அமைத்துக் கொள்வது நல்லதே. எது சரியானது என்று வரையறுக்க எவராலும் இயலாது. அதனுல் ''प्रदेहि बुद्धियोगं तं येन त्वामुपयाम्यहम् உன்னருகாமையை அடையத்தக்கவாறு என் அறிவைப் பண்படுத்துவாய்'' எனத்தேவியை அடிக்கடி வேண்டுவாய் என அடிக்கடி சொல்வார். இவரின் மறைவிற்குப்பின் நாமக்கல் அருகே உள்ள சேந்தமங்கலத்தில் தத்தபீடத்தில் இருந்த ஸ்ரீ கிருஷ்ணானந்த அவதூதர், ஸ்ரீ ஹரதத்த சிவாசாரிய ஸம்பிரதாயத்தில் வந்த ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி மஹாமந்திரத்தை உபதேசித்து விடியற்காலையில் அந்த மந்திரத்தால் புஷ்பாஞ்ஜலி செய்யும் முறையிலும் தீக்ஷை செய்வித்தார். இதன் தொடர்பான மந்திர சாஸ்திர பரிசயம் தீவிரமடையப் பெரிதும் உதவியவர் என் ஜ்யேஷ்டஸஹோதரர் ஸ்ரீ. S.V. பாலகிருஷ்ணசாஸ்திரி அவர்கள். அவர் எனக்குச் சிறுவயதில் வியாகரணாசாரியர். ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷரி உபதேசித்து குலவழிவந்த சிவ பஞ்சாயதன பூஜையைத் தொடங்கிவைத்தவர். ஸ்ரீவித்யை உபதேசம் பெற்றவர். இவரது முதுமையில் சாக்த தரிசன கிரந்தங்களை ஆர்வத்துடன் படித்தறிந்தவர். அவரது புண்யபலனுக ஒரு சித்த புருஷரிடம் பரமஹம்ஸ தீக்ஷை வரை பெற்ற ஸ்ரீ குரு ஸ்ரீ வித்யாகணேசானந்த நாதருக்குக் கூட இருந்து வழிகாட்டி வருபவர். ஆழ்ந்த ஸம்ஸ்கிருதபரிசயம் கொண்டவர். சாஸ்திர திருஷ்டியால் பிரயோகங்களை

ஆராய்வதும் அவருடைய இயல்பு. என்னிடமுள்ள வாத்ஸல்யத்தால் ஆராய்வில் எனக்கும் பெரும் பங்குதருவார். ஸபர்யாவிதானத்தில் நல்ல வழிகாட்டி. கணேசஸபர்யையும், ஸ்ரீவித்யாஸபர்யையும், இரண்டும் இணைந்த ஸ்ரீவித்யாகணபதி ஸபர்யையும் பற்றி ஆராய்ந்து தக்க பிரயோகமுறை வகுத்ததில் தீரர். இப்பணிகளில் நானும் ஈடுபட்டேன்.

வரிவஸ்யா ரஹஸ்யம் பற்றி ஆராயநேர்ந்தது. ஏற்கனவே ஸ்ரீ கிருஷ்ணானந்த அவதூதஸ்வாமிகள் இதில் பரிசயம் ஏற்படுத்தியதால், திரிபுராரஹஸ்யத்தின் ஜ்ஞான கண்டத்தைத் தமிழ் உரையுடன் வெளியிடுவது எளிதாகியிருந்தது. என் அண்ணா வரிவஸ்யா ரஹஸ்யத்திற்கு பாஸ்கரராயரின் உரையுடன் தமிழில் விளக்கவுரை எழுதினார். 1995ல் அது முற்றுப்பெற்றது. மேலும் மேலும் அவ்வழியில் இருவரும் ஈடுபட்டோம். அவர் இரு ஆண்டுகளுக்குமுன் ஸ்ரீகுருவிடம் ஹம்ஸதீக்ஷை பெற்றார். வயோதிகத்தாலும் வேறுபலபொறுப்புகளாலும் அந்தத் தமிழுரையைச் சீரமைத்து அச்சிற்கேற்றவாறு அமைக்கும் பொறுப்பை என்னிடம் தந்தார். எனக்கும் இது மிகவும் விருப்பத்திற்குரியது. கருத்து அவருடையது. மொழி அமைப்பு என்னுடையது. ஆம். உள்ளிருந்து புத்தியைத் தூண்டிக் கையில் வலிவாக நின்று காகிதமும் மையுமாகி உருவாக்குபவன் நானாக ஆட்டம் போட்டது தேவிதான். நல்லதைத்தான் செய்வாள். இது தான் நூல்வெளியாவதற்கான சூழ்நிலை.

ஸம்பிரதாயத்தில் ஒரேகுருவிடம் மந்திரதீக்ஷை பெறுவதும் அவரது குருவையும் பரமகுருவையும் பரமகுருவாகவும் பரமேஷ்டிகுருவாகவும் தியானித்து வணங்குவதும் நடைமுறை. எனக்கோ பல குருவரர்கள். ஒவ்வொருவரது குருவும் பரமகுருவும் வெவ்வேறு. ஜபாதிகளுக்குமுன் இவரனைவரையும் தனித்தனியே தியானிப்பது எளிதல்ல.

எனது குரு நாதர்கள் அதற்கு முன்னிருந்த குருவின்பாதையை மாற்றவில்லை. அதில் விளக்கு போட்டு ஒளி மிக்கதாக்கினுர்கள். அதனுல் அனைவரையும் 'குரு' என்ற பாவனையில் தியானம் செய்யலாம். தேவிதானே இந்த குருவரர்களாகி வழிகாட்டினுள் ! குருவாகிய தேவி தேவியாகிய குரு என்று ஸமாஹித சித்தனுக स्वरूपनिरूपणहेतवे गुरवे नमः என பன்மையின்றி ஒரேகுருவாகத் தியானம் செய்யலாம். இதுவும் ஒரு குருநாதர் காட்டியவழி.

குருவே கூடஇருந்து ஸ்வரூப நிரூபணம் திடமானதும் ஸ்வச்சப்ரகாசவிமர்சத்திலும் ஈடுபடுத்தலாமே ! அப்போது அவரே பரமகுருவாகிருர். அவரே தன்னை ஸ்வாத்மாநந்த பஞ்ஜரவிலீன தேஜஸாக உணர்த்திப் பரமேஷ்டி குருவுமாகலாமே ! இப்படியும் தியானிக்கக் குருநாதர் வழி காட்டினுர். தேவியே குருவாக உள்ளாள் என்ற நம்பிக்கையை ''தயமான தீர்க்க நயநா தேசிக ரூபேண தர்சிதாப்ப்யுதயா। வாமகர நிஹித தண்டா பாதி புரஸ் ஸா குரோர் மூர்தி: என்ற சுலோகமனனத்தால் எப்போதும் திடப்படுத்திக்கொள்கிறேன்.

அந்த குருவே அந்தர்யாமியாக, வெளியில் பல தோற்றங்களில் வழிகாட்டுபவராகச் செய்த பிரேரணை தான் இந்த நூலாக வடிவெடுத்துள்ளது. நான்பெற்ற பரிசயத்தைச் சீருடன் திடப்படுத்த, சென்னையிலும் தஞ்சை ஸ்ரீபீடத்திலும் நிகழ்ந்த ஸத்ஸங்கங்கள் உதவின. என் சகோதரர் முன் எழுதித்தந்த உரை அஸ்திவாரமாக, அதன்மேல் இந்தக்கட்டடம் எழுகிறது.

ஸ்ரீபாலகிருஷ்ண சாஸ்திரி தற்போது துறவறமேற்று ஸ்ரீ வித்யா கணேசானந்தநாதரிடம் ஹம்ஸதீக்ஷைபெற்று சாந்தராக ஸமாஹித சித்தராகத் தனது 93 வயதில் ஜபம் தியானம் முதலியவற்றில் ஈடுபட்டுள்ளார். அவரது மனோரதம் நிறைவுறுகிறது. அதில் என்பங்கும் உண்டு என்ற மனநிறைவு பூர்ணமாக உள்ளது. இன்று அவர் ஸ்ரீபாலஹம்ஸா நந்த நாதர்.

பாஸ்கரராயர் - இவர் வரிவஸ்யா ரஹஸ்யத்தின் ஆசிரியர். அதன் உரையாசிரியரும் இவரே. இவரது தந்தை கம்பீரராயர். பீஜாபூர் (விஜயபுரம்) ஸுல்தானின் அரசவையில் புகழ்மிக்க ப்ரதானி. கோனமாம்பா அவரது மனேவி. பாஸ்கர ராயர் அவரது இரண்டாவது புதல்வர். இவரைக் கருவுற்றிருக்கும்போது இவரது தாய் ஸூர்யனைத் தினமும் வழிபட்டு, சிறந்த அறிவாளியான மகன் பிறக்க வேண்டினுள். அக்னி ஹோத்ரம் - ஸூர்ய உபாஸனையில் மிகவும் ச்ரத்தையுடன் ஈடுபடுகிற குலம் அது.

கம்பீரராயர் அரசனின் வேண்டுகோளுக்கிணங்கி மஹாபாரதத்தை அரசவையில் விளக்கிவந்தார். அரசன் அவரைப் பாராட்டிப் 'பாரதீ' என்ற பட்டத்தை வம்சவழியாகத் துலங்கும்படி அளித்தார். கம்பீரராய பாரதீ என்ற பட்டப் பெயர் துலங்க அவரை அழைப்பர். பாஸ்கரராயருக்குத் தந்தை பாலியத்திலேயே ஸரஸ்வதீ மந்திரத்தை உபதேசித்து ஸரஸ்வதீ மந்திரத்தை ஜபித்து ப்ராஹ்மீச் செடியை மந்திரித்துத் தந்து மேதா சக்தியை மேலும் வளர்த்தார்.

பாஸ்கரராயர் பிறந்தது பாகாநகரம் என்கிற ஹைதராபாத்தில். காசியில் உபநயனம் நடந்தது. தன் குலத்து வேதமான ருக்வேதத்தைக் கற்று பின் ஆந்திரத்தில் ப்ர சித்த வித்வானுன ந்ருஸிம்ஹாத்வரியிடம் எல்லா தரிசனங்களேயும் கற்ருர். அவரை நரஸிம்மராகவே உணர்ந்தார். இந்நூலின் மங்கள ச்லோகமும், தன் குருநாதரையும், நரஸிம்ஹரையும் சேர்த்து வணங்குவதாகவே அமைந்துள்ளது. தனது குருவென இவரை மட்டும் தனது நூல்களின் தொடக்கத்திலும் இறுதியிலும் வணங்குகிருர். ருக்மண்ண பண்டிதர் என்பவரிடம் சந்தஸ் - அலங்கார சாஸ்திரங்களேக் கற்ருர். திருவாலங்காட்டைச் சேர்ந்த மஹாவித்வானுன கங்காதர வாஜபேய யாஜியிடம் நவ்ய தர்க்கம் கற்றுத் தேர்ந்தார். சிறு வயதிலேயே மிகவும் கற்றறிந்த வித்வானுகப் புகழ்

பெற்றார். சிறந்த அத்வைதி. ஆதிசங்கர பகவத் பாதர்களிடமும் அப்பைய தீக்ஷிதர்களிடமும் ஆழ்ந்த பக்தி. தன் நூல்களில் இவ்விருவரின் கொள்கைகளைத் திறம்பட விளக்கி மிக உயர்வுடன் பாராட்டுபவர். தான் விளக்க விருக்கிற சாக்த தர்சனக் கொள்கைகளுடன் அவை முரண்படாததைத் தக்கவாறு நிரூபித்து அத்வைதத்திற்கு அவை முரண்பட்டவையல்ல என்பதை விளக்குகிறார். விவர்த்த-பரிணாமக் கொள்கை விளக்கத்தில் ஒன்றுக்கு மற்றொன்று துணை நிற்பதைக் காட்டுவார். வித்வான்களுடன் வாதிட்டுத் தன் கொள்கைகளை நிலைநாட்டுவதில் பெருந்தீரர்.

இவரது மூத்த மனைவி ஆனந்தீ. அவளிடம் பாண்டுரங்கன் என்ற புதல்வன் உண்டு. அவரும் பெரும் அறிவாளியே.

ஸூரத்தில் வஸித்த சிறந்த ஸ்ரீ வித்யோபாஸகரான சிவதத்த சுக்லரிடம் ஸ்ரீ வித்யையில் தீக்ஷை பெற்றார். பாஸுராநந்த நாதர் என்று அவருக்கு தீக்ஷா நாமம். கடுந்தவமாக நியமங்களுக்கு உட்பட்டு ஸ்ரீ வித்யையில் ஸித்தி பெற்றார். சிறந்த சிவபக்தரும் கூட. தன் மனைவி ஆனந்தியையும் ஸ்ரீ வித்யையில் தீக்ஷை பெறச் செய்து உபாஸனையில் அவரது துணையுடன் தீவிரமாக இயங்கினார். ஆனந்தியின் தீக்ஷாநாமம் பத்மாவதீ என.

ஸ்ரீ சிவதத்த சுக்லரது சாக்தாத்வைதக் கொள்கையை எதிர்த்து வாதிடவந்த வல்லபாசார்யரை குருவின் ஆணையால் எதிர்த்து வாதிட்டு வென்றார். அவரைத் தொடர்ந்து வந்த மத்வ மதத்தைச் சார்ந்த ஸன்யாஸி வாதிட அழைக்க, வாதிட்டு வென்று பந்தயத்தில் வென்றதற்குப் பணயமாக அந்த ஸன்யாஸியின் உறவினர் மகளான பார்வதியை மணந்தார்.

அழிவுறுகிற நிலையிலிருந்த அதர்வ வேதத்தைக் கற்று நல்ல சிஷ்யர்களுக்குக் கற்பித்து அதனை வழக்கில் விரிவு படுத்தினார். தேவீ பாகவதம் மறைகிற

நிலையிலிருந்தது. ஸ்ரீமத் ராமாயணத்தின் எட்டாவது காண்டமான அத்புத காண்ட (அத்புதராமாயணம்) ப்ரசாரமற்றிருந்தது. இவ்விரண்டையும் ப்ரகாசத்தில் கொணர்ந்தார்.

சிவாஜியின் பேரன் சாஹுஜியின் படைத் தலைவர், தஞஜி யாதவர். அவரது மகன் சந்திரஸேன யாதவருக்கு பிள்ளைப் பேறில்லாதிருந்து இறைவனை வேண்டிப் பிறந்த மகன் நபும்ஸகனாக இருந்தான். க்ருஷ்ணா நதிக்கரையில் ஸூர்யனை 'த்ருசாகல்ப' வழிபட்டால் வழிபட்டு அவனை ஆண் மகனாக்கியதற்காக 'ஹ்ரதம்' என்ற ஊரை சந்த்ரஸேனன் இவருக்கு மானியமாக அளித்தான் என்பர்.

காசியில் முறைப்படி ஸோமயாகம் செய்தார். ஸ்ரீவித்யாஸபர்யாமுறையில் மஹாயாகக்ரம முறையில் தேவியை வழிபட்டார். தேவி இவரது தோளில் அமர்ந்து அறிஞர்களின் ஐயத்தைக் களைந்தாள். ஸன்யாஸிகளும், உபாஸகர்களும் வியந்து இவரைப் பாராட்டினார்கள்.

காசியில் சக்ரேசர் ஆலயத்தையும், மூல ஹ்ரதத்தில் பாண்டுரங்க ஆலயத்தையும், கொங்கணத்தில் கம்பீரநாதர் ஆலயத்தையும், ராமேச்வரத்தில் வஜ்ரேச்வரர் ஆலயத்தையும் புதுப்பித்து வழிபட்டார். இவரது மனைவி ஆனந்தி இவருக்கு தஞ்சை அரசரால் மானியமாக அளிக்கப் பெற்ற பாஸ்கரராஜ புரத்தில் உள்ள சிவாலயத்திற்கு மதிற் சுவர் எழுப்பிப் புதுப்பித்தாள். ஸந்நதியில் தன் குல தெய்வமான சந்த்ரலாம்பாவிற்குக் கோவில் கட்டினார். பாரதம் முழுவதும் சுற்றிவந்த இவரை அரசர்களும், சிற்றரசர்களும் பெரிதும் கௌரவித்தனர்.

தன் வாழ்நாளின் இறுதியைப் பாஸ்கரராஜ புரத்தில் தங்கி, அடுத்த ஊரான திருவாலங்காட்டில் வாழ்ந்த தனது ந்யாய சாஸ்திர குரு கங்காதர வாஜபேயயாஜி அவர்களுடன் மீண்டும் சாஸ்திர ஆராய்ச்சியில் தொடர்பு கொண்டார். தம் வாழ்நாளின் இறுதியைப் பிரசித்த முக்தி க்ஷேத்ரமான திருவிடை மருதூரில் கழித்தார்.

சிறந்த தீக்ஷை பெற்றவரானதால், தன் குருவைத் தவிர மற்றவரை வணங்க இயலவில்லை. அதனை அறியாத ஸன்யாஸி ஒருவர் தான் அடிக்கடி அவ்வழியே செல்லும் போது க்ருஹஸ்தரான பாஸ்கரராயர் தன்னை எழுந்து நின்று வரவேற்காததும், வந்தனம் செய்யாததும் கண்டு குறை கூறினார். தம் தீக்ஷை நியமத்தைக் கூறியும் ஒப்புக் கொள்ளாத அந்த ஸன்யாஸியின் தண்டத்தையும், கமண்டலுவையும் அவரிடமிருந்து பெற்று இவர் வணங்கினார். அவை நொருங்கிவிட்டன. சன்யாஸி உண்மை அறிந்தார். உலகவழக்கை ஒட்டித் துறவியை மதிப்பது கடமை என உணர்ந்த பாஸ்கரர், தன் தீக்ஷை நியமத்தையும் உணர்ந்து ஸன்யாஸி அவ்வழியே செல்லும் போது வீட்டினுள் சென்று விடுவார்.

இவரது ஜீவிய வரலாறு இவரது சிஷ்யரான ஜகன்னாத கவியால் 113 ச்லோகங்கள் கொண்ட ஸ்ரீ பாஸ்கரவிலாஸ காவியமாகத் தொகுக்கப்பட்டுள்ளது. ஜகன்னாதரே இவரிடம் சிஷ்யராகி ஸ்ரீ வித்யை தீக்ஷை பெற்று உமாநந்த நாதர் என்ற தீக்ஷா நாமத்துடன் ஸ்ரீ வித்யை வழியில் தேவியை வழிபடும் முறையை நித்யோத்ஸவம் என்ற நூலில் தொகுத்துள்ளார். குருவிடம் காட்டி அனுமதி பெற்று வெளியிட்டதாகக் கூறுவர். இவர் வாழ்ந்த காலம் கி.பி. 1670-1750த்திற்கு இடையே. இவரது நூல்கள் சிலவற்றில், தான் அவற்றை இயற்றிய காலவரையைக் குறிப்பிட்டுள்ளார். லலிதா ஸஹஸ்ரநாம உரை நிறைவு, ஸம்வத் 1785 காலயுக்த ஆச்விந சுக்ல நவமியில். ஸேதுபந்தம் சக 1655ல் சிவராத்திரியன்று. குப்தவதீ என்ற ஸப்தசதீடிகை சிதம்பரத்தில் ஸம்வத் 1797 ப்ரமோத ஆண்டில் (இவை நிகழ்ந்தது கி.பி 1728—1741 கால வரையில்.

இவரது நூல்களில் புகழ்பெற்றவை - ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம உரை **ஸௌபாக்ய பாஸ்கரம்**, ஸ்ரீ கணபதி ஸஹஸ்ரநாம உரை **கத்யோதம்**, பாவநோபநிஷத் பாஷ்யம், கௌள உபநிஷத் பாஷ்யம், திரிபுரோபநிஷத்

பாஷ்யம், துர்கா ஸப்த சதியின் உரை **குப்தவதீ,** வாமகேசுவர தந்திர உரை **ஸேது பந்தம்,** சிவாஷ்டோத்தர சதநாம உரை, இந்த வரிவஸ்யா ரஹஸ்யமும், அதன் உரையும், சிவதண்டகம் முதலிய மந்த்ர - தந்த்ர - சாஸ்த்ர நூல்கள்.

வாத குதூஹலம் என்ற மீமாம்ஸா தர்சன நூல், தன் குரு ந்ருஸிம்ஹாத்வரியின் குமாரர் ஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரியுடன் நிகழ்த்திய வாதத்தின் ஸாரமடங்கியது. வரதராஜரின் லகு ஸித்தாந்த கௌமுதீயின் உரை ரஸிக ரஞ்ஜனி, நியாய மண்டனம் என்ற நியாய சாஸ்திர நூல், சந்தோ பாஸ்கரம், சந்த: கௌஸ்துபம், விருத்த சந்த்ரோதயம் என்ற பிங்கள ஸூத்திரத்தை ஒட்டிய சந்தஸ் சாஸ்திர நூல்கள், வேறு பெயரளவில் மட்டும் உலகமறிந்தவை 30க்கும் மேற்பட்ட நூல்கள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யமும், கணபதி ஸஹஸ்ரநாம பாஷ்யமும், ஸேது பந்தமும் என்றும் இவரை நிகரில்லாத பரம பூஜ்ய வித்வான்என்ற நிலேயில் வைத்து மகிழச் செய்பவை. வரிவஸ்யா ரஹஸ்யத்தில் சாக்த தந்த்ரங்களில் உள்ள ஸ்ரீ வித்யை உபாஸனேயில் கடைபிடிக்கத்தக்க ரஹஸ்ய முறைகளேத் தொகுத்துள்ளார். தானே அதற்கு ப்ரகாசம் என்ற உரை எழுதி விளக்கமும் தந்துள்ளார். ப்ரகாச உரை அவரது மூல நூலுக்குத் திறவுகோல்.

**வரிவஸ்யா ரஹஸ்யம்** :- வரிவஸ்யா, சுச்ரூஷா, பரிசர்யா, ஸபர்யா, உபாஸனு என்று தன்னே விடப் பெரியவர்களுக்கு அன்பும், பணிவும், தன்னிடம் தாழ்வெண்ணமும் பெரியவரிடம் உயர்வெண்ணமும் பரிமளிக்கச் செய்கிற பணிவிடையைக் குறிப்பிடுவர். **சுச்ரூஷா** - பெரியவரது சொல் மதித்துக் கேட்டு, அதன்படி நடந்து அன்பைக் காட்டுவதாகும். **பரிசர்யா** - துணேயாக அவரது செயலில் கூட இருந்து உதவுவது. **ஸபர்யா** - அவர் மேலானவர் என்று கருத்துடன் அவரை அணுகி அண்டி

வழிபடுவதாகும். **வரிவஸ்யா - வரிவஸனம்** முன் கூறியதனைத்தும் அடங்கியது.

''அவன் அருளால் அவன் தாள் பணிந்து'' என்பர். இறைவனுக்குப் பணி புரிவதும் இறைவனின் அருளால் தான். அந்த அருள் பெற அவனுக்குப் பணி செய்து கிடப்பதே வழி. விக்ரகத்திலோ, சித்திரத்திலோ அது உலோகம், அது காகிதமும் வர்ணமும் என்ற நிலை மறந்து அதனைத் தெய்வமாக உருவகப் படுத்துவது அவச்யம். தன் குழந்தையின் சித்திரத்தைக் கூட அன்பும் உயிரும் கொண்டதொன்ருகக் கண்டால்தான் அதனை மகிழ்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருக்க முடியும். காகிதமாகப் பார்த்தால் கசக்கி எறிந்துவிடத் தோன்றும்.

பாஸ்கரராயர் இதனை அழகாக விளக்குகிருர் :—

**देवी बुद्धिः, बुद्धिर्देवी सर्वस्य बुद्धिरूपत्वात् ।**
**देवी शक्तिः, शक्तिर्देवी सर्वस्य शक्तिरूपत्वात् ॥**
**बुद्धया शक्त्या च कृतं सर्वं देवीकृतं नूनम् ।**
**इत्थं बुद्धया विद्यारूपिण्यां अर्पयामि सर्वमहम् ॥**

''தேவிதான் என் உள்ளுணர்வு. என் உள்ளுணர்வே தேவி. அவள் தானே எதனையும் உணர்கிற ஆற்றலாக உள்ளிருப்பவள். தேவியே எனது ஆற்றல். ஆற்றலே தேவிதான். எதனுள்ளும் ஆற்றலாக இருப்பவள் அவள்தானே. அதனுல் உள்ளுணர்வாலும், ஆற்றலாலும் செய்ததனைத்தும் அவள் செய்ததே. இதனை இவ்வாறு உணர்த்துபவளும் அவளே. எல்லாம் அவள் செய்வதே என்ற உணர்வுடன் செய்ததனைத்தையும் அவளிடம் அர்ப்பணம் செய்கிறேன்.'' பாஸ்கரர் உள்ளம் நிரம்பி இதனைக் கூறுகிருர்.

''அஹம் ப்ரம்ஹ அஸ்மி'' நான் பிரும்மமாக இருக்கிறேன்'' என்ற உணர்வைப் பெற தேவியை வழிபட வேண்டும். அவ்வாறு வழிபட, ''பிரும்ஹ அஹம்

அஸ்மி'' பிரும்மம் நானுக இருக்கிறேன்'' என்ற உணர்வும் வரும் என்பார் என் குரு. ஒருவன் தேவியை வழிபடுமுன் தெய்வத்தைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்ட தன்னிடம் அந்த தெய்வத்தன்மை உட்புகுந்தால் தான் தெய்வத்தைத் தியானத்தாலும் ஜபத்தாலும் அணுக முடியுமென்று ஆர்வத்துடன் உள்ளத்தில் தேவியைத் தியானித்து உடலின் ஒவ்வோர் பகுதியிலும் அவளது மந்திரப் பகுதியைச் சொல்லித் தொட்டு, அவள் உட்புகுந்து விட்டதாக உணர்ந்து, அவளை இதய கமலத்தின் நடுவிலிருந்து மூச்சு வழியே வெளிக் கொணர்ந்து வழிபாட்டிற்கான விக்ரஹம் மற்றும் யந்திரத்தில் அமர்த்தி உணர்வுள்ளதும் ஸூக்ஷ்ம உடல் உருவகம் கொண்டதுமாகப் பாவனை செய்து ஆஸனத்தில்அமர்த்தி அன்புடன்திருவடி அலம்புதல் (பாத்யம்) தொடங்கி உபசாரம் (பணிவிடை) செய்கிறான். எங்கும் எல்லாமாயும் எப்போதும் உள்ளதான தேவியை வழிபடுகிற விக்ரஹத்தினுள் காண முடிவதற்கு அவள் எல்லாமாயும் எங்கும் எப்போதும் இருப்பதே தான் காரணம். அதனுல் என்னைப் போன்ற பலரது வழிபாட்டையும் அவள் ஏற்கிருள். அவள் அவ்வாறு ஏற்கிருள் என்ற பாவனை என்னிடம் இல்லாவிடில் செய்ததனைத்தும் குழந்தை விளையாட்டாகிவிடும். பித்தனின் செயலாகும்.

**புழு-மனிதன் - ஸித்தன்-** தான் ஈன்ற தொன்றையே பசியைத் தணிக்க உட்கொள்கின்ற உயிரினம் உண்டு. அவை உடலால் வாழ்பவை. மனிதன் மனத்தால் வாழ்பவன். அதனுல் தான் காண்கிற பொருளின் வெளித் தோற்றத்தை மட்டும் மதிக்காமல் அதனுள்ளே தான் உணர்கிற சிறப்பையும் மதிப்பான். மனத்தால் மதிப்பதிலும் கண்ணும் காதும் குறுக்கிட்டுத் தவருக மதிக்கச் செய்யக் கூடும் என்ற கருத்தில் பகுத்து உணர்கிற புத்தியால் வாழ்வான். அதிலும் முன் செய்த பல செயல்களின் பின் விளைவைக் கண் முன் நிறுத்தித்

தராதரத்தை உணர்த்துகிற வாஸனையின்- ஸம்ஸ்காரத்தின் இருப்பிடமான சித்தத்தால் ஆராய்ந்து செயல் புரிவான். பணிபுரிபவனுன தான் தனிப்பட்டவன் என்ற இறுமாப்பு (அஹங்காரம்) அவனைக் கட்டுப்படுத்தும். அந்தத் 'தான்','அஹம்' என்பதையும் எல்லா 'அஹம்' 'பர அஹம்' உடன் இணைத்து அதன் நோக்கில் தனது காட்சிப் பொருளை மதிப்பிடுவான். அவனே ஸித்த புருஷன். மனிதனை மனிதனுக பெரும் மனம் படைத்தவராக பேரறிவாளராக,பேராற்றல் மிக்கவராக பண்படுத்தி, தன்னை இவ்வாறு நிலைகளில் மேன்மேலும் உயர்த்துகிற ஏதோஒன்று தன் உள்ளமர்ந்து ஊக்குவித்து (தியோ யோ ந: ப்ரசோதயாத்) உருவாக்குகின்றதே, அந்த தத்துவம் தான் தேவி என்ற பிரம்மம். முன் கண்ட நீசச் செயல் புரிகிற உயிரினத்திடமும் அதுவே இயல்பாக உள்ளது. மாபெரும் வீரனுன ஸித்த புருஷனிடமும் அதுவே இயல்பாக உள்ளது. அந்த இயல்பை உணர்கிற- மதிப்பிடுகிற - மதிப்பைப் பயன்படுத்தி தன் நிலையை உயர்த்துகிற அந்த இயல்பாகவே மாறுபவன் தான் ஸித்தன்.

மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற நான்கையும் அவை பாய்கிற மடைமாற்றி, வெளி நாட்டத்தில் மதிப்பைக் குறைத்து, உள்ளே துலங்குவதில் மதிப்பைக் கூடச் செய்யவே இந்த வழிபாடு. தன் மனம் முதலியவை வழிபாட்டில் ருசி கொள்ளுமா ? அவற்றை இதமாக அணுகினுல் அவற்றின் பாதையை உள் நோக்கித் திருப்ப முடியும் என்கிருர் சங்கர பவத்பாதர் தனது திரிபுர ஸுந்தரீ வேதபாத ஸ்தவத்தில்.

முதலில் தன் புத்தியைத் தேவியின் பால் திருப்புகிருர்-

मन्दा निन्दालोलुपाऽहं स्वभावात्
एतत्स्तोत्रं पूर्यते किं मयेति ।
मा ते भीतिर्हे मते ! त्वादृशानां
एषा नेत्री राधसा सूनृतानाम् ॥

*புத்தியே! ''நான் சுறுசுறுப்பற்றவள், மழுங்கியவள், இயல்பாகப் பிறரிடம் குறை காணப்பழகியவள். தேவி பாராட்ட வேண்டியவளாயிற்றே ! என்று ஏன் தயங்குகிறுய் ? பயமேன் ? உள்நோக்கித் திரும்பு ! உன்னைப்போன்றவரை இனிய நற்பாதையில் அழைத்துச் செல்கிற தேவி உன் பின் உள்ளாளே !*

कर्णाकर्णय मे तत्त्वं या चिच्छक्तिरीर्यते।
त्रिर्वदामि मुमुक्षूणां सा काष्ठा सा परा गतिः ॥

*பேரறிவாகிய ஒரு சக்தி உள்ளது. அது தான் அடையவேண்டிய எல்லை. அதற்கான பெருவழியும் அதுவே ! காதே ! இதை நீ உள் வாங்கிக்கொள்.*

ललितेति सुधापूरमाधुरीचोरमम्बिके।
तव नामास्ति यत्तेन जिह्वा मे मधुमत्तमा ॥

*இனியவளே! (இனிப்பிற்காகப் பொருள்களை நாடி அலுத்துப்போன) என் நாக்கு அமுதத்தின் இனிப்பைக்கவர்கிற உன் பெயரைச் சுவைத்து மிகமிக இனியதை அடைந்துவிட்டது.*

अन्ते वासिन् अस्ति चेत्ते मुमुक्षा
वक्ष्ये युक्तिं मुक्तसर्वैषणः सन्।
सभ्यः साक्षात्सुन्दरीं ज्ञप्तिरूपां
श्रद्धाभक्तिध्यानयोगादवेहि ॥

*''உள்ளத்தில் அமர்ந்துள்ள ஜீவனே ! உனக்கு இந்தக் கட்டிலிருந்து விடுபடவிருப்பமுள்ளதா ? ஒரு யுக்தி கூறுவேன் ! மனைவி மக்கள் செல்வம் உயிர் என்று பலவற்றை நாடுவதை விடு. பெரியோர்களை அணுகு. உள்ளுணர்வாகிய ஓர் அழகி உன்னிடமே உள்ளாள் என்பதை அவர்களிடமிருந்து தெரிந்து கொள். பின் ஆர்வமும் அன்பும் அவளைப்பற்றியே நினைப்பும் கொண்டு அணுகு. அவள் கிடைப்பாள். அதுவே முக்தி.*

रे रे चित्त त्वं वृथा शोकसिन्धौ
मज्जस्यन्तः वच्मि उपायं विमुक्त्यै।
देव्याः पादौ पूजयैकाक्षरेण
तत्ते पदं सङ्ग्रहेण ब्रवीमि ओमित्येतत्॥

அடே ! சித்தமே ! நீ வீணே சோகக் கடலில் மூழ்கிறாய். விடுபடுகிற யுக்தி கூறுகிறேன். தேவியின் திருவடிகளை ஏகாக்ஷரமந்திரத்தால் வழிபடுவாய். இது சுருக்கமான வழி. அந்த ஓர் எழுத்து ஓம் என்பதுதான்''

இவ்வாறு உள்ளத்தையும் கரணங்களையும் உற்சாகத்துடன் வழிபாட்டில் ஈடுபடத்தூண்டுகிற முறை பகவத்பாதர்களின் திரிபுரஸுந்தரீமானஸபூஜா ஸ்துதியிலும் சதுஷ்ஷஷ்டியுபசார பூஜா ஸ்துதியிலும் காணப்பெறுகிறது. இவற்றைக் கூறுகிற போது எளிதாகத் தோன்றுவது செயல்படும் போது மிகக்கடினமாகிறது. பழகப்பழகத் தான் அவை எளிதாகும்.

மந்திரம் என்றவுடன் இருவழிகள் புலப்படும். ஒன்று வைதிகம். மற்றொன்று தாந்திரிகம். தாந்திரிகம் என்றவுடன் வேத முறைக்கு முரணானதென்ற சிந்தை எழும். பகவத் பாதரின் சதுஷ்ஷஷ்டி உபசாரத்துதியில் இரண்டும் ஒன்றுக்கொன்று துணை நிற்பவை என்று அறிமுகப்படுத்துகிறார்.

मन्त्रान्वैदिकतान्त्रिकान् परिपठन् सानन्दमत्यादरात्
स्नानं ते परिकल्पयामि जननि स्नेहात्त्वमङ्गीकुरु।

**தந்திரங்கள்**- மந்திரம், தந்திரம், யந்திரம் என மூன்று உண்டு. மந்திரமானது தெய்வத்தையும் நம் உள்ளத்தையும் இணைப்பது. தந்திரமானது அந்த இணைப்பிற்கான செயல்முறை. யந்திரமானது அந்த இணைப்பை எளிதாக்குகிற இடம். இந்த மூன்றையும் ஒருங்கே விரிவாக விளக்குபவற்றை தந்திரங்கள் என்பர்.

**காயத்ரீ-ஸ்ரீவித்யை-** வரிவஸ்யா ரஹஸ்யத்தில் விளக்கம் பெறுபவை தந்திரங்கள் விளக்கிய வழிபாட்டுமுறைகளே ! அம்முறைகள் அனைத்தும் வேதத்தில் மறைமுகமாகக் கூறப்பெறுபவையே. தந்திரங்களுக்கும் ஆதரவு நூல்கள் பதினான்கு அல்லது பதினெட்டு வித்யாஸ்தானங்களே. அவற்றில் முதலில் இடம் பெறுவது வேதமே. வேதத்தின் ஸாரமே காயத்ரீமந்திரம் தான். ஒவ்வொரு வேதத்திலிருந்து ஒவ்வொரு பாதமாக மூன்று பாதங்கள் கொண்டதாக காயத்ரீ அமைந்துள்ளதென்பார் மனு. நான்காவது வேதத்திலிருந்து எடுக்கப்பெற்ற நான்காவது பாதத்தை இன்று த்ரிபதா காயத்ரியில் தேர்ந்தவர்களே கூறுவர். அது மஹாவாக்யங்களின் பொருள் கொண்டது. இந்த நான்கு பாதங்கள் கொண்ட காயத்ரியே ஸ்ரீவித்யையின் வெளி உருவம் மந்திர நிலையில் ஸ்தூல உருவம். ஸூக்ஷ்ம உருவம் ஸ்ரீவித்யை. சிறுவயதில் உபநயனம் செய்விக்கும் போது, காயத்ரியுடன் பாலா மந்திரத்தையும் வந்தனமந்திரமாக உபதேசிப்பது சிலரின் வழக்கில் உள்ளது. காயத்திரிக்கும் ஸ்ரீவித்யைக்கும் உள்ள தொடர்பை இது விளக்கும்.

**வரிவஸ்யா-வழிபாடு-** வழிபாடு இருவகைப்படும். வெளிப்படையான உபசாரங்கள் மூலம் வெளிக்காட்சிப் பொருளான விக்ரஹம் முதலியவற்றில் செய்யப்படுவது **பாஹ்ய வரிவஸ்யை**யாகும். மந்திரஜபம், பாவனை, தியானம் முதலியவற்றைக் கொண்டது **ஆப்யந்தர வரிவஸ்யை-** உள்ளத்து வழிபாடாகும்.

இரண்டிலும் உள்ளமும் உடலும் வெளிப்பொருளும் எண்ணங்களும் உதவுவதால் ஒன்றுக் கொன்று உதவுபவையே. ஒரு பெண்ணை மனைவியாகப் பார்ப்பது - ஸ்தூல ஸூக்ஷ்மக்காட்சிகளடங்கியதே. ஒரு பொருள், மனித இனம், பெண், தன்னை மணந்தவள், தன் குழந்தைகளுக்குத்தாய் என்றவாறு பலபடிமங்கள் மனைவி என்றபொருளில் மதிக்கப்படுகின்றன.

எந்தக்காட்சியும் தவிர்க்கமுடியாது. மனைவி என்ற வெளிப்பொருள் நிலையைவிட கணவனின் உள்ளத்துள் பதிந்துள்ள உருவகமே இதில் முக்கியமாகிறது. ஆனால் அந்த உருவகம் பதிய, பலபயிற்சிகளும் காலமும் தேசமும் மனைவியும் பலவகைகளில் உதவநேர்கிறது. தெய்வவழிபாட்டிலும் இத்தனைபடிமங்கள் அவசியமே.

தான் வணங்கி வழிபடவே விக்ரஹத்தை நாடுகிறான். விக்ரஹமும் அழகானது. மதிப்பால் உயர்ந்தது. அதனுள் அழகிய தெய்வத்தைக் காண்கிறோம். அதுபித்தளையாலானதானாலும் மண்ணும் புளியும் சாம்பலும் கொண்டு கீழேபோட்டுத் தேய்க்காமல், பாலும் தயிரும் பழரஸமும் கொண்டு சொகுசுடன் நீராட்டி அலங்கரித்துக் கண்டு மகிழ்கிறோம். பித்தளை-பித்தளையாலான உருவம் என்பதை மறந்து குழந்தையைக் குளிப்பாட்டுவது போல் அன்பும் கரிசனமும் துலங்க நீராட்டுகிறோம். ஏதோ ஒரு சைதன்யம் உள் துலங்குவதை, நேரில் காண இயலாவிடிலும், இருப்பதாக உணர்கிறோம். ஸ்தூல விக்கிரஹத்திலும் ஸூக்ஷ்மமானதொன்றையே வழிபடுகிறோம். பித்தளை கை, கால், முகம் என்று கண்கள் கண்ட உருவம் மறையும்போது, சைதன்யமுள்ள மனத்தால் உருவகப்படுத்திய உருவத்தை உணரமுடிகிறது. அப்போது அந்த தெய்வம் வெளியே ஆஸனத்தில் இல்லை. உள்ளத்தில் வெளியே உள்ளதைவிட அழகான உருவத்துடன் பதிகிறது. ஸ்தூல வழிபாடே ஸூக்ஷ்ம வழிபாடாகிறது.

ஸ்தூல-ஸூக்ஷ்ம உருவங்களின் எல்லைக்கோடு மறைகிறது. உள்ளத்திலுள்ளதையே வெளியில் காண்கிற பழக்கம் அதிகமாக யந்திரம், லிங்கம், பிண்டீ முதலிய உருவமற்ற பொருளிலும் உள்ளம் கண்ட உருவத்துடன் காணமுடிகிறது. இது ஸூக்ஷ்ம வழிபாடு. ஆப்யந்தர வரிவஸ்யா.

ஆப்யந்தரவரிவஸ்யையில் மற்றொரு விசித்திரம் உண்டு. வெளியே உள்ளது காமாக்ஷியின் விக்ரஹம். அதனை லலிதாஸஹஸ்ரநாமாவளியால் அர்ச்சனை செய்கிறோம். **ஸிந்தூராருணவிக்ரஹாம்** என்ற தியான சுலோகப்படி தியானம் செய்கிறோம். தேவியின் வடிவம் இருகைகளுள்ளதாக மாறுகிறது. **அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம்** என்ற சுலோகத்தைக்கூறி தியானிக்கிறோம். எல்லா ஆவரணதேவதைகளும் ஒளிவடிவில் புடைசூழ நான்குகைகளுள்ளவளாக தேவிமாறுகிறாள். வெளியேயுள்ள பொருளைச் சிறிதும் சாராமல் உள்ளம் காண்கிற விசித்ரங்கள் இவை. மூகபஞ்சதசியில் நீதான் துர்கை, நீதான் வாக்தேவி, நீதான் லக்ஷ்மி, நீதான் குமாரி என்று மூகர் ஒவ்வொரு சுலோகத்திற்கும் ஒருவிதமாகக் காமாக்ஷியை உருவகப்படுத்துகிறார். அவர் காண்கிற காட்சிகள் அவை. அந்த தேவியை வாஸனாமயீ, பாவனாமயீ என்றெல்லாம் வகைப்படுத்துவர். மனம் கண்ட உண்மைக் கோலங்கள் அவை.

மந்திரங்கள் மூலம் ஜபம் செய்யும் போதும் தனித் தனி அக்ஷரவடிவிலும் அக்ஷரஸமஷ்டிவடிவிலும் அவ்வக்ஷரங்களின் பொருள் வடிவிலும் காதும் வாயும் உள்ளமும் அவளிடம் காண்கிற வடிவங்கள் எண்ணற்றவை.

**சொல்லும் பொருளும்**- சொல்லும் பொருளும் எப்போதும் முழுவதும் இணைந்தவை. சொல்லின் பகுதிக்கும் மொத்தத்திற்கும் அதே பொருள் தான். பொருளின் பகுதியையும் மொத்தத்தையும் சொல்லின் ஒவ்வொரு பகுதியும் மொத்தமும் கூறுபவை. சொல்லும் பொருளும் இணைவதை பார்வதி-பரமேச்வரர்களுடன் ஒப்பிடுவர். பார்வதி-பரமேச்வரர்களின் இணைப்பைச் சொல்- பொருளிணைப்புடன் ஒப்பிடுவர். இந்த இணைப்பைப்பற்றிப்பல கற்பனைகள் உண்டு. சிவனின் இடப்பகுதியில் பார்வதி நிற்பாள். சிவனது இடது

தொடையில் அமர்ந்திருப்பாள். சிவனின் இடப்பகுதியை - பாதியை பார்வதியாகக் காணலாம். சிவனுகிய பளிங்குவிக்ரஹத்தினுள்ள செம்மையாகப் பார்வதி ஊடுருவி நிற்பாள். பார்வதியே தெரியாத-அவளை உள்ளடக்கிய தக்ஷிணா மூர்த்தி ரூபிணியாவாள். சிவனே அடையாளம் தெரியாத சிவனை உள்ளடக்கிய காமாக்ஷியாவாள். இவை அனைத்தும் **வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ** என்ற பாவனுமயமான வடிவம். பாவனை என்பது உள்ளம் கொள்கிற நிலை. கற்கண்டைச் சுவைத்துச் சுவைத்து நாக்கே கற்கண்டாக இனிக்கிற நிலைஇது. இந்நிலை எந்தச் சொல்லாலும் ஹாவ பாவங்களாலும் விளக்கமுடியாதது. ரஹஸ்யமாக, தான்மட்டும், உணர்கிற உணர்வாக அனுபவிக்க முடிவது.

ரஹஸ்யம்- தன்னுல் மட்டும் உணரக்கூடியது. தன்னுலும் சொல்லாலும் மற்றவற்ருலும் பிறருக்கு உணர்த்த முடியாதது. அரசியலில் ரஹஸ்யமுண்டு. அது ஆருவது காதில் பட்டால் ரஹஸ்ய நிலையை இழந்து விடுகிறது. அரசன் அரசவையிலோ மந்திரிசபையிலோ சிந்திப்பது மந்திர - ஆலோசனையல்ல. 'ஷட்கர்ணோ பித்யதே மந்த்ர:' என்பர். தனித்து அரசனும் நம்பத்தக்க மந்திரியும் மட்டும் ஆலோசித்ததே மந்திரம். நான்கு காதுகள் மட்டும் அதனை அறியும். இது நாட்டைப் பற்றியதானதால் நான்கு காதுகள் அறியும். இதுவே அந்த அரசனைப்பற்றியதாயினும் மந்திரியைப் பற்றிய ரஹஸ்யமாயினும், அரசனின் அல்லது மந்திரியின் இருகாதுகள் கூட அறிய மாட்டா. பிறருக்குக் கூற அவசியமில்லையே. கூறினுல் தானே காதுகள் கேட்கும். சொல்வடிவம் பெருத உணர்வு வடிவிலுள்ளதே ரஹஸ்யம்.

ஸீதையைக் கண்டதை ராமனுக்கு நிரூபிக்க ஸீதையிடம் ரஹஸ்யச் செய்தி கூறும்படி ஆஞ்சநேயர் கேட்க ஸீதை காகாசுரன் - கன்னத்தில் மனச்சிலை திலகமிட்டது என்ற இரண்டைக் கூறுகிருள். இதில் என்ன

ரஹஸ்யம் ? ஆஞ்சநேயரும் மற்றவானரர்களும் அறிவர். ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஆஞ்சநேயர் கூறக்கேட்டதே. ஆனுல் இந்நிகழ்ச்சிகள் நடந்தபோது ஸீதாராமர்களின் உள்ளத்து நிலையை அவ்விருவரே அறிவர். ஸீதையின் மடியில் ராமன், ராமனின் மடியில் ஸீதை, ஸீதையின் கன்னத்தில் பொட்டிட்டது ரஹஸ்யமல்ல, அந்நிலையில் அவரிருவர் மனமும் ஒன்றி உணர்ந்ததை ஸீதையோ ராமனே சொல்லால் விளக்க முடியாது. ஆயிரம் தடவை ராமாயணம் படித்தாலும் விளக்கினுலும் ஸீதாராமர்களின் உள்ளக்கிடக்கையை விளக்கமுடியுமா ? அது இன்றும் ரஹஸ்யமே. அது பொய்யான உணர்வல்ல. ஸத்ய உணர்வே. இந்த ரஹஸ்யத்தை ஒத்தது வழிபாட்டின் போதும் ஜபத்தின் போதும் பாவனையால் உணர்கிற ரஹஸ்யம்.

**ரஹஸ்யம் உணர்கிற நிலைகள்-** மந்திரம் என்ற சொல்லிற்கு மனத்தால் காப்பது, மனனத்திற்கு உரியது, காப்பது, மனனத்தால் பிறரறியாமல் காக்கப்பெறுவது என்றவாறு பல விதமாகப் பொருள் கூறுவர். மனனம் என்பது மனத்தால் உணர்வது. மனம் கண் முதலிய பொறிகள் மூலம் வெளியே சென்று பொருளை உருவமாக சுவையாக மணமாக சீதமாக-உஷ்ணமாக, ஒலியாக வாங்கி, அதனை உள்ளத்தினுள் மேலெழுந்த வாரியாகவோ ஆழ்ந்தோ பதித்து, பின் விரும்பும் போது கண் முதலியவற்றின் உதவியின்றி அதனை அசைபோட்டு உணர்வதே மனனமாகும். மந்திரமாகி மனனத்திற்கு வரும்போது, மந்திரம் என்கிற பொருளுள்ள சொல்வடிவம் வாயால் கூறப்பட்டு காதால் கேட்கப் பெற்று, ஸ்தூலச் சொல் - பொருள் வடிவிலிருந்து நினைவிற்கொள்ளக் கூடிய ஸூக்ஷ்மச் சொல் - பொருள் வடிவைப் பெறுகிறது. இந்த மந்திரம் மனனம் செய்யும் போது மட்டும் நினைவலையில் மிதக்கும். இதுவே பழகி வழக்கமாகிவிட்டால், உடலும் மனமும் வேறு நோக்கில் ஈடுபட்டிருந்தாலும் உள்மனம் இதை அசைபோட்டுக்

கொண்டிருக்கும். நினைவைவிட்டகலாத இந்த மந்திர ஒலியே உண்மையான ஜபம். வாய்விட்டுக் கூறி மந்திரம் ஜபிப்பது ஸ்தூலம். உதடசைய ஒலி வெளியே கேளாத உபாம்சு ஸூக்ஷ்மம். உதடசையாமல், உள்ளமே ஒலியைக் காண்பது மானஸ ஜபம்.

பொருளுணர்வின்றி சொல்லாலான வடிவை வாய் கூறுவதோ மனம் நினைப்பதோ ஜபமல்ல. சிவனல்லாத சக்தியை அது பேணுவதாகும். பொருளுணர்வுடன் சொல்லைச் சொல்லும் போது சொல்லும் பொருளும் மட்டுமின்றி இவற்றினுள் அடங்காததும் உள்ளத்தால் மட்டுமே உணரக் கூடியதுமுமானது ஒன்று முன் நிற்கும். அதுவே ரஹஸ்யம். பாவனையால் மட்டுமே உணரத்தக்க நிலை இது. சொல்வடிவமும் பொருள் வடிவமும் வெளிப்படையான ஸ்தூல நிலை. இவ்விரண்டும் சொல்லாகவும் பொருளாகவுமும் பிரிந்திராமல் இணைந்து ஒரு தனி நிலையை உணர்த்துவதே மந்திரத்தின் ரஹஸ்ய சக்தி. ஆஞ்சநேயர் தன் எதிரிலுள்ள ஸீதையின் மனம் எங்கோ உள்ள ராமனிடமும், அந்த ராமனின் உள்ளம் ஸீதையின் கண்களிலும் தெரிவதை ஞானியானதால் காண்கிறுர். अस्या देव्या मनस्तस्मिन् तस्य चास्यां प्रतिष्ठितम्'' உள்ளமும் உள்ளமும் இடவேறுபாட்டின் காரணமாக இணைவதில் தடை இல்லை. சொல்லும் பொருளும் வைகரியாக வாயளவில்நிற்கும் போது வேறுபடலாம். மத்யமா, பச்யந்தீ, பரா என்ற நிலையில்அவை வேறுபடவோ தனித்துக் காட்சிதரவோ, பிரிந்திருக்கவோ வாய்ப்பில்லை.

ஜபத்திலுள்ள மந்திர அக்ஷரம், வெளியில் காதாலும் வாயாலும் உணரப் பெறுகிறது. பிறகு மனத்தாலும் உணரப் பெறுகிறது. சொல்லும் பொருளும் உணர்ந்தபின்பிரிக்க முடியாத மிக ஸூக்ஷ்ம நிலையைப் பெறுகின்றன. மனத்தால் உணரப் பெறும் போது மத்யமா என்ற மூல ஒலி நிலைக்குத் திரும்புகிறது.

மனத்தையும் கடந்த பாவனு வடிவில் பச்யந்தீ நிலைக்கே போய்விடுகிறது. மந்திரமும் தேவதையும் உள்ளுணர்வும் ஒன்றிநிற்க ஒலி பராசக்தியாக பரா ஒலியாக பரா தேவதையாக பேரானந்தமாக ஆத்மாவாக ஆகிறது.

இதைத்தான் பாஸ்கரர் புத்தியும் நீயே ! சக்தியும் நீயே ! தேவியும் நீயே ! நானும் நீயே என்று கூறி வியந்து துதிக்கிறுர்.

**குரு - மந்திரம் - தேவி** - மந்திரம் ஜபத்தால் நிறைவு பெறுகிறது. ஜபம் என்பது ஜபிப்பவர், ஜபத்தால் அடையத்தக்கவர், ஜபம் என்ற செயல் என்ற மூன்றை எதிர் பார்க்கிறது. இது ஒரு திரிபுடீ. தியானம் செய்பவர் தியானத்திற்கு உகந்தவர். தியானம் என்ற செயல் என்றும் திரிபுடீ. தாய், தந்தை, மகன் என்ருெரு திரிபுடீ, ஆசிரியர், மாணவன், வித்யை என்ருெரு திரிபுடீ. திரிபுடியில் மூன்றும் மூன்று நேர்க்கோடுகள் போலாகும். ஒவ்வொரு கோட்டிற்கும் இரு முனைகளிருக்கும். முனைகளால் பற்றி இணைந்து முக்கோணமாவதே நிறைவு. இதில் ஒவ்வொன்றும் மற்ற இரண்டுடன் தனித் தனியே இணைவது சிறப்பு. தாயும், தந்தையுமாகி மகனுடன் இணைய ஒரு ஒட்டும் பொருள் தேவை. தாயும், தந்தையுமாவதற்காக இணையும் போது, பிறக்க விருப்பவன் பெற்ருேர் இவர்களின் வினைப்பயன், பிசின்போல் முனைகளை ஒட்டுகிறது. ஆசிரியர் மாணவன் கல்வி என்ற மூன்றும் இணைய போதனை (புரிந்து கொள்வது புரியச் செய்வது) என்ற ஒட்டுப் பிசின் தேவை. ஜபிப்பவர், ஜபிக்கப்பெறுபவர், ஜபம் என்றவற்றின் ஆறு முனைகளை ஒட்டுவது குருவின் அருளாலமைந்த தீக்ஷை என்ற ஒட்டுப் பிசின்.

தீக்ஷையால் குரு சிஷ்யனின் உள்ளத்தை ஆட்கொண்டு, தனது உள்ளுணர்வாக நிற்கிறதெய்வ சக்தியைச் சிஷ்யனிடமும் பரவச் செய்கிறுர். சிஷ்யனின் உள்ளமும், தன் உள்ளமாகும் நிலையில்தான் சக்திபாதம்

என்ற நிகழ்ச்சி நேரும். சக்தி பாதத்திற்குப் பின்சக்தி அகண்ட மானதால் குருவிடம் முன் போல் நிறைந்துள்ளது. பண்டப் பரிமாற்றம் போல் அளவில் ஏற்றத்தாழ்வில்லை. சிஷ்யனிடம் தன் சக்திபாதம் நிகழ்ந்த பிறகே குரு பூர்ணனுகிறுன். இந்த தீக்ஷைக்குப் பலபடிகளுண்டு. ஒவ்வொருபடி தாண்டியதும் குருவின் நிலை உயர, சிஷ்யனும் உயர்கிறுன்.

குரு — முதலில் குரு. பாஸ்கரர் வரிவஸ்யா ரஹஸ்ய நூலின் விளக்கத்தின் மூலம். மந்திரம், தேவதை, குரு சிஷ்யன் இவர்களின் நிலை விளக்கம் தருகிறுர். இந்திரிய ஜ்ஞானம், விஜ்ஞானம், ப்ரஜ்ஞானம் ஜ்ஞானம் என்ற நான்கு நிலைகளை விளக்குகிறுர். அறிவைப் பயன்படுத்துவதை யொட்டிப் பேரறிவாகிய சித் சக்தியின் நிலைகளே இவை.

எல்லா உயிரினத்திற்கும் அறிவு உண்டு. அதன் ஏற்றமும், தாழ்வும், தரமும் கூர்மையும்வேறுபடும். பெரும்பாலானவை கண் முதலிய பொறிகளின் மூலம் பெறுகிற அறிவைக் கொண்டே வாழ்கின்றன. இது சிற்றறிவு. இந்த அறிவை இந்திரிய ஜ்ஞானம் என்பர்.

இவ்வாறு பொறிகள் மூலம் பெற்ற அறிவை மனம் எடை போட்டு விரும்பியது விரும்பத் தக்கது, விரும்பாதது, விரும்பத்தகாதது என்று வகைப்படுத்துகிறது. அறிவு இதனை ஹிதமானது, அஹிதமானது, ஏற்கத்தக்கது, தவிர்க்கத்தக்கதென பாகுபடுத்துகிறது. சித்தம் இதனை மீண்டும் ஆராய்ந்து பழைய நிகழ்ச்சியை நினைவிற்குக் கொணர்ந்து சீர் தூக்கி அறிவின் தீர்ப்பை ஏற்கவோ, மறுக்கவோ செய்கிறது. இந்த மூன்றுபடிகளும் சிந்திக்க முற்பட்டவனுக்கே பயன்படுகின்றன. மனம் என்ற முதற்படியிலேயே பெரும்பாலும் தீர்ப்பு பெறுகின்றன. இது கரண ஜ்ஞானம். இந்த இந்த்ரிய ஜ்ஞானமும் கரண ஜ்ஞானமும் சேர்ந்து அறிபவன். அறியப்படுகிற பொருள், அறிவு என்ற

திரிபுடியின் தராதரத்திற்கேற்ப ஸாமான்ய ஜ்ஞானம் அமைகிறது.

கல்வியாலும், பயிற்சியாலும் இதனைக் கூர் தீட்டி, இது இப்படித்தான் என நிர்ணயிப்பது **விஜ்ஞானம்.** இதுவும் முழு அறிவல்ல. இந்த விஜ்ஞானம்வரை உள்ள அறிவு முன் வினைப் பயனாக ஏற்பட்ட சித்தப் பதிவான வாஸனையால் - ஸம்ஸ்காரத்தால் பாதிப்பிற்கு உட்படுத்தப் பெறுபவையே. இவ்வறிவாற்றலுக்கு உட்படாததும் உண்டு.

ஸூர்ய ஒளிதான் நாம் அறிந்த ஒளிகளில் ஒளிமிக்கது. இதன் ஒளியின் ப்ரதிபலிப்பை ஏற்றே சந்த்ரன் முதலியவை ஒளிர்கின்றன என்பர். ஸூர்யனுக்கும் ஒளிதருவது, ஸூர்யனை ஒளிரச் செய்வது ஒன்று உண்டு. அந்தப் பேரொளி பரம்பொருளின் விமர்சஒளி. அதன் எதிரில் ஸூரியன் ஒரு மின் மினிப் பூச்சி என்பர். 'ந தத்ர ஸூர்யோ பாதி' என வேதம் இதனை விளக்கும். அந்தப் பேரொளிபோல் விஜ்ஞானத்திற்கும் விஜ்ஞானமான தொன்றைப் **ப்ரஜ்ஞானம்** என்பர்.

ஒவ்வொரு ஜீவனும் பிறக்கும் போதே அறிவுடன் தான் பிறக்கிறான். அந்த அறிவு செயற்கையாக அமைந்ததல்ல. அது அவனுடைய சுய அறிவு - ஸஹஜ ஜ்ஞானம். அந்த அறிவைத்தான் தாயும், தந்தையும், குருவும் செயற்கையான பயிற்சிகளால் மறைப்பு நீக்கி ஒளிரச் செய்கின்றனர். அந்த சுய அறிவே, இந்திரியம் மனம் புத்தி சித்தம் இவற்றின் மூலம் விஜ்ஞான நிலை பெறுகிறது. ஒவ்வொரு பிறவியிலும் ஜீவனுடன் அதுவும் தொடர்கிறது. உண்மையில் அந்த அறிவேதான் ஜீவன். மறைப்பும் தடுமாற்றமும் (ஆவரணமும் விக்ஷேபமும்) இருப்பதால் அறிவின் வளர்ச்சி முதிர்ச்சி தூய்மை தூய்மையின்மை என்ற பல நிலைகளில் காண்கிறது. வினைப் பயனாகப் பெற்ற ஆவரணமும், விக்ஷேபமும் அதன் முழுத் துலக்கத்தைத் தடை செய்கின்றன. அதனால்

முட்டாள், சிற்றறிவு மட்டுமுள்ளவன், பகுத்தறிபவன், சீர் தூக்கிப் பார்ப்பவன், நல்லறிவாளன் என்ற பல நிலைகளில் ஜீவனைப் புரிந்து கொள்கிறோம். உண்மையில் இத்தன்மைகள் ஜீவனின் இயல்பல்ல. செயற்கையான மறைப்பும் தடுமாட்டமுமே.

வாஸனை - ஸம்ஸ்காரம் முதலியவற்றால் மறைப்பில்லாத சுய அறிவே ப்ரஜ்ஞானம். சுகர், வாம தேவர் போன்ற சிலரே இந்த ஜ்ஞானமுள்ளவர். ப்ரஜ்ஞானம் ஆத்மாவின் இயல்பு. அஜ்ஞானம் ஜ்ஞானத்தின் மறைப்பு. ஜ்ஞானமில்லாத அஜ்ஞானி எவருமில்லை. ஜ்ஞான மறைப்பால் அஜ்ஞானியாயிருப்பவனே ஜீவன். ஜீவன் சிவனாக, மறைப்பை அகற்ற வேண்டும். ''நீயே ப்ரஜ்ஞானம்தான். பிரஜ்ஞானம்தான் ப்ரம்ஹம். அதனை உணர்கிற நிலை உனக்கு வருகிறது. அதனால் ப்ரஜ்ஞானம் ப்ரம்ஹ என்ற ருக்வேத உபநிஷத்தின் மஹாவாக்யத்தை மனனம் செய்வாய். நீ ப்ரஜ்ஞானமாவாய். ப்ரஜ்ஞானம்தான் பிரும்மம்'' என்று முதலில் குரு தீக்ஷையால் உணர்த்துகிறார். அதனால் हंसः सोऽहं - स्वरूप निरूपणहेतवे गुरवे नमः । प्रज्ञानं ब्रह्मेति तत्पदलक्षणविचारश्रवणे मां योजयन् स्वरूपनिरूपणहेतुः श्रीगुरुः पातु। என்று குருவின் நிலை உணர்ந்து வந்தனம் செய்வர்.

அடுத்த நிலை பரம குரு - குருவின் குருவைப் பரம குரு என்பர். குருவே பரம குருவாவதும்உண்டு. சிஷ்யனின் பக்குவம் பெற்ற அறிவு ப்ரஜ்ஞான நிலையை உணர்ந்ததும். அறிவாகிய பேரொளியையும், அதனால் துலங்குவதையும் தனித்து உணர்வான். தனி ஜீவனின் பேரறிவு ப்ரஜ்ஞானம். அனைத்து ஜீவர்களின் ப்ரஜ்ஞானம் சேதனரூபமான சித்சக்தி. அந்த சித்சக்தி காலம், தேசம், குணம் என்றவாறு பெரிதை அளவிற்குட்படுத்திக் காட்டுவதெதுவும் குறுக்கிடமுடியாத 'பரசித்' வெளிச்சத்தைப் பொதுவாக வெளிச்சத்தால் துலங்குகிற

பொருளின் துலக்கத்தைக் கொண்டே உணர்கிறோம். வெளிச்சத்தை தனித்து கண்டவரில்லை. நெருப்பால் எரியும் பொருளைக் கொண்டு நெருப்பை உணர்கிறோம். எரியும் பொருளைக் காட்டிலும் வேறுபட்ட எரிப்பதொன்றை யாரும் கண்டதில்லை. அது போல் அறிவால் துலங்குபவற்றைக் கொண்டுதான் அறிவிருப்பதைப் புரிந்து கொள்கிறோம்.

தான் மட்டுமே உள்ள நிலையில் மற்றொன்றைத் துலக்க அவசியமில்லாத நிலையில் தன்னைத் தானே துலக்கிக் கொள்கிற தூய ஒளி ப்ரகாசமாகும். அந்த ஒளி மற்றொன்றைத் துலக்குவதைக் கொண்டு உணரப் பெறுகிற நிலையில் அதனை விமர்சம் என்பர். அறிவு என்ற தூய நிலை ஒன்று உண்டு. அதனைப் பயன்படுத்துபவரை ஒட்டி பயன் படுகிற நிலை ஒட்டி, நல்லறிவு கெட்டறிவு அறிவற்ற நிலை என்ற தோற்றங்கள் நேர்கின்றன. அறிவிற்கு இந்த அடைமொழிகள் பொருந்தாதவை. அறிவு ஸ்-அச்சமானது, மிகத் தூயது, ஒளி குன்றாதது. தெள்ளெனத் தெரிவது. அந்த ஸ்வச்சமான ப்ரகாசமும் ஸ்வச்சமான விமர்சமுமான நிலையை உணர்த்துபவர் - உணரச் செய்பவர் பரம குரு. அந்த நிலை உணர்ந்த சிஷ்யன் பரம சிஷ்யன். அந்தப் பரம் பொருள் நீதான் என்றதும் (**तत् त्वमसि**) ஆமாம் அப்படியே **सोऽहं हं सः** என்பான். இவன் பரம குருவை **स्वच्छ प्रकाशविमर्शहेतवे परमगुरवे नमः** என்று வணங்கி, **तत् त्वं असि इति असिपदार्थमनने योजयन् स्वच्छप्रकाशविमर्शहेतुः श्री परमगुरुः पातु** என வேண்டி நிற்பான். குரு பரம குரு (உயர்ந்த குரு)வாக சிஷ்யனும் உயர்ந்த சிஷ்யனுகிறான்.

**பரமேஷ்டி குரு** - பரம குருவே பரமேஷ்டி குருவாகிறார். சிஷ்யன் பக்குவம் பெற்று பரம்பொருள் நீயே என்பதைப் புரிந்து கொண்டதைக் கண்டு அதன் தொடர்ந்த பாவனையில் அவனை ஊக்கி அடுத்த மேனிலைக்கு அழைத்துச் செல்கிறார். சிஷ்யன் குருவின்

உபதேசத்தை ஒட்டித் தனித்திருந்து நான் பரம் பொருளாகிறேன் என்று தொடர்ந்து அனுஸந்தானம் செய்யத் தொடங்குகிறான். குருவும் அவன் உள்ளத்தில் துலங்கி அறிவை மலரச் செய்து அவனது ஆனந்த நிலையில் அவனது ஜீவ நிலையைக் காட்டுகிற 'அஹம்' என்ற சிறுமையை விலக்கி எங்கும் நிறைந்த பரம் பொருளாக்கி, ஆத்மானந்தத்துக்குள் கரைந்த சிற்றொளியாக உணரச் செய்கிறார். அவனது சித்தபரிபாகமும், சித்த நிரோதமும் அந்நிலையில் அமர்த்துகின்றன. தன் குருவை எல்லாவற்றிற்கும் மேலான நிலையில் இருப்பவராக பரமேஷ்டியாகக் கண்டுதான் சிஷ்ய பரமேஷ்டியாகிறான். (பரம நிலையில் நிலைத்து நிற்பவர் பரமேஷ்டீ) தான் ஜீவ நிலை மறைய சிவ நிலை பெற்றதை உணர்ந்து **हंसः शिवः सोऽहं हंसः** என்று தன் நிலை விளக்கம் தந்து **स्वात्मानन्द पञ्जर विलीनते जसे श्रीपरमेष्ठिगुरवे नमः** என்று வணங்குகிறான். நான் பரஹ்மமாகிறேன் என்ற நேரிடை உணர்வில் ஆழ்ந்து நிற்கிறான். **अहं ब्रह्म अस्मि इति अहं पदार्थनिदिध्यासने योजयन् स्वात्मानन्द पञ्जर विलीनतेजाः श्री परमेष्ठिगुरुः पातु** என வேண்டி நிற்கிறான்.

பராபர குரு - குருவின் குரு பரம குரு, குருவைவிடப் பெரியவர். பரம குருவின் குரு - பரமேஷ்டி குரு. இவர் பரம குருவைவிடப் பெரியவர். எல்லா குருவரர்களுக்கும் ஆதி குரு பரகுரு ஆவார். நாமறிந்த குரு பரமகுரு பரமேஷ்டி குரு என் மூவர் நமக்கு நெருக்கமான குருவரர்கள். இவர்கள் அபரர்கள். அந்த ஆதி குருவிற்கும், நமது பரமேஷ்டி குருவிற்கும் இடையிலுள்ள குரு பரம்பரை அபர குரு ஆவர். பரரிலிருந்து இந்த அபரர் வரை உள்ள அனைத்துக் குருவரர்களின் ஸமஷ்டி பராபர குரு. நமது பரமேஷ்டியின் குருவே பரரிலிருந்து அபரர்வரை உள்ள (அக்கரை இக்கரை) எல்லா குருவரர்களுக்கும் (குரு பரம்பரைக்கு) ப்ரதிநிதியாக வணங்கப் பெறுபவர். இந்த குரு பரம்பரை அல்லது

பராத்பர குரு - பராபர குரு அனைத்துமான இது பிரும்மமே என்று உணரச் செய்கிறார். हंसः सोहं, அந்த நானும் இந்த நானும் எல்லா நானும் அந்தப் பெரும் நானே. अयमात्मा ब्रह्म என்பதை நேரிடையாக உணர்த்துபவர். இவர் ஆத்மாவே, ப்ரஹ்மமே, நித்யமான பொருள். தூய பொருள், கட்டற்ற பொருள். பேரறிவான பொருள் என்பதை உணர்த்துவதால் नित्य - मुक्त - शुद्ध - बुद्ध ब्रह्मतेजसे परात्पर गुरवे नमः என வணங்கி अयमात्मा ब्रह्मेति साक्षात्करणे योजयन् नित्यमुक्त शुद्ध बुद्ध ब्रह्म तेजाः श्रीपरात्पर गुरुः पातु என வணங்கி நிற்கிறான். ஆக குரு சிஷ்யனுக்கு அவன் யார், அவனால் உணரப் பெறுகிற உலகம் எது ? என்பதை விளக்கி இரண்டின் மூலப் பொருள் ஒன்றானதால் துவைத பாவத்தை அகற்றச் செய்து பேரறிவின் உண்மை நிலை விளக்கி அதன் ஒளியில் 'நான்' என்ற தனிப் பொருள் காணப் பெறாமல், பேரொளியில் கரைந்த சிற்றொளியாகித் தனிமையிழந்த இரண்டற்ற நிலை உணரச் செய்யத் தன்னையே அந்நிலையில் காட்டிக் காக்கிறார். क्रमेण अहन्ता - इदन्ताहास - द्वैतीभाव अल्पी भवन पूर्वक चिद्विमर्शे अहमोऽदर्शनं अद्वैत भानं चानुभावयन् श्री गुरुरात्मा पातु என்று உதவியதற்கு நன்றியும், வணக்கமும் தெரிவித்துக் கொள்கிறான்.

உலகமனைத்துமே 'நான்'ல் கரைந்தாலும் தன் குரு கலங்கரை விளக்காகத் தனித்து நிற்பதாக உணரப் பெறுவதால் குருவோடு மட்டும் சிஷ்யன் என்றும் அத்வைத பாவனை கொள்வதில்லை. உள்ளத்தில் குருவை ஆத்மாவாகக் கண்டு களிக்கிறான்.

பாஸ்கரராயர் போன்ற நூலாசிரியர்களும் இந்த குரு மண்டலத்தினுட் பட்டவரே. தன் தன் குருவின் மற்றொரு உருவம் நூலாசிரியர். குருவின் அருளும் உள்ளறிவைத் தூண்டி நூலின் ரஹஸ்யத்தை உணரச் செய்கிறது. குருவே நேரிடையாக இதனை விளக்க வாய்ப்பு உண்டு. பெரும்பாலும் இதயத்திலமர்ந்தே பொருளை விளக்குகிறார்.

வரிவஸ்யா ரஹஸ்யத்தில் ஸ்ரீ வித்யையை ஸாதனை செய்ய வழி கூறுகிறார். ஸ்ரீ வித்யை என்பது மந்த்ரம். மந்திரத்தின் தேவதை பெண்ணானால் வித்யை என்பர். மற்ற தேவதைகளின் மந்திரங்களில் துர்க்கா வித்யா, லக்ஷ்மீ வித்யா என்ற தேவதையின் பெயர் முன்வரும். ஸ்ரீ வித்யையின் தேவதை ஸ்ரீ மாதாவான ஆதி சக்தி. அவளுக்குப் பெயரிட அவளுக்கு முன் எவருமில்லை. அதனால் மதிப்புக் குரிய என்று குறிக்க ஸ்ரீவித்யை என்பர். அவளது நகர் ஸ்ரீபுரம், அவளது யந்திரம் ஸ்ரீ சக்ரம். ஸ்ரீ மாதாவேதான் ஸ்ரீ வித்யை. அவள் எடுத்த அக்ஷரவடிவமது. இடு பெயராயின் பெயர் மாற வாய்ப்புண்டு. ரூபமும் பால்யமும், யௌவனமும், முதுமையும் காரணமாக மாறலாம். இவள் நித்ய தருணீ. அதற்கு மேல் நிறைவோ தேய்வோ வளர்ச்சியோ பெறாத நிலைத்த ரூபம். உலகில் நாமமும், ரூபமும் அநித்யம். இவளைப் போல் இவளது நாமமும், ரூபமும், நித்தியம். இவளது அக்ஷர வடிவம் பல ஸாதகர்களுக்குப் பல விதமாகக் காட்சி தந்துள்ளது. பெருமளவில் அதனை காதி வித்யை, ஹாதி வித்யை, ஸாதி வித்யை என்று மூன்றாகப் பிரிப்பர். மூன்றுமே சமத் தகுதி பெற்றிருந்தாலும் காதி வித்யையையே இந்நூலாசிரியர் விளக்கத்திற்கு எடுத்துக் கொண்டுள்ளார். அவர் தன் குருவருளால் தானுணர்ந்த பெருமைகள் அனைத்தும் காதி வித்யையில் மட்டுமே தனக்குப் புலப்படுவதாகக் கருதுகிறார். அவரது குரு அவருக்கு உபதேசித்தது காதிவித்யைதான். அதில் அவர் ஸ்ரீமாதாவைக் காண்கிறார்.

**காதி வித்யை** பதினைந்து அக்ஷரங்கள் கொண்டது. அதனால் பஞ்சதசீ, பஞ்சதசாக்ஷரீ என்று குறிப்பிடுவர். இது வாக்பவ கூடம், காமராஜ கூடம், சக்தி கூடம் என்ற மூன்று பத அமைப்பு கொண்டது. முதல் பதத்தில் ஐந்தும் இரண்டாம் பதத்தில் ஆறும், மூன்றாவதில் நான்கும் அக்ஷரங்கள். இவை முறையே கழுத்திற்கு மேலுள்ள தலைப் பகுதி, கழுத்துக்குக் கீழ் இடுப்புவரையுள்ள நடு

உடற்பகுதி, இடுப்பிற்குக் கீழுள்ள பகுதி என்று ஸ்ரீமாதாவின் உடலமைப்பைக்காட்டுபவை. இவை அக்ஷரமயமான வடிவம். ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் அதன் பகுதிக்கும் தனித் தனிப் பொருள் உண்டு. இதனை அக்ஷர கோசங்கள் நன்கு விளக்குகின்றன. அந்தப் பொருளும் ஸ்ரீமாதாவுடன் பொருந்துபவையே.

இந்த நூலில் அந்த அக்ஷரங்களுக்குப் பதினைந்து வகையில் பொருள் கூறப்படுகின்றன. அவை அனைத்தும் ஸ்ரீமாதாவுடன் பொருந்தும் வகையும் விளக்கம் பெறுகின்றன. அக்ஷரம் போல் அவளது யந்திரமான ஸ்ரீ சக்ரமும் ஸ்ரீமாதாவே.

இவ்வாறு அக்ஷரவடிவுள்ள ஸ்ரீமாதாவை ஸாதகன் உணர ஐந்து செயல் முறைகளைப் பின்பற்றுகிறான்.

1. குருவின் க்ருபை பெறுகிறான்.

2. குரு உபதேசித்தபடி மந்திரத்தை ஜபம் செய்கிறான்.

3. மந்திரத்தின் பொருளணர்ந்து தேவதைக்கும், மந்திரத்திற்கும் இடையே வேறுபாடில்லை என்பதை உணர்கிறான்.

4. மந்திரத்தின் பகுதிகளைக் கொண்டு தன் உடலையும், உள்ளத்தையும் தூயதாக்கி தேவதை அதனுள் புகுந்து அதனைத் தன் இருக்கையாக்கிக் கொள்ள வழி செய்கிறான்.

5. மந்திரத்தை உபதேசித்த குரு காட்டியபடி தேவியின் உருவமைப்பையும் அவள் அமர்ந்துள்ள நேர்த்தியையும் த்யானத்தால் உருவகப்படுத்தி, தன்னுள்ளும் புறமும், தேவியின் மேனி ஒளி பரவச் செய்து தேவியைத் தவிர தான் 'தனது' என்று எதுமில்லை என்று உணர்ந்து தேவீ மயமாகிவிடுகிறான்.

மந்திரம் ஜபத்தால் சித்தி பெறுகிறது. மந்திரம் எழுத்து மட்டுமல்ல. தேவியும்கூட. அதனால் மந்திர

ஜபத்தின் முன் த்யானத்தால் தேவியை உருவகப்படுத்துகிறுன். பின் ஜபம் செய்கிறுன். ஜபம் செய்யும் வேளையில் அக்ஷர வடிவம் மட்டும் முன் நிற்குமானதால், ஜபம் முடிந்ததும் மறுபடி தேவியின் உருவத்தைத் த்யானத்தின் மூலம் உருவகப்படுத்துகிறுன். ஜபத்தின் போது மந்திர அக்ஷரம், அதன் பொருள். அந்தப் பொருளால் தனிக் காட்சி தருகிற தேவியின் உருவகம், த்யான ச்லோகத்தின் மூலம் பெற்ற உருவகம், வழிபாட்டிற்கான யந்திரத்தின் மூலம் பெற்ற உருவகம், பல் வேறு உபசாரங்களால் மகிழ்ந்து கனிந்த தேவியின் உருவகம், என்று ஒன்றன் மீது மற்றொருபடிமமாகப் பல படிமங்களுமிணைந்து ஒன்றிக் காட்சி தருவதை உணர்வதே ஜபத்தின் ரஹஸ்யம். ஜபத்தின் ரஹஸ்யமே உபசாரங்களிலும் உணரப் பெற அதுவே பூஜாரஹஸ்யம். இவ்விரண்டுமே வரிவஸ்யா ரஹஸ்யம்.

மந்திர ஸித்தி பெற மந்திரத்தை ஜபிப்பதும் அக்ஷர வடிவிலுள்ள மந்திரத்தின் பொருளுணர்வும் இன்றியமையாதவை என்கிறுர் பதஞ்ஜலி - तज्जपः तदर्थभावनम् । என்ற ஸூத்ரத்தில். அதற்கும் ஒரு முறையுண்டு. சாக்தாநந்த தரங்கிணீ அதற்குரிய முறையை விளக்குகிறது.

देवतां चित्तगां कुर्यात् कुर्याच्च हृदयं स्थिरम् ।
औष्ठौ च संपुटौ कृत्वा स्थिरचित्तः स्थिरेन्द्रियः ॥
ध्यायेच्च मनसा वर्णान् जिह्वौष्ठौ न विचालयेत् ।
न कंपयेच्छिरोग्रीवां दन्तान्नैव प्रकाशयेत् ।
मन्त्रोद्धार क्रमेणैव मन्त्रं जपति साधकः ।
तदा सिद्धिं विजानाति न सिद्धिश्चान्यथा भवेत् ॥

''தேவதையைச் சித்தத்தினுள் இருத்துவாய். உணர்வுகளை அலைகளாகச் சிதறவிடாமல் ஒன்றில் நிலைக்கச் செய்வாய். உதடுகளை ஸம்புடம் போல் இறுக மூடுவாய்.

மூச்சை அடக்கி புலன்களை வெளியே பாயாமல் அடக்கி உள் மனத்தை நிலையில் கட்டுப்படச் செய்வாய். நாக்கையும், உதடுகளையும் அசைக்காமல் மனத்தால் மந்திர எழுத்துகளை வரிசையாக நினைப்பாய். தலையோ, கழுத்தோ அசையக் கூடாது. பற்களை வெளியே காட்டக் கூடாது. விருப்பப்படி மந்திர வரிசையை மாற்றுமல், உபதேசித்தபடி மந்திரத்தை ஜபிப்பாய்.'' யோக முறையில் தேர்ந்தவர்களே இந்த நிலை மாற்றத்தை எளிதில் கொணர முடியும்.

பாஸ்கரராயர் நூலின் இறுதியில் இதனை விளக்குகிறுர். மந்திர ஜபத்தின் இரு அங்கங்கள்; ஒன்று அந்தரங்கம்; மற்றென்று பஹிரங்கம்.

विद्यावर्णयत्तोद्धारः कालस्तदुच्चारः ।
उत्पत्तिस्थानं, तद्यत्नः, रूपं स्थितिस्थानम् ।
आकारः स्वं रूपं विभाव्यमर्थोऽन्तरङ्गाणि ।

ஸ்ரீ வித்யையில் 15 எழுத்துக்கள் உள்ளன. எனினும் ஒவ்வொரு எழுத்தையும் பகுத்திட 58 வர்ணங்கள் உண்டு. அவற்றை உச்சரிக்கிற கால அளவு, தனித் தனி கூடமாக உச்சரிக்க 3 லவம் குறைந்த 31 மாத்திரைகள். மந்திரமாகச் சேர்த்து உச்சரிக்க ஒரு லவம் குறைந்த 29 மாத்திரைகள் என்ற கால அளவு, அக்ஷரங்கள் ஒவ்வொன்றும் தோன்றுமிடத்தை ஒட்டி வாய், உதடு, நாக்கு முதலியவைகளை அசைக்கின்ற யத்தினம், அக்ஷரத்தின் நிறம் முதலிய உருவகம், வடிவம், தனித் தனி எழுத்தின் பொருள், கூடத்தின் பொருள், மொத்தப் பொருள். இவை அனைத்தையும் எண்ணி ஜபிப்பது அந்தரங்கம்.

ருஷி, சந்தஸ், தேவதை, பீஜம், சக்தி, கீலகம், விநியோகம், கரந்யாஸம், அங்கந்யாஸம், பூஜை இவை பஹிரங்கம்.

அந்தரங்கம் பயனுள்ளதாக அமைவது எளிதல்ல. பஹிரங்கத்தைப் பயிற்சியால் பழகிச் செய்ய எளிது.

உயிரான அந்தரங்கமின்றி பஹிரங்கம் மட்டும் செய்வது. பொம்மைக்கு அலங்காரம் செய்வது போல். சேதனமாகத் தேவியை உணர அந்தரங்க ஜபமுறை மிக மிக அவச்யம். அந்தரங்கம் தான் ரஹஸ்யம். இந்த ரஹஸ்யமின்றி ஜபிப்பது பலனற்றது.

ரஹஸ்யம் என்பது விளக்க இயலாதது. விளக்க இயலுமெனில் அது ரஹஸ்யமல்ல. உள்ளுணர்வால் உணர்வதை வெளிப்படுத்த முடியாது. சர்க்கரையைக் காட்டலாம். இனிப்பதை வாயிலிட்டு உணரச் செய்யலாம். ஆனுல் அந்த இனிமையும், அதனுல் ஏற்படும் இன்பமும் இத்தகையதென விளக்க இயலாது. சொல்லாக வாய்விட்டு வெளிவந்ததைப் பிறர் கேட்க முடியும். மனம் சொல்வதைப் பிறர் கேட்க முடியாது. மனம் சொல்வது மத்யமா ஒலியில் அநாஹதமாக. அதனுல் மனனம் செய்பவரைத் தவிர மற்றவர் உணர முடியாத ரஹஸ்யம்.

**ஈச்வரியிடம் ஆறு குணங்கள். ஜீவனிடம் ஆறு குறைகள் :-** தேவி அல்லது தேவனிடம் இயல்பாக ஆறு குணங்கள் அமைந்துள்ளன. ஷாட்குண்ய பரிபூரிதா. (லஸ. 387). **ஸர்வஜ்ஞதா** (எல்லாமறிந்த தன்மை) **நித்ய த்ருப்ததா** (எப்போதும் நிறைந்த தன்மை) **அநாதி போததா** காலவரம்பற்ற பேருணர்வு) **ஸ்வதந்த்ரதா** - பிற உபகரணங்களும் பிறர் உதவியுமின்றித் தானே செயல்புரிகிற ஆற்றல்) **அலுப்த சக்திதா** (என்றும் சக்தி குன்றுத தன்மை) **அநந்ததா** - (காலம், தேசம், வஸ்து முதலியவற்றுல் வரையறுக்கப்படாத விரிவு) என்ற ஆறும் ஈசுவரத் தன்மைகள். ஜீவனிடம் **வித்யா** (அளவிற்கு உட்பட்ட அறிவு), **ராகம்** (தேவையுணர்ச்சி) **அவித்யா** (சிற்றுணர்வு) **நியதி**, (வினை விளைவிற்கு உட்படுதல்), **கலா** (அளவிற்குட்பட்ட சக்தி), **காலம்** (கால தேசவரம்பிற்கு உட்படுதல்). வாழ்வின் காலவரை என்ற ஆறும் இவனை ஈசத் தன்மையை அணுக முடியாதபடி செய்கின்றன. இவற்றைக் கடந்து ஈச்வரத் தன்மை பெறுவதும்

வழிபாட்டின் குறிக்கோளே. பத்து மஹாஸித்திகள் அணிமா மஹிமா முதலியவை ஈச்வரத் தன்மைக்கு இட்டுச் செல்பவையே.

இந்த ஈச்வரத் தன்மையும், மந்திர தேவதையின் குறுகிய வடிவமே. ஸூர்ய ஒளிக்கும் ஒளி யூட்டுகிற ப்ரகாசமே அதன் முழுவடிவம். அந்த ப்ரகாசம் ஸூர்யனின் ஒளியாக வருவது ப்ரகாசத்தின் விமர்சநிலை. ஸூர்யனின் ஒளி தன் வீட்டு முற்றத்தின் பரப்புக் கேற்பக் குறுகி வருவது போலானது விக்ரஹம் முதலியவற்றில் உணர்கிற தெய்வ சைதன்யம். மூன்று ஒளிகளும் ஒன்றே என்ற உணர்வுள்ள போதே முற்றத்து ஒளியாகக் கட்டுக்குட்பட்டதாக இறக்கம் காண்பதுதான் ஸகுணவடிவம். குந்திக்காக கர்ணனுக்காக ஸூர்யன் வந்தது போல் பக்தனுக்காக இரங்கி இறங்குவது ஸகுணவடிவின் ஸௌலப்ய வடிவம். பொருள் ஒன்றே. அதுவே பரம். அதுவே ஸாதகனின் சித்தத்தினுள் தன் பரத் தன்மைக்கு ஹானியின்றி வரும். இதுதான் வரிவஸ்யையின் ரஹஸ்யம்.

இதனை விளக்கவந்த பாஸ்கரராயர் முதலில் பிரகாசம் விமர்சம் என்ற இரு நிலைகளை விளக்குகிறார். விமர்ச சக்தி அருள்வடிவில் ஸ்ரீமாதாவாகிறாள். பஞ்சதசாக்ஷரியாகிறாள். ஸ்ரீ சக்கிரமாகிறாள். குண்டலினீ சக்தியாகிறாள். ஒளி ஒலி என்ற தடங்கலுறாத வியாப்தி சக்தி கொண்டவள். சொல்லும் பொருளும் எண்ணமும், விளக்கமும், விருப்பமும் செயலும், மறுப்பும் மறைவும் இயல்பாகக் கொண்டவள். மனித இனத்திடம் தனித்த பரிவு கொள்ளாதவளாயினும் மனனத்தைத் தன் இயல்பாகக் கொண்டவனிடம் அவள் எளிதில் ப்ரதிபலிக்கிறாள். அழுக்கற்ற ப்ரதிபிம்ப சக்திமிக்க கண்ணாடியில் முகம் ப்ரதிபலிப்பது போல்.

நெருப்பு எரிக்கும். ஆனால் அது செயல்பட ஒரு எரிபொருள் தேவை. எரிபொருளின்றி எரிக்கிற

நெருப்பை உணர முடியாது. எரிபொருள் எரிந்து முடிந்து விட்டால் நெருப்பு மறைந்துவிடும். எரிபொருள் அழியும். சூடம் போன்ற எரிபொருள் எரிந்து முடிந்ததும் சாம்பலுமில்லை. நெருப்புமில்லை. அது சிவனது அடையாளமாகி விட்டது. நெருப்பிற்கு எரி பொருள் போல் ஸூர்ய ஒளிக்கும் தானிருப்பதை உணர்த்த ஒளியால் உணரத்தக்க பொருள் தேவை. ஒளியால் உணரத் தக்க பொருளிருந்தும் பயனிருக்காது. ஒளியைக் கொண்டு தெரிகிற பொருளைப் பார்ப்பவனும் தேவை. இந்தத் திரிபுடியின் அவச்யமே ப்ரகாசம், விமர்சம், ஸ்ப்புரணம், ஸ்பந்தனம் என்ற விரிவின் எல்லையான புருஷன், ப்ரக்ருதி என்பதில் முடிந்தது. ப்ரக்ருதியும், புருஷனும் தனித்திருந்து பயனில்லை என ஸ்பந்தனமே க்ஷோபணமாகி இணைக்க, இணையத்தகாத இயல்பு கொண்ட ப்ரக்ருதியும், புருஷனும் இணைந்து உலகமானார்கள் (க்ஷோபிணீ, ஸூக்ஷ்ம ரூபிணீ- ல.ஸ. 466-467) ப்ரக்ருதி முடம். தானே நடக்க இயலாது. புருஷன் குருடன். வழி தெரியாது. குருடன் தோளில் முடவன் உட்கார ஸ்ருஷ்டி தொடங்கிற்று என்பர்.

ப்ரக்ருதியின் முதல் பரிணமம் புத்தி என்ற மஹத் தத்துவம். புருஷனின் உதவியின்றி ப்ரக்ருதி இயங்காது. ஈச்வரியிடமிருந்து முதலில் வெளிவந்த இச்சா சக்தியும், ஜ்ஞான சக்தியும் க்ரியா சக்தியும் ப்ரக்ருதியை இயக்கின. பிரக்ருதியினுள் ஸமநிலையில் நின்ற ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களாக அவை உருவெடுத்தன. அதில் ஸத்வகுணத்தின் விரிவே புத்தி என்ற தத்துவம். ஸத்வம் கண்ணடி போன்று தன்மீதுபட்ட ஆத்ம ஒளியை தெள்ளெனப் ப்ரதிபலித்தது. ஆத்மாவின் ப்ரதிபிம்பம் புத்தியை சேதன சக்தியாக உருவாக்கியது.

புத்தியில் ப்ரதிபலித்த ஆத்மாவின் ப்ரதிபிம்பம் ஆத்மாவின் தனி இயல்பான நான் என்ற உணர்வையும் ப்ரதிபலித்து அஹங்காரமாயிற்று. ஸத்வமெனும் மூல குணத்தின் விரிவான புத்தி தத்துவம் அஹங்காரமாகி,

மீதமுள்ள ரஜோகுணமும், தமோகுணமும் உதவ, உலகமெனும் பெரும் தொழிற்சாலே இயங்குவதற்கான மூலப்பொருளான மனம், கண், காது முதலிய இந்திரியங்கள், அவற்ருல் உணரத் தக்க சப்தம் ஸ்பர்சம் முதலியவை, அவற்றின் ஆதாரமான ஐந்து பூதங்கள் என்ற பல தத்துவங்களின் ஸமஷ்டி உருவானது. அதன் வியஷ்டி நிலேதான் உலகம் என்ற பல தோற்றங்கள். விமர்சத்தின் பரிணாமமே இத்தனேயும். இதனே சாக்த தர்சனம் வேறு வகையில் விளக்குகிறது.

பரம்பொருள் - பேரொளி - பரப்பிரும்மம்- உலகம் மறைவதும் லயமடைவதும் புதிதல்ல. எத்தனேயோ முறைகளில் இது நடந்திருக்கிறது. லயமடைந்த உலகமே மீண்டும் படைக்கப் பெறுகிறது. லயமடைந்த உலகம் என்ன வாயிற்று ? ருத்திரன் என்ற ப்ரஹ்ம தத்துவம், இது அது என்ற பலவாகி இருந்ததை மூலப் பொருள் நிலேக்கு மாற்றி ஈசுவரன் என்ற மற்றெரு பிரம்ம தத்துவத்திடம் ஒப்படைத்தது. அது இது எனப் பிரிக்க முடியாதபடி தன்னிடம் வந்ததைப்ப்ரக்ருதி என்ற மூல நிலேக்கு மாற்றிப் பின் மாயை என்ற அவ்யக்த தத்துவத்தினுள் அதனே மறைத்து ஸதாசிவர் என்ற மற்றெரு ப்ரஹ்ம தத்துவத்திடம் அவர் அதனேத் தந்தார். ப்ரக்ருதி - புருஷன் என்ற நிலேயைக் கடந்த அதனே ஏற்ற ஸதாசிவர் பர சிவன். ப்ரகாசம், என்ற நிலேக்கு (பிரும்மத்தை விட்டு உலகம் என்று பிரித்துணர முடியாத நிலேக்கு)க் கொணர விமர்சம் என்ற சக்தியிடம் ஒப்படைத்தார். ஸ்ப்புரணமும், ஸ்பந்தனமுமற்ற அதனே மஹாகாலத்துடன் பிரும்மத்தில் ஒன்றச் செய்து ப்ரகாசம் ஒன்றே மீதமாக்கிய விமர்சம் தானும் அதனுள் மறைந்து ஐக்யமாகிறது. சிவன் மட்டுமே- எவராலும் உணரப் பெருத பரம்பொருள் மட்டுமே இருந்தது.

வினேயின் பின் விளேவான அத்ருஷ்டம் என்ற கர்ம பலன் காலம் என்ற தத்துவத்தின் உதவியுடன் பழுக்கும். என்றும் அழியாதது. எதனுலும் அழிக்க முடியாதது. முக்தி

நிலையிலும் அவ்வினைப் பயன் முக்தனைச் சார்ந்தவரிடம் பங்கிடப் பெறுகிறது. இந்த வினையின் பின் விளைவுடன் தான் உலகம் பரம் பொருளில் மறைந்துள்ளதெனப் புராணம் ஒரு விளக்கம் தரும். உலகின் அனைத்து வினை ஸமஷ்டியும் பிரும்மத்தினுள் மறைந்தது. அதனைக் கட்டுப்படுத்துகிற மஹாகாலம் விழித் தெழச் சலன மற்றிருந்த பரம் பொருளிடம் உலகப் படைப்பிற்கான காமம் எழுந்தது. பரம் பொருள் தன்னை ப்ரகாசம், விமர்சம் என்ற இரு நிலைகளுக்குக் கொணர்ந்தது. ப்ரகாசம் சிவம் முதல் பூமி ஈறுன 36 தத்துவங்களாக உருமாற ப்ரகாசத்தின் ஸ்பந்த நிலையாகிய ஆதி சக்தி விமர்சமாகி, உலகைத் தோற்றுவித்தது. அந்த ஸ்பந்த நிலைகளை லலிதா ஸஹஸ்ரநாமம் படம் பிடித்துக் காட்டுகிறது.

अप्रमेया स्वप्रकाशा मनोवाचामगोचरा ।
चिच्छक्तिश्चेतनारूपा जडशक्तिर्जडात्मिका ॥
विमर्श रूपिणी विद्या वियदादिजगत्प्रसूः ।

இந்த நாமங்களுக்கான விரிவுரையில் பாஸ்கர ராயர் ஸ்ருஷ்டிக் க்ரமத்தை மிகவும் தெளிவாக விளக்கி இருக்கிறுர்.

ப்ரகாசம் தன் இயல்பை வெளிக்காட்டாதிருந்தது, விமர்சம் தன் தனித் தன்மையைப் பிரித்துக் காட்டியது. யந்திரங்களினுள் வெளிப்படாதிருந்த சக்தி யந்த்ரத்தின் இயக்கத்தில் வெளிப்படுகிறது. அப்போது யந்திரம் பின் புலனுகி அதன் சக்தியே கண் முன் நிற்கிறது. அவ்வகையில் விமர்ச நிலையில் பிரும்மத்தின் அஹம் - பர அஹம் என்ற நிலை வெளிப்படுகிறது. அதனுல் விமர்சத்தை பராஹந்தா என்பது முண்டு. அதில் பிரும்மத்தினிடம் தனி இயல்பாகிய ஆனந்தம் மட்டுமே தென்படும். விமர்சத்திடம் ஸத், சித் என்ற இரு இயல்புகளும் தென்படும். நெருப்பு சுடும். அது இயல்பு. தணலும், காய்ச்சிய இரும்பும் சுடும் என்பது செயற்கை.

தணலிலும் பழுக்கக் காய்ச்சிய இரும்பிலும் உள்ள நெருப்புதான் சுடுகிறது. தனியே நெருப்பை உருவகப்படுத்த முடியாததால், தணல் மூலமும் பழுக்கக் காய்ச்சிய இரும்பு மூலமும் அதனை உணர்கிறோம். ப்ரகாசம் விமர்சத்தின் மூலம் தான் தன்னை வெளிப்படுத்துகிறது. शिवः शक्त्या युक्तः यदि भवति शक्तः प्रभवितुम् । சிவனும், சக்தியும் ஐக்யமடைந்து பிரித்து உணர முடியாத நிலை ப்ரகாசம். சிவனும், சக்தியும் பிரிந்துஇணைந்த நிலை விமர்சம். இந்த இரண்டின் யோகமே உலகின் விரிவிற்குக் காரணமாகிறது. ஐக்யத்தில் உலகம் தோன்றவும், வெளிப்படவும் வாய்ப்பில்லை. ஐக்ய நிலைதான் லலிதை. யோகநிலை ஸ்ரீமாதா. शिवशक्त्यैक्यरूपिणी ललिताम्बिका श्रीमाता।

பிரும்மம் உலகத்தைப் படைப்பதும், காப்பதும், மறைப்பதும் அதன் ஸ்ப்புரணத்தால் நிகழ்வதாகும். பிரும்மத்தினுள் செயல் வடிவற்ற ஸ்ப்புரணம் வெளியில் தன்னிச்சையாகச் செயல்படுகிறது. ब्रह्मणि अक्रमा अतन्त्रा च शक्तिः विमर्शे क्रम रूपा स्वतन्त्रा च । படைப்பில் விமர்ச சக்தி விச்வமாக உருவெடுக்கிறது. காப்பில் அதே உலகைத் தன்னைவிட வேறுபட்டதாக்கி தனியாக உருவாக்குகிறது. மறைப்பில் விச்வமானதைத் தன்னுள் ஒடுக்குகிறது. இம்மூன்றிலும் இயல்பாக அமைந்த ஸ்ப்புரணமே செயல்படுகிறது. அதனால் விமர்ச நிலையில் ப்ரகாசம் தனித்தில்லை. ப்ரகாச நிலையில் விமர்சம் தனித்தில்லை. படைப்பிலும், காப்பிலும், மறைப்பிலும் விமர்சம் உலகை விட்டுத் தனித்தில்லை. இதற்கான ஸூத்ரம் பின் வருமாறு.

**चिच्छक्तिः ब्रह्मणि अक्रमा अतन्त्रा च । बहिः क्रमरूपा स्वतन्त्रा च । सृष्टौ विश्वाकारा, रक्षणे भिन्नतया अनुपमर्देन विश्व प्रकाशिका, लये विश्वोपसंहर्त्री । कृत्येष्वेषु अकृत्रिमं विस्फुरणम् । प्रकाशमानं न पृथग्विमर्शात्, स च प्रकाशो न पृथग्विमर्शात् ।**

ப்ரகாசம் இறங்குகிறபடிகள் மூன்று. ஸ்ருஷ்டிக்க விருப்பம் என்கிற நிலையில் சிவ தத்துவத்தில் 'அஹம்' என்ற விமர்சம். சக்தி வெளிப்பட்ட நிலையில் ஸதாசிவராகி 'அஹம்', 'இதம்' என்ற இரண்டின் விமர்சம். 'அஹம்', 'இதம்' என்ற இரண்டின் இடையே ஏற்றத் தாழ்வில்லை. அடுத்து ஈச்வரராகி இதம், அஹம் என்று வரிசை மாறி 'இதம்'ல் அழுத்தமும் 'அஹம்'ல் அவ்வளவு அழுத்த மின்மையும். இந்த படிகளை விமர்சம் அனுக்ரஹம் திரோதானம் என்பர்.

இயல்பாக உலக வடிவடைந்து மறைகிற சக்தி என்பதை தேவியின் கண்மூடித் திறப்பதால் - இமை மூடித் திறப்பதால் ஏற்பட்ட நிகழ்ச்சி என்று புராணம் விளக்கும். उन्मेपनिमिपोत्पन्न विपन्नभुवनावलिः। निष्क्रिया। செயலற்றவள் எப்படி உலகைப் படைக்க முடியும் ? அவள் எதிரில் உலகம் தானே விரிவடைந்து வாழ்ந்து மறைகிறது. உலகை அவள் ஆட்படுத்தவில்லை. உலகம் ஆடுகிறது. இச்சா சக்தி என்பது விமர்சத்தின் ஸ்வதந்த்ரசக்த்தியின் அழகிய செயல்முறை (चमत्कारः)। ஞான சக்தி என்பது பணியின் நேர்த்தி (आमर्शः) கிரியா சக்தியானது எல்லா உருவங்களிலும் இருப்பது. (सर्वाकार योगित्वम्).

உலகமாக மாறுபவை மூன்று தத்துவங்கள். சிவதத்வம், வித்யா தத்வம், ஆத்ம தத்துவமென. சிவ தத்துவத்தை அர்த்தமயீ ஸ்ருஷ்டி என்றும் வித்யா தத்துவத்தை சப்தமயீ ஸ்ருஷ்டி என்றும் ஆத்ம தத்துவத்தை சக்ரமயீ - தேஹமயீ என என்ற இரு ஸ்ருஷ்டிகளாகவும் விளக்குவர். இதனை பாஸ்கரராயர் மிக அழகாக விரிவாக விளக்குகிறார்.

விதை விதைக்கப்பட்டதும் அதனுள் மாறுதல் நேரும். அது போல் அர்த்தமயீஸ்ருஷ்டியில் தனியே கேவலனாக உள்ளவன் பலவாக ஆவேன் பெருகுவேன் (बहु स्यां प्रजायेय) என்று முளையின் நுனி தெரிகிறது. அது முதல்

**சிவ தத்துவம்.** இச்சா ஜ்ஞானம் க்ரியா என்ற மூன்று சக்திகளும் தன்னிடம் உள்ளதை உணர்கிறது.

இரண்டாவது **சக்தி** எனும் தத்துவம் - தன்னுள் மறைந்த உலகின் வாஸனையாக சிவனை தர்மியாக்கித் தான் தர்மமாக ஆகிச் சிவ தத்துவத்தை உலகின் உபாதான காரணமாக்கித் தன்னை நிமித்த காரணமாக்கிக் கொள்கிறது.

மூன்றுவதான **ஸதாசிவ தத்துவம்,** படைக்கப்பட விருக்கிற உலகமும் தானும் என்ற வாஸனை ஏற்பட்டு உலகமே, தான், தான் தான் உலகம் என்ற உணர்வாகிறது.

நான்காவதான **சுத்த வித்யா** ஸதாசிவரிடம் உள்ள இயல்பான **அனுக்ரஹ சக்தி**, நானே உலகமாகிறேன் என்ற அபேத பாவனை உணர்வு இது.

ஐந்தாவதான **ஈச்வர** தத்துவம். இது உலகம், நான் அதனை ஆட்கொண்டவன் என்ற வாஸனை எழுகிறது. நானே உலகம் என்ற அபேத பாவனை மறைகிறது. இது உலகம் என்ற பாவனை வலுத்து நான் என்ற பாவனையும் மறைகிறது. ஈசுவரனிடம் உலகம் என்ற (மமதா) பேத உணர்வு தலையெடுப்பதால் ஸர்வம் பிரும்ஹ என்றபாவனை **திரோதானம்** அடைகிறது.

ஆறுவதான **மாயை** உலகைக் காட்டி அதன் மூலத்தை மறைக்கிறது. ஸதாசிவனிடமிருந்த **அஹந்தாவும்** ஈச்வரனிடமிருந்த **மமதாவும்** மறைந்து **இதந்தா** மட்டும் புலனாகிறது.

ஏழாவதான **அவித்யா** இதந்தாவையும் மறைக்கிறது. ஈச்வரனது உலகம்என்ற நிலையும் மாறி உலகம் தனித்த பொருள் என்ற உணர்வைத் தருகிறது.

இனி ஜீவன் தனியாகிவிட்டான். விச்வமாயிருந்தவன் 'நான்' 'நீ' 'அவன்' என்றாகி விட்டான்.

அவளே வித்யா தத்துவமும் ஆத்ம தத்வமும் ஆட்கொள்கின்றன.

சப்தமயீ ஸ்ருஷ்டியில் அ முதல் க்ஷவரையுள்ள எழுத்துக்களாக வைகரியாக உச்சரிக்கப்படுமுன் பரா பச்யந்தீ மத்த்யமா என்ற மூன்று நிலைகள் உள்ளன. மானஸ ஜபத்தில் மத்யமாவும் அனுஸந்தானத்தில் பச்யந்தீயுமாக உணரப் பெறுபவளே தேவி. அவளே காயத்ரியாக வ்யாஹ்ருதியாக - ஸ்ரீ வித்யையாக அவற்றிலுள்ள ஒவ்வோர் அக்ஷரமாக உள்ளாள். அந்த அக்ஷரங்களைக் கேட்டதும் மனனம் செய்ததும் அவற்றின் ஒவ்வோர் அணுவிலும் அவள் தோன்றுகிறாள். அந்த மந்திரங்களும் மந்திராக்ஷரங்களின் பொருளும் அவளே. அப்படி உள்ளுணர்ந்து செய்வதே ஜபம். ஒவ்வொரு அக்ஷரமும் தேவியின் வடிவம், அதன் சிறு சிறு தொகுப்பான கூடம் அவளது அவயவம். முழு மந்திரமும் அவள் வடிவம். எழுத்தினுள் உயிராகப் பொருளாக உள்ளவள். வைகரியாக மத்த்யமாவாக வாயாலும் மனத்தாலும் உச்சரிக்கப் பெறுபவள் அவள்.

ஹ்ரீங்காரா தர்சபிம்பிதா என்று லலிதா த்ரிசதியில் ஒரு நாமம். 'ஹ்ரீம்' என்ற எழுத்தாகிற கண்ணாடியில் பிம்பமாகத் தோன்றுபவள் அவள். கண்ணாடிக்கு வெளியே உள்ள பொருள் கண்ணாடியினுள் பிம்பமாகத் தெரியும். உண்மையில் அது பிம்பம் அல்ல. ப்ரதிபிம்பமே. பிம்பத்தின் ப்ரதிபலிப்பே. ப்ரதிபலிப்பானதால் உண்மைத் தோற்றமல்ல. உள்ளது கண்ணாடி. தெரிவது ப்ரதிபிம்பம். ப்ரதிபம்பத்தைப் பார்த்தால் கண்ணாடி மறையும். கண்ணாடியாகப் பார்த்தால் பிம்பம் மறையும்.

ஆதர்சம் என்ற கண்ணாடியும், பிம்பமும் மாறுபட்ட ஸத்தையுள்ளவை. ஸமஸத்தை உள்ளவையல்ல. இருப்பது கண்ணாடியாக. தெரிவது பிம்பமாக. அவ்விதமானால் ஹ்ரீம் என்ற எழுத்தில் மாயத்தோற்றமாக

உள்ளவள் என்ற பொருள் கொள்ள நேரும். அப்படியானால் (ஹ்ரீங்காரமெனும் கண்ணாடியில்) பிம்பமாயிருப்பவள் என்றல்லாமல் ப்ரதிபிம்பமாக இருப்பவள் என்றுதான் கொள்ள வேண்டும்.

லலிதா த்ரிசதீக்கு பாஷ்யம் எழுதிய ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இவ்வாறு விளக்குகிறார்.

**अस्य बीजस्य (ह्रीं इत्यस्य) इतर प्रमाणानपेक्ष वेदान्तर्गततया निर्दोषत्वात् आदर्शत्वम् । तस्मिन् बिम्बिता प्रतिबिम्बिता, माया प्रतिबिम्बित चैतन्यस्यैव जगत्कारणतया सर्वत्र दर्पणे मुखमिव प्रतिफलतीति तात्पर्यार्थः ।**

ஹ்ரீம் என்ற பீஜம் வேதத்திலேயே உள்ளது. வேதத்திற்கு வேறு ப்ரமாணங்களின் உதவி தேவையில்லை. வேதத்தில் கூறப்பட்டுள்ளதால் குறையற்ற (அப்பழுக்கற்ற நிர்மலமான) கண்ணாடி என்ற தகுதி உண்டு. அதனுள் அவள் ப்ரதிபிம்பமாக உள்ளாள். ஹ்ரீம் என்பது மாயா பீஜம். மாயையில் ப்ரதிபிம்பமாகத் தோன்றுகிற சைதன்யமே உலகின் காரணமாவதால், கண்ணாடியில் முகம் காண்பதே போல் தேவி ஹ்ரீம் பீஜத்தில் ப்ரதிபிம்பமாகத் தெரிகிறாள் என விளக்குகிறார். இந்த விளக்கம் அத்வைதக் கொள்கைப்படி அமைந்தது.

சாக்தர்கள் இதனை வேறுவிதமாகவும் பொருள் கொள்வர். தேவி ஹ்ரீம்ல் பிம்பமாவே காணப்படுகிறாள். ப்ரதிபிம்பமாக அல்ல. வெளியிலுள்ள உலகம் கண்ணாடியில் தெரியும். இவள் ஹ்ரீம் பீஜத்தினுள் இருப்பவள். ஹ்ரீங்காரத்தினுள் பிம்பமாக உபாஸகனால் காணப் பெறுபவள். உபாஸகன் கண்ணாடியினுள் தேவியைப் பார்க்கிறான். அவள் பிம்பமாக உண்மைப் பொருளாகத் தெரிகிறாள். ககாரரூபாவாக ஏகார ரூபாவாக ஒவ்வொரு அக்ஷரமாகத் தோன்றியவள், ஹ்ரீங்கார ரூபாவாகமுன் தெரிந்தவள், ஹ்ரீமுக்குள் ஆத்மாவாக

கண்ணாடியினுள் தெள்ளெனத் தெரிகிற பிம்பமாகத் தெரிகிறாள். ஹ்ரீம்ன் உள்ளும், வெளியிலும் அவளே காணப்படுகிறாள். கண்ணாடி நேரிடைக் காட்சியைவிடத் தெளிவான காட்சியைக் காட்டுகிறது. கண்ணாடியில் தன் முகத்தைக் கண்டு ஆனந்திப்பது தூய காட்சி தருவதால்தான்.

மற்றொன்று - அவள் எங்கும் பிம்பமே. அவள் எதற்கும் ப்ரதிபிம்பமல்ல. தனக்கும் கூட ப்ரதிபிம்பமல்ல. பிரும்மம் பிம்பம் என்பதும் ஜீவன் ப்ரதிபிம்ப மென்பதும் உண்மை. உலகம் தன் ப்ரதிபிம்பத்தைக் கண்ணாடியில் பார்க்க முற்பட்டால் அவள்தான் தென்படுவாள். ஜீவன் ஹ்ரீங்காரம் என்ற மாயாபீஜத்தினுள் (கண்ணாடியில்) தன் பிம்பத்தைப் பிரும்ஹமாகக் காண்கிறான்.

லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பஞ்சகத்தில் சங்கர பகவத் பாதர்கள் ஒரு புதுமையைக் காட்டுகிறார். கண்ணாடியில் தன் ப்ரதிபிம்பத்தைப் பார்த்தவன் நெற்றியில் பொட்டில்லாததைக் கண்டு கண்ணாடியிலுள்ள தன் நெற்றிக்குப் பொட்டிடாமல் வெளியேயுள்ள தன் நெற்றிக்கே பொட்டிடுவான். அதை வேறுவிதமாக விளக்குகிறார்.

**त्वत्प्रभुजीवप्रियमिच्छसि चेत् नरहरिपूजां कुरु सततम् ।**
**प्रतिबिम्बालङ्कृतिधृतिकुशलो बिम्बालङ्कृतिमातनुते ॥**

உன் பிரபுவாகிய ஜீவனுக்கு இனியதைச் செய்ய விரும்புகிறாயா ? அப்படியானால், நரஸிம்ஹரை எப்போதும் வழிபடுவாய். ப்ரதிபிம்பத்தில் தன்னை அழகனாகக் காண விரும்புபவன், பிம்பமாகிய தன்னையே அழகுபடுத்திக் கொள்வான். நரஸிம்ஹன் தான் பிம்பம். ஜீவனாகிய தான் ப்ரதிபிம்பம். ஜீவனை அழகனாக்கி மகிழ்விக்க, பிம்பமாகிய நரஸிம்ஹனை அழகுபடுத்தி மகிழ்விப்பாய்.''

பிம்பம் பகவான். பிரதிபிம்பம் ஜீவன். பிம்பம் ப்ரதிபிம்பத்தைப் பார்க்கும். ப்ரதிபிம்பம் பிம்பத்தைப் பார்க்காது. ப்ரதிபிம்பத்தில் மாறுபாடு விளைவிக்க, பிம்பம் தான் தக்க நடவடிக்கை எடுக்க முடியும்.

கண்ணுடியிலுள்ள பெருங்குறை. பிம்பத்தின் வலது புறத்தை இடது புறமாக்கி, இடது பக்கத்தை வலது புறமாக்கி, தான் காட்டுகிற காட்சியே இயல்பானதென உணரச் செய்யம். ஹ்ரீங்கார மென்ற கண்ணுடியோ ஸாதகன் த்யான சுலோகத்தால் உணர்கிற உண்மையான உருவகத்தைச் சிறிதும் மாற்ருமல் அப்பட்டமாகக் காட்டும். கண்ணுடி போன்று தன்னளவிற்கேற்ப அரை குறையாகக் காட்டாமல் பூர்ணமாகக் காட்டும்.

தன்னைத் தானே பார்த்துக் கொள்ள கண்ணுடி மட்டுமே உதவும். தேவியை க் காண ஹ்ரீங்காரம் மட்டும் கண்ணுடியாக உதவும்.

தேவி வெளியில் உலகமாகக் காட்சி தந்தாள். ஹ்ரீங்காரமென்ற கண்ணுடிவழியே பார்த்ததும் தேவியாகக் காட்சி தந்தாள். தேவியை உலகமாகக் காட்டியதும் அந்த ஹ்ரீங்காரம் என்ற மாயாபீஜமே. உலகை, தேவியாகக் காட்டுவதும் அந்த ஹ்ரீங்காரமே. மாயையினுட்பட்டவனுக்கு அந்த உலகக் காட்சி. மாயையைக் கடந்தவனுக்கு தேவியின் காட்சி. மாயையில் உட்பட்டவனுக்கு ஹ்ரீங்காரம் திரையாகும். மாயையைக் கடந்தவனுக்குப் பேரொளியால் துலங்கும் நற்பாதை அது.

ஹ்ரீங்காரம் புவனேச்வரீ மந்த்ரத்தின் பீஜமுமாகும். மாயையால் அது பராசக்தியைப் புவநேசுவரியாகக் குறுக்கிக் காட்டுகிறது. புவனேச்வரி பராசக்தியின் ப்ரதிபிம்பம். அதே ஹ்ரீங்காரம் ஸ்ரீவித்யையில் ஸ்ரீமாதாவான லலிதையையும் காட்டுகிறது.

பக்தன் தன்னை நோக்கி நிற்கிற ஸ்ரீமாதாவை ஹ்ருதயத்தினுள் பதித்துக் கொண்டான். அவள் பக்தனிடம் நெகிழ்ந்து தயையால் கசிந்து அன்பே

வடிவாக நிற்கிருள். இதயத்தில் உணர்வதை ஹ்ரீங்காரமெனும் கண்ணுடியில் அப்படியே பிம்பமாகவே காண்கிருன். காண்கிற தானும் அதில் தெரியவில்லை. மாயையால் தெரிகிற உலகமும் தெரியவில்லை என்ருெரு விளக்கம் தருகிருர் என் குரு ஸ்ரீ பாலஹம்ஸாநந்த நாதர்.

लोकः पश्यति दर्पणे निजतनुं व्यत्यस्तसव्येतरां
स्वस्यैवाभिमुखीं यथायथकृतिं मायागृहीतो बहिः ।
भक्तः स्वाभिमुखीं दयार्द्रनयनां पश्येत् हृदा बिम्बितां
ह्रीङ्कारे मुकुरेऽम्बिकां न तु पुनः स्वात्मानमन्यच्च वा ॥''

இது ஒரு அத்புதக் காட்சி. ஹ்ரீம் மந்திர ஸாதகனுக்கும் அவள்தான் ஆத்மா. ஹ்ரீமின் ஆத்மாவும் அவளே. ஸாதகனின் இதயத்தில் தெரிவதே ஹ்ரீமிலும் தெரிகிறது. புவனேச்வரியாக பிரபஞ்ச ரூபிணியாகத் த்யானித்தாலும் ஸ்ரீமாதாவாகவே தரிசனம் தருகிருள். காண்பவளும் அவளே. காட்சிப் பொருளும் அவளே. காட்சியும் அவளே. த்யானதத்யாத்ருத்த்யேயரூபா - தியானிப்பவனுக்குத் தேவியைக் கண்டதும் தியானிப்பவனுன தானும் மறைய, தியானம் எனும் செயலும் மறைய, தியானிக்கப்படுபவள் என்ற தேவி நிலையும் மறைய தேவி மட்டும் பிம்பமாகத் தோன்றுகிருள். கண்ணுடியில் மாயத் தோற்றம் என்ற நிலைமாறி கண்ணுடியில் தெரிவதே உண்மைத் தோற்றம் என்பதும் விசித்ரமல்லவா ?

இதனைத் தம் அனுபவமாக ஸாதகன் உணர்ந்தால்மட்டுமே நேரும். வாயால் ஜபிப்பது இந்தக் காட்சியைக் காட்டாது. அதனுல் பவானீ பாவநாகம்யா பாவநாமாத்ரஸந்துஷ்ட ஹ்ருதயா என அழைக்கின்றனர்.

இந்த பாவனை திடமாக அமையவே பல தாரணா -தியானமுறைகளை-முன்னேர்கள் கண்டறிந்ததை - ஸ்ரீபாஸ்கரராயர் தனக்கே உரித்தான வழியில்

விளக்கியுள்ளார். ஆழ்ந்த கருத்துடன் தளராத செயல் முறை கொண்டால் தான் இதில் தடம் பதிக்க முடியும். குருவருள் பாஸ்கரராயருக்குத் துணை நிற்பது போல் நமக்கும் துணைநிற்கக் குருவாய் வந்தருளத் தேவியை வேண்டிநிற்போம்.

தஞ்சையில் ஸ்ரீவாஞ்சாகல்பலதா ஸ்ரீவித்யா கணபதி உபாஸநாபீடம் ஸ்ரீகுருநாதர் அருள் நிரம்பப் பெற்ற ஸ்ரீகுருவின் ஆதேசத்தில் லோகக்ஷேமார்த்தமாகப் பல தெய்வப்பணிகளைச் செய்து வருகிறது. அதன் பேராதரவுடனும் அதனைச் சார்ந்தவர்களின் உதவியுடன் இந்நூல் வெளியாகின்றது. என் ஆத்மசிரேயஸிற்குப் பலவகைகளில் தூண்டு கோலாகவும் வழிகாட்டியாகவும் நான்வழிபடுகிற நடமாடும் தேவியாகவும் உள்ள ஸ்ரீகாஞ்சீகாமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராசார்ய ஸ்ரீசரணர்களின் பேரருள் இதனை இவ்வாறு உருவாக்கித் தந்துள்ளது. ஸ்ரீ சரணர்களின் ஸ்ரீ சரணங்களில் இதனை என் உளமார்ந்த காணிக்கையாக ஸமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீரங்கம் **வைத்ய S.V. ராதாகிருஷ்ணசாஸ்திரீ,**
18.3.2004

எனது உரைநூல் என் ஜ்யேஷ்டஸஹோதரர்
ஸ்ரீ **S.V.** பாலகிருஷ்ணசாஸ்திரீ எழுதிய உரையின்
விளக்கமாகும்.
அது அச்சிடப்பெறவில்லை.
27.2.95ல் எழுதிய அவரது விளக்க முகவுரையிலிருந்து சில பகுதிகள்.

अविघ्नं निघ्नानां अभिलषितसिद्धिं घटयितुं
तव ध्यानं पूजामभिदधति हेतुं गणपते ।
तवालेख्यैकांशः तव पृथुलशुण्डाप्रतिनिधिः
गणेशावर्तो मे भवतु दुरितध्वंसनपटुः ।। १

*ஸ்ரீ கணபதியே ! இடையூறுகளின்றி அடியார்களின் இஷ்டஸித்தியை அமைத்துத்தர, உன் தியானத்தையும் பூஜையையும் ஸாதனமாகப் பெரியோர் குறிப்பிடுவர். உனது உருவகத்தின் ஒரு பகுதியும் உனது துதிக்கையின் மறு உருவமுமான பிள்ளையார் சுழியே எனது இடையூறுகளைக் களைவதில் திறமை பெற்று விளங்கட்டும் !*

विद्या येभ्यो गृहीता पितृ- गुरु -सवयस्-साध्वसाध्वात्मबन्धु -
स्निग्धेभ्यो जीवितेऽस्मिन् अनवर इति मां मानयत्यद्य यावत् ।
तान्वन्देऽथोन्मिषन्तीं मम मनसि सतीं वासनां, या मदर्थे
रामं हेरम्बमम्बामनुनयनशतैः नाथते मङ्गलानि ।।

*பெற்றோர். ஆசிரியர், வகுப்புத்தோழர், நல்லோர், உற்றார், உறவினர், நண்பர் என்று எந்தப் பெரியோர்களிடமிருந்து பெறப்பட்ட கல்வியறிவு இப்பிறவியில் இதுவரை 'நிலை தாழ்ந்தவனல்ல' என்று என்னை மதிக்கச் செய்திருக்கிறதோ, அவர்களை வணங்குகிறேன். பின் எனக்காக ஸ்ரீராமனிடமும் கணபதியிடமும் ஸ்ரீமாதாவிடமும் நன்மை தரவேண்டிக் கெஞ்சுகிற என் மனத்தில் ஆழ்ந்த அந்த நல்வாஸனையையும் வணங்குகிறேன்.*

गुरूणां गुरुमूर्तेश्च कृपया भाव्यते मनाक् ।
वरिवस्यारहस्यार्थः जिज्ञासु परितुष्टये ॥

குருநாதர்கள், குருவடிவிலுள்ள ஸ்ரீமாதா இவர்களது கிருபையால் வரிவஸ்யா ரஹஸ்யத்தின் உட்பொருள், 'ஜிஜ்ஞாஸு'வின் மன நிறைவிற்காக சிறிது விளக்கப்பெறுகிறது.

श्रीवाणीसेवितायाः श्रीमातुः मातुं श्रियं जडः ।
यते लम्बोदरादेशावलम्बः प्रीतये तयोः ॥

லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் தொழுது நிற்கிற ஸ்ரீமாதாவின் பெருமையை அளவிட, அசடு. நான், கணபதியின் கட்டளையைத் துணைகொண்டு அவ்விருவரின் அருள்பெற விழைகிறேன்.

प्रकाशं भास्करस्याज्ञो दिदृक्षुः स्थूलचक्षुषा ।
गालिनीमुद्रिकां कुर्वन् क्षन्तव्यो मन्त्रविद्वरैः ॥

பாஸ்கரரது பிரகாசத்தை - பாஸ்கரராயரின் வரி வஸ்யாரஹஸ்யம் என்ற நூலிற்கு அவரே எழுதித்தந்துள்ள உரையான பிரகாசம் என்ற ஸூரிய ஒளியை - புறக்கண்ணால் காணவிழைகின்ற அசடு நான், காலினீ முத்திரை செய்கிறேன். மந்திர நுட்பமறிந்த பெரியோர் இதனைப் பொறுத்துக் கொள்ளட்டும். (நடுப்பகலில் ஸூரியனைப் பார்த்து மந்திரத்தால் பிரார்த்தனை செய்யும் போது இருவிரல்களையும் முன்னும் பின்னுமாகக் கோர்த்து கண்களை மறைத்துக் கொண்டு சல்லடைக் கண்கள் போன்று விரல்களிடையே உள்ள சிறு சிறு துவாரங்கள் மூலம் சூரியனைக் காண்பது வழக்கம். இது காலினீ முத்திரை)

प्रायोऽनुवादो-भावार्थः क्वापि - कुण्डलना क्वचित् ।
दुर्ज्ञेयाप्रस्तुतार्थेषु गालिनीमुद्रिका मता ॥

பெரும்பாலும் உரைமொழி பெயர்க்கப்படுகிறது. சில இடங்களில் கருத்துரை, சில இடங்களில் எளிதில் விளக்கப்பெற இயலாமலும் தொடர்பில்லாமலுமுள்ள இடங்களில் () என அடைப்புக் குறியிட்டு பொருள் எழுதாமலிருப்பது என்பதே இங்கு காலினீ முத்திரை.

வரிவஸ்யா ரஹஸ்யப்பிரகாச உரை எழுத நேர்ந்தது பற்றிய சிறு விளக்கம்.

25.2.1994 அன்று மாக பௌர்ணமீ. அன்று 'ஜிஜ்ஞாஸு★ என்னிடம் வந்தார்.' தாங்கள் எனக்கு உபதேசித்த பஞ்சதசிக்கு 15 அர்த்தங்கள் உண்டாம். தங்களிடம் அதனைத் தெரிந்து கொள்ளும்படி ஸ்ரீமாதா சொன்னாள்'' என்றார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. 1962ல் என் குருநாதரிடமிருந்து பஞ்சதசீ உபதேசம் பெற்றேன். அவர் எனக்கு மந்திரம் மட்டுமே உபதேசித்தார். பலதடவை பிரார்த்தித்தபின் யந்திரம் கொடுத்தார். சிவபஞ்சாயதனத்துடன் பூஜைசெய்து ஜபம் செய்தேன். பதிமூன்று வயதிலேயே எம் பூர்வீக கிராமமாகிய சிமிழியில் ஸ்ரீராஜேந்திர சோளேச்வராலயத்தில் நவராத்திரியை முன்னிட்டு லக்ஷார்ச்சனைக்காக ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமாவளி - ஸ்ரீலலிதா திரிசதீ பாராயணம் செய்கிற வாய்ப்பு பெற்றிருந்தேன். அப்போது பெற்றிருந்த திடமான ஸம்ஸ்கிருத ஜ்ஞானத்தால் மந்திர ஸம்பந்தமற்ற பொது நாமங்களின் பொருளுணர்ந்து மகிழ்வேன். பஞ்சதசி உபதேசம் பெற்றதும் மந்திரப்பொருள் பற்றித் தெரிந்து கொள்ளும் எண்ணமோ வாய்ப்போ ஏற்படவில்லை. எனவே அன்று 'ஜிஜ்ஞாஸு' கேட்டதும் வியப்படைந்தேன்.

உடன் நினைவிற்கு வந்தது ஸ்ரீபகவத் பாதர்களின் லலிதா திரிசதீபாஷ்யம் தான். ஆனால் அதில் எந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை. சிவராத்திரிக்கு முன் மார்ச்சு முதல் வாரத்தில் ''வரிவஸ்யா ரஹஸ்யத்தில் பொருள்

தரப்பட்டுள்ளது. படித்துச் சொல்லச் சொல்'' என்று தேவியின் உத்தரவு என்று ஜிஜ்ஞாஸு கூறிஞர். தமிழுரையுடன் கூடிய வரிவஸ்யாரஹஸ்ய மூலமும் மற்றும் பல நூல்களும் கிடைத்தும், ஆழம் காண முடியாதநிலை. ''ஸரஸ்வதீ மஹாலயத்தில் வரிவஸ்யா ரஹஸ்ய பாஷ்யத்தைத் தேடச் சொல்'' என்று மேலும் உத்தரவு. அங்கிருந்த அன்பர் பாஸ்கரராயரின் பாஷ்யத்துடன் கூடிய நூலைத் தந்தார். நூல் மிகக் கடினமான தத்துவ விளக்கமுள்ளது. எளிதில் புரிந்து கொள்ளவோ விளக்கவோ இயலாத நிலை. ''மஹாகணபதி மந்திரத்தைச் சில தடவை ஜபம் செய்து படிக்கச் சொல். புரியும்'' என ஜிஜ்ஞாஸு மூலம் உத்தரவு. அவ்வாறு செய்ததும் புரியத் தொடங்கியதே ! ஆச்சரியம் !!

कूपे पश्य पयोनिधावपि घटो गृह्णाति तुल्यं जलम् சொம்பு கிணற்றிலும் கடலிலும் ஆழ முழுக்கினுலும் அது கொள்ளுமளவே நீர் எடுக்கும்'' என்ற பழமொழி. எனினும் ஸ்ரீமாதாவே குருமூர்த்தி. அவளே தனது கருணையால் தன் பக்தரான ஜிஜ்ஞாஸுவிற்கு உணர்த்துமளவு நுட்பமான தத்துவங்களையும் உணர்த்தியருள் பாலித்துள்ளாள். गुरोरनुग्रहेणैव पुमान् पूर्णः प्रजायते । அதன் துணைகொண்டு இந்த விளக்கஉரை அமைந்துள்ளது.

अम्बा-लम्बोदर स्निग्धापाङ्गालोकातिबन्धुरः ।
जिज्ञासुरिह चामुत्र सकलं भद्रमश्नुताम् ॥

# विषयसङ्ग्रहः

पृष्ठसंख्या

உ

श्रीः

श्रीगुरुभ्यो नमः ।

श्रीमहागणपतये नमः ।

श्रीमात्रे नमः ।

# वरिवस्यारहस्यम् ।

## भास्कररायमखिविरचितम्

तदीय प्रकाशव्याख्या समेतम्

तमिल विवरणयुतम्

# வரிவஸ்யா ரஹஸ்யம்

பாஸ்கரராயமகி இயற்றியது

அவரது பிரகாச உரை - தமிழ்விளக்கம்

## प्रथमोऽम्शः - उपोद्घातः

*முதல் அம்சம் - முன்னுரை*

विद्यानां च मनूनां मनुसंख्यानां च विद्यानाम् ।
उपदेष्टा जयतितरां नरसिंहानन्दनाथगुरुः ॥
वरिवस्यारहस्याख्यो ग्रन्थो यः स्वेन निर्मितः ।
तत्र दुर्घटशब्दानामर्थः संक्षिप्य कथ्यते ॥

'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्', 'आचार्यवान् पुरुषो वेद' इत्यादिश्रुत्या गुरूपसदनस्य तत्त्वज्ञानजनकत्वात् प्रथमं सकलमन्त्राधिष्ठातृदेवतापररूपं गुरुं श्लेषेण तद्दैवतं नरसिंहं च विघ्नविघाताय स्तुवन् संप्रदायं तदाज्ञयैव प्रवर्तयति—

வித்யைகள் எனக் குறிப்பிடப் பெறுகிற மந்திரங்களையும் மற்ற மந்திரங்களையும் பதினன்கு வித்யாஸ்தானங்களையும் உபதேசித்தருளிய ஸ்ரீ நரஸிம்ஹா நந்தநாதர் என்ற குரு மிகப் பெருமையுடன் விளங்குகிறுர். வரிவஸ்யா ரஹஸ்யம் என்று தன்ஞல் எழுதப்பட்ட நூலில், எளிதில் பொருளைப் பொருத்தி உணர முடியாதபடி அமைந்த சொற்களின் பொருள் சுருக்கிக் கூறப்படுகிறது.

''தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத்''. ஆசார்யவான் புருஷோ வேத'' ''அந்தப்பரம் பொருளை நன்கு உணர ஸாதகன் குருவை நாடவேண்டும். ''ஆசாரியரைத் துணையாகக் கொண்டவனே பரம்பொருளை உணர்வான்'' என்றவாறு வேதம் கூறியபடி குருவை நாடுவதே தத்துவ அறிவைத் தருமாதலால் எல்லா மந்திர தேவதைகளின் மாற்றுருவமான குருவையும் அந்த குருவின் இஷ்ட தைவமான நரஸிம்ஹரையும் நூலியற்றுவதில் தடை நீக்க வேண்டி சிலேடைச் சொற்களால் துதிப்பவராக ஸ்ரீவித்யா வழிபாட்டுவழி முறையைக் குருவின் ஆணைப்படி தொடங்குகிறுர்.''

**வித்யைகள்—** மந்திரத்தின் தேவதை பெண் ஆனுல் **வித்யை**. ஆண் ஆனுல் **மந்திரம்** அல்லது **மநு**.

**வித்யா ஸ்தானம்** 14 - ருக், யஜுஸ், ஸாமம் அதர்வம் என்று நான்கு வேதங்கள், சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று ஆறுவேதாங்கங்கள், மீமாம்ஸா, நியாயம், புராணம், தர்மசாஸ்திரம் என்று நான்கு உபாங்கங்கள் என இவை.

**குரு—** இவர் எல்லா மந்திரங்களுக்கும் அவற்றின் தேவதைகளுக்கும் மாற்றுருவமாவார். குருவிடம் மந்திர உப தேசம் பெற்றவன், தனது குரு, அவர் உபதேசித்த மந்திரம், அதன் தேவதை இவர்களின் இடையே வேற்றுமை காணுமல், ''குருவின் வாக்கே மந்திரமானது. மந்திரமும் அதன் தேவதையும் வேறல்ல. குருவே மந்திரமும் தேவதையும்'' என்று ஐக்யபாவனை கொண்டு குருவைத் தியானித்து, குருவையே மந்திரதேவதைகளின் மாற்றுருவமாகக் கொள்வது மரபு-

நருஸிம்ஹாத்வரீ— பாஸ்கரராயரின் குரு நிருஸிம்ஹாத்த்வரி. ஆந்திரதேசத்தில் சிறந்த வித்வான். நரஸிம்ஹாநந்தநாதர் என்று அவருக்கு தீக்ஷாநாமம். அவர் நிருஸிம்ஹரின் உபாஸகர். இந்த மங்கள சுலோகத்தில் தன் குருவையும் குருவின் உபாஸனை தேவதையையும் சிலேடையாகத் துதிக்கிறுர். இருமாறுபட்ட பொருள்களை ஒரே சொல்லால் குறிப்பிடுவது இருபொருள் அணி எனும் சிலேடையின் சிறப்பு.

வரிவஸ்யா— பூஜை, வழிபாடு, அருகிலிருந்து பணிவிடை, சேவை. யந்திரத்திலோ விக்ரகத்திலோ சைதன்யமூர்த்தி என்ற பாவனையுடன் அருகிலிருந்து வழிபட்டுப் பணிவிடை செய்து அருள் பெறுவதற்காக, எண்ணமும் வாக்கும் செயலும் இணைந்து பணிபுரிதலாகும். அதன் உட்பொருளும் மறைபொருளும் ரஹஸ்யமாகும்.

மங்கள சுலோகத்தில் தனது குருவையும் குருவின் உபாசனை தெய்வத்தையும் சிலேடையால் துதிக்கிறுர்.

प्रह्लादाभीष्टदाने विबुधसमुदयस्तूयमानापदानेऽ-
शेषक्षोणीभृदन्तः प्रविलसितपदाहोबलक्षेत्रगर्भात् ।
प्रादुर्भूते हिरण्यद्विरदमतिमदध्वान्ततन्त्रं निहन्तुं
धीरे सच्छास्त्रयोनौ मम भुवनगुरावस्तु भक्तिर्नृसिंहे ॥ १ ॥

प्रह्लादाख्यो दैत्यः, तदभीष्टानां दानं यस्मात्, पक्षे प्रकृष्टो ह्लादो ब्रह्मानन्दः, तस्य, अभीष्टानां धर्मार्थकामानां च दानं यस्मात्; तस्मिन् । विबुधानां देवानां पण्डितानां च समुदयेन समुदायेन स्तूयमानमपदानं पूर्वचरित्रं यस्य तस्मिन् । 'अपदानं कर्म वृत्तम्' इत्यमरः । हिरण्याख्यो योग्यतया हिरण्यकशिपुः, नामैकदेशे नामग्रहणात्; स एव द्विरदः, सिंहवध्यत्वात्; तम् । कीदृशं तम् ? अतिशयितमद एवाज्ञानपरिणामत्वाद् ध्वान्तम्, तत्तन्त्रं तदधीनम्, मदपरवशमिति यावत्, पक्षे हिरण्यं धनोपलक्षणम्, द्विरदाः सेनाङ्गोपलक्षणम्,

मतिरसच्छास्त्रज्ञानम्, तत्संबन्धी मदो येषां तेषां ध्वान्तानां ध्वकारोऽन्ते येषां नाम्नि तेषां माध्वानां तन्त्रं शास्त्रं निहन्तुं, शेषक्षोणीभृतः शेषाचलस्यान्तः प्रविलसितं शोभमानं पदं स्थानं यस्याहोबलाख्य-क्षेत्रस्य, तस्य गर्भान्मध्यात्, पक्षे, अशेषाणां समस्तानां क्षोणीभृतां राज्ञां मध्ये प्रविलसिते पदे चरणौ यस्य अहोबलाख्यस्य पुरुषधौरेयस्य, तस्य क्षेत्रं पत्नी, तस्या गर्भात्, प्रादुर्भूते; धीरे धैर्यशालिनि, पक्षे धियं रातीति धीरः पण्डितस्तस्मिन्; सतां शास्त्राणां योनिः कारणम्, 'यस्य निःश्वसितं वेदाः', 'छन्दांसि जज्ञिरे तस्मात्' इत्यादिश्रवणात्; सच्छास्त्राण्येव योनिर्ज्ञापकहेतुर्यस्येति वा, 'तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि' इति श्रवणात्, शास्त्रयोनित्वाधिकरणे द्वेधापि व्याख्यानात्; पक्षे सच्छास्त्राणां योनिः कर्ता, ग्रन्थकर्तेति यावत्; तस्मिन् भुवनगुरौ नृसिंहे नरकेसरिणि, नृसिंहनामके च मम भक्तिरस्त्विति प्रार्थना । (अत्रोपमेयोपमाया उपमाया अभेदस्य वा ध्वनिः । श्लेषोऽलंकारः । सोऽपि च प्रकृतोभयविषयकः सभङ्गोऽभङ्गश्च । स्रग्धरा वृत्तम्) ॥ १ ॥

பகவான் நரஸிம்ஹரிடத்தில் தன் பக்தி அமைய வேண்டுகிறார். ப்ரஹ்லாதாபீஷ்டதாநே - பிரஹ்லாதனின் கோரிக்கைகளை வழங்கியவரும், விபுதஸமுதய ஸ்தூயமாநாபதாநே - தேவர் கூட்டத்தால் பாராட்டப்பெற்ற அருட் செயல்கள் உள்ளவரும், சேஷ க்ஷோணீ ப்ப்ருத் - அந்த:- ப்ரவிலஸித - பத - அஹோபலக்ஷேத்ரகர்ப்பாத் அதிமதத்த்வாந்த - தந்த்ரம், ஹிரண்யத்விரதம் நிஹந்தும் ப்ராதுர்ப்பூதே - எல்லா சேஷாத்ரி மலைகளின் இடையே ஒளியுடன் விளங்குகிற அஹோபல மலையின் உள்ளே அளவு கடந்த செருக்கால் செயல் முறையில் இருளடைந்த ஹிரண்யகசிபு என்ற யானையைக் கொல்லத் தோன்றியவரும், தீரே ஸச்சாஸ்த்ரயோநௌ - தீரம் மிக்கவரும் வேதங்களின் உட்பொருளானவரும், புவநகுரௌ - உலகிற்கு வழிகாட்டியானவருமான ந்ருஸிம்ஹே - நரசிம்ஹரிடத்தில் மம பக்தி: அஸ்து - எனது பக்தி அமையட்டும்.

சிலேடையால் நரஸிம்ஹரின் மாற்றுருவமான தன் குருநாதர் நிருஸிம்ஹானந்தநாதரிடம் தனி பக்தி அமையவேண்டுகிறுர். **ப்ரஹ்லாதாபீஷ்டதாநே** - பேரானந்தத்தையும் அறம் பொருள் இன்பம் என விருப்பிற்குரியவற்றையும் அருள்பவரும், **விபுதஸமுதய ஸ்தூயமாநாபதாநே**- அறிவாளிகளின் கூட்டத்தால் பாராட்டப்பெற்ற அறிவாற்றலாலான புகழுடையவரும், **அசேஷக்ஷோணீப்ப்ருதந்த:- ப்ரவிலஸித - பத - அஹோபல க்ஷேத்ரகர்ப்பாத் ஹிரண்யத் விரத - மதி - மத - த்த்வாந்த தந்த்ரம் நிஹந்தும் ப்ராதுர்ப்பூதே** - எல்லா அரசர்களது மதிப்பிற்குரிய அஹோபல பண்டிதரின் மனைவியின் கருவிலிருந்து செல்வம், யானை, தடம் மாறிய அறிவுத்திறன், அதனுலான செருக்கு என்பனவற்றுல் இருளடைந்த செயல்முறை கொண்டவர்களை அழிக்கத் தோன்றியவரும், **தீரே**-தீரரும், **ஸத்சாஸ்த்ரயோநௌ** நல்ல சாஸ்திரநூல்களின் தோற்றுவாயும் **புவநகுரௌ**-உலகின் ஆசாரியருமான **ந்ருஸிம்ஹே** - நிருஸிம்ஹ குருவிடம் மம பக்தி: அஸ்து - என் பக்தி அமையட்டும்.

பகவான் ஸ்ரீனிவாஸரைத் தாங்க ஆதிசேஷன் சேஷாசலங்கள் என்ற மலைவரிசை வடிவம் ஏற்கிறுர். சேஷாசல வரிசையில் அஹோபலமும் (அஹோபிலமும்) இடம் பெறுகிறது. நிருஸிம்ஹாத்வரியின் தந்தை அஹோபல பண்டிதர். வேதம் முதலான சாஸ்திரங்கள் அனைத்தும் பரம்பொருளின் மூச்சுக்காற்று. அதனுல் பரம்பொருளே சாஸ்திரங்களின் தோற்றுவாய் (யோநி). அவரை அறிய வேதம் முதலியவையே பிரமாணநூல்கள் (யோநி) என்பதால் நிருஸிம்ஹர் ஸத்சாஸ்திரயோநி ஆகிறுர். குருவும் பாஸ்கரருக்கு சாஸ்திர அறிவைப் புகட்டியவரானதால் ஸச்சாஸ்த்ரயோநி ஆகிறுர். த்தவாந்தம் - இருள். பிரம்மத்தில் அத்வைத நிலையை உணர இயலாத இருள் சூழ்நிலையிலுள்ளவர்களும் த்த்வாந்தர்களே. (அத்வைதத்தை மறுக்கிற மத்வமதத்தினரை த்த்வாந்தர் - த்த்வ என்ற எழுத்தைக் கடைசியில் கொண்ட மாத்த்வர்கள் என உரை கூறுகிறது.) தீரர் - எதிரியை எதிர்த்து நிற்பவர்.

*அறிவை நல்வழியில் செலுத்துபவர். (1)*

*அறிவாளிகளின் கூட்டத்தை மகிழ்ச்சியடையச் செய்யவே இந்த முயற்சி என்கிறார்—*

आ प्राचः कामरूपाद् द्रुहिणसुतनदप्लाविताद प्रतीचो
गान्धारात् सिन्धुसान्द्राद्रघुवरचरितादा च सेतोरवाचः।
आ केदारादुदीचस्तुहिनगहनतः सन्ति विद्वत्समाजा
ये ये तानेष यत्नः सुखयतु समजान् कश्चमत्कर्तुमीष्टे ॥ २

कामरूपगान्धारौ देशौ । सेतुकेदारौ क्षेत्रे । द्रुहिणसुतसिन्धू नदविशेषौ । विदुषां विद्योपासकानां समाजाः, 'न शिल्पादिज्ञानयुक्ते विद्वच्छब्दः प्रयुज्यते' इत्यादिना विद्वच्छब्दस्योपासकपरताया-स्त्रिशत्यां प्रदर्शनात् । समजाः पशुगणाः । 'पशूनां समजोऽन्येषां समाजः' इत्यमरः ॥ २ ॥

*கிழக்கே பிரும்மபுத்ரா ஆற்றின் நீரால் வளம்பெற்ற காமரூபத்திற்கும் மேற்கே ஸிந்து நீர்பாய்ந்து வளம் பெற்ற காந்தாரத்திற்கும் தெற்கே ஸ்ரீராமன் திருவடி பதித்த ஸேதுவிற்கும், வடக்கே பனியால் இறுகிய கேதாரத்திற்கும் இடையே வசிக்கின்ற அறிவாளிகளின் கூட்டத்திற்கு இந்த முயற்சி இன்பம் தரட்டும். அறிவற்ற மந்தை உணர்ச்சியுள்ளவரை மகிழ்விக்க எவரால் இயலும் ?.*

*கிழக்கில் காமரூபமும் மேற்கில் காந்தாரமும் பாரதத்தின் எல்லைகள். இவை தேசங்கள். தெற்கில் ஸேதுவும் வடக்கே கேதாரமும் எல்லைகள். இவைக்ஷேத்திரங்கள். சிந்துவும் பிரும்மபுத்திராவும் மேற்கு நோக்கி ஓடிக்கடலில் கலப்பதால் நதங்கள் (ஆண்பால்) கிழக்கில் ஓடிக்கலப்பவை நதிகள் -(பெண்பால்). பேரறிவாளரின் கூட்டத்தை ஸமாஜம் என்றும். அறிவிலிகளின் கூட்டத்தை ஸமஜம் (ஆட்டுமந்தை) என்றும் கூறுவர். காமரூபம் - அஸாமின் மேற்குப்பகுதியும் வங்க தேசத்தின் கிழக்குப்பகுதியும் கொண்ட நாடு. காந்தாரம் -*

*பாரதத்தின் வடஎல்லை - கண்டஹார் என்ற பகுதி. பாரதத்தின் மேற்கில் உள்ள கடலும் ஸிந்து. அதில் கலக்கின்ற நதியும் ஸிந்து. இங்கு ஸிந்து நதத்தால் செழிப்புற்ற காந்தாரம் எல்லை. (2)*

स जयति महान् प्रकाशो यस्मिन् दृष्टे न दृश्यते किमपि ।
कथमिव तस्मिञ्ज्ञाते सर्वं विज्ञातमुच्यते वेदे ॥ ३ ॥

*அந்தப் பெருமை மிக்க பேரொளி எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டதாக, எல்லாவற்றையும் விடமேலானதாக தனித்து விளங்குகிறது. அதனை உணர்ந்த நிலையில், பலவாக இதுகாறும் உணரப்பெற்ற எதுவும் தனித்து உணரப் பெறவில்லை. இந்நிலையில் ''அதனை உணர்ந்தால் எல்லாம் உணர்ந்ததாக ஆகும்'' என்று வேதம் கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?*

स सर्वेषामात्मत्वेन प्रसिद्धः, महान् देशकालाद्यनवच्छिन्नः पराप्रकाश्यः; प्रकाशः सर्वदा अनावृतात्मस्वरूपज्योतिः, 'स्वरूपज्योतिरेवान्तः' इति रहस्यागमात्, 'न तत्र सूर्यो भाति' इत्यादिश्रवणाच्च । जयति सर्वोत्कर्षेण वर्तते । यस्मिन्नधिष्ठाने दृष्टे निर्विकल्पात्मकचरमवृत्तिविषयीकृते सति किमपि दृश्यं न दृश्यते, अधिष्ठानज्ञाननाश्यत्वात् । अत एवैकविज्ञानेन सर्वविज्ञानं श्रुतावुक्तं कथं संगच्छत इति साश्चर्यमाह— कथमिवेति । अथवा, विवर्तवादं वेदान्तिसंमतं परिणामवादी तान्त्रिको दूषयति- कथमिवेति । तन्मते मृद्घटादिदृष्टान्तानुपपत्तिरित्यर्थः ।

*வழிபாடு, வழிபாட்டிற்குரியது, வழிபடும் முறை, இவற்றின் வெளித்தோற்றத்தைக் காண்பிப்பதோடு நில்லாமல் உட்கருத்தையும் விளக்குவதே இந்நூலின் முக்கிய நோக்கம். வழிபடுபவனின் நிலைக்கேற்ப வழிபாடு மாறக்கூடும். எனினும் வழிபடப்பெறுவது எது என்பதை உணர்ந்தபின் அதற்கேற்ற வழிபாட்டை அமைத்துக் கொள்வதே சிறந்தது. அப்போது தான் வழிபடுகிற நிலைக்கு*

ஸாதகன் தன்னை உயர்த்திக்கொள்ள முடியும். வழிபடப் பெறுவது எது ? இதனை முதல் மூன்று சுலோகங்களால் விளக்குகிறார்.

அது ஓர் பேரொளி. அது தான் ஆத்மா. எல்லோரும் தன் தன் ஆத்மா என்று குறிப்பிடுவதும் எல்லோரது ஆத்மாவும் அதே. பேரொளியான அது பேரிருக்கை கொண்டது. அங்கு இங்கு என இடப்பரப்பால் குறுகிய வட்டத்திலான இருக்கையில் அதனைக்காண இயலாது. அப்போது இப்போது என்ற காலவரைக்கு உட்படாதது. அது இது எனத் தனித்து வெவ்வேறாகச் சுட்டிக் காட்ட முடியாதது.

காட்சிக்கு உட்படுகிற பொருள் அனைத்தையும் அவற்றைக் காட்டிலும் வேறுபட்ட ஒளி விளக்கிக்காட்டுகிறது. அந்த ஒளியின்றி எதனையும் காணமுடியாது. சூரியனின் அல்லது தீபத்தின் ஒளி உதவாவிடில் கண்கள் எதனையும் பார்க்கமாட்டா. கண்களுக்கும் காட்சிப்பொருளுக்கும் அப்பால், அவற்றிலிருந்து வேறுபட்ட ஒளி ஒன்று காட்சிக்குத் தேவை. இங்கு இந்தப் பேரொளியைப் புலப்படுத்துகிற வேறு ஓர் ஒளி இல்லை. எந்த ஒளிப்பொருளும் இந்தப் பேரொளியை விளக்காது. இதன் பேரிருக்கை எந்த ஒளி வட்டத்தினுள்ளும் அடங்காது. அது விளங்காப் பொருளும் அல்ல. அது தன்னைத்தானே விளக்கிக் கொள்ளும். அப்படி அது தானே தன்னை விளக்கிக் கொள்ளாவிடில் எவரும் அதை விளக்கவோ காணவோ முடியாது. பௌதிகவட்டத்திற்கு அப்பாற்பட்ட பேரொளியை பௌதிகவட்டத்திற்கு உட்பட்டே செயல்படுகிற பொறிகளும் மனமும் காண இயலாது. இவற்றால் காண இயலாதென்பதால் அப்படி ஒரு பொருள் இருப்பதற்கில்லை என்று கொள்வதும் தவறு. ''**ஸ்வரூபஜ்யோதிரேவ அந்த:**- உள்ளே பேரொளியாக அது உணரப்பெறும்'' என்று ரஹஸ்யாகமம் கூறும். ''**ந தத்ரஸூர்யோ பாதி** அந்தப்பேரொளியின் முன் சூரியன் ஒளியிழந்து காணப்பெறுவான்.'' என வேதம் கூறும். அந்த ஒளியின் முன் சூரியன் இருப்பதே தெரியாது. சூரியன் அந்த ஒளியில் கரைந்து மறைவான்.

எப்போதும் எதனுலும் எவ்வாறும் அது மாறுபடாதது. உலகம் பலவாக அது இது எனப் பல தோற்றங்கள் கொண்டது. பலவாகத் தோன்ருவிடில் உலகம் என்ற உணர்வே ஏற்படாது. இப்படிப் பலவாகத் தோன்றுவதை இனம் இனமாக வகை வகையாகப்பிரித்து வகுக்கும் போது அதன் எண்ணற்ற நிலை எண்ணுதலுக்கு உட்படும். அவ்வாறு பகுத்தபின் அவற்றின் மூலப்பொருள் எது என இனம் கண்டு தொகுக்கும்போது மேலும் எண் குறையும். அம்மூலப்பொருட்களின் மூலப்பொருள் எனக்காண. முற்படின் எல்லாவற்றின் மூலப்பொருள் ஒன்றே என்று உணரமுடியும். வளையல் சங்கிலி காதணி என்று பலவாக உணர்ந்ததைத் தங்கம் என்ற மூலப்பொருள் நிலையில் உணர்ந்ததும், வளையலைத் தங்கமாகவும், தங்கத்தை வளையலாகவும் காணலாம் எனத் தேறுகிறது. தங்கத்தை வளையலாகக் காண்பதைவிட வளையலைத் தங்கமாகக் காண்பது சற்று உண்மையான காட்சி. தங்கத்தின் மூலப்பொருளைக் கண்டறியும் போது தங்கமும் மறைந்து அந்த மூலப்பொருளைக் கண்டதே உண்மைக் காட்சி எனத்தேறும்.

தோன்றும் பொருள் அனைத்திற்கும் ஒரு ஆதாரம் உண்டு. அது அதன் மூலப்பொருள் நிலை. வளையலாகக் காணும் போது ஆதாரமான தங்கம் பின் புலனுக மறைகிறது. ஆதாரமான தங்கமாகக் காணும் போது வளையல் என்ற தோற்றநிலை மறைகிறது. இவற்றினுள் எது உண்மை ? தங்கமே.

சித்தத்தின் போக்கைக் கட்டுப்படுத்தி மடைமாற்றி உண்மைக் காட்சிக்கான தாரணை தியானம் என்ற மேனிலைப் பயிற்சியில் தேரியவன், மேலெழுந்தவாரியான தோற்றத்தை விலக்கி மூலப்பொருளைக் காண்கிற திறம் பெறுகிருன். அது இது; அதுவா இதுவா ?; இந்த உருவில் இந்தக்கால வரையில் இவனுல் கண்டதென்றவாறு கிளம்பும் விகல்பங்கள் (தோற்ற வேறுபாடுகள்) மறையும். எல்லாமாக - பலவாகக் கண்டவை மெய்ப்பொருள் அல்ல என்று உணர்வான். எல்லாமாக - பலவாகக் காட்சி தந்தது ஆதாரமான இந்த மூலப்பொருளே என்ற உணர்வு முன்நிற்கும்.

இது நிர்விகல்ப உணர்வு நிலை. எல்லாம் ஒரே மூலப்பொருளின் விரிந்த (பிரபஞ்ச) தோற்றமே - வெளிப்பாடே. அதுவாக இதுவாக, அது இதனைக்காட்டிலும் உருவிலும் செயலிலும் வேறுபட்டதாக, அதுவானுல் அப்படியிருக்கும்; இதுவானுல் இப்படி இருக்கும் என்றவாறு பல ஹேஷ்யங்களுக்கு இடம் தருவதாகக் கருதியதனைத்தும் கற்பனையே. கற்பனையும் நொடிக்கு நொடி வேறுபடலாம். இந்த கற்பனைவேறுபாட்டிற்கு உட்படாத நிர்விகல்பமாக உணரப் பெறுவதே ஆத்மா எனும் மூலப் பொருள்.

குடம், ஆடை, நகை என்றவாறு தோன்றும் பொருளுக்கு மண், பருத்தி, தங்கம் என்பவை அதிஷ்டானம் (ஆதாரம்). அதிஷ்டானம் என்ற மூலப்பொருளில் கருத்து ஒன்றினுல் மட்டுமே, தோன்றுமளவில் தெரிகிற உருவகம் (விகல்பங்கள் அல்லது பிரகாரங்கள்) மெய்யென்ற நிலே மறையும். அதிஷ்டானமாகவே தெரிகிற கடைசி சித்தப்போக்கை **நிர்விகல்பாத்மக சரமவிருத்தி** என்பர். அப்போது விகல்பங்களாகத் தெரிகிற காட்சி நிலே உணரப்பெறுது. அதிஷ்டானம் காணில் விகல்பம் மறையும்.

அந்த ஒன்றை (அதிஷ்டானத்தை)க் கண்டால், எல்லாம் (தோற்றவிகல்பங்கள்) மறையும் என்பது முடிவு. **தஸ்மிந் த்ருஷ்டே நத்ருச்யதே கிமபி.** அப்படியிருக்க அந்த ஒன்றைக் கண்டால் எல்லாம் கண்டதாகும். **யஸ்மிந் விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி** என்று உபநிடதவாக்யம் கூறுவது எப்படிப் பொருந்தும் ? ஆராய்கிறுர்.

மூலப்பொருள் அதன் மூல நிலேயிலேயே நிற்கவில்லை. பரம் பொருளிடமிருந்து தோன்றிய மூலப்ரக்ருதி அனேத்திற்கும் மூலப்பொருள். பிரகிருதி என்ற பரிணுமமடையாத நிலையிலிருந்து அது விக்ருதி என்ற பரிணுமத்திற்குட்படுகிற நிலைக்கு வந்தது. பிரகிருதி நிலேயில் உலகமெனப் பலவாகக் காட்சி தரமுடியாது. விக்ருதிநிலேயில் மஹத் அஹங்காரம் பூதஸூக்ஷ்மம் பூதங்களின் பஞ்சீகரணம், சரமும் அசரமுமான இந்த உலகம் என்ற பரிணாமம் வரிசையாக நேர்ந்தது.

*உலகமானது காட்சிப்பொருளாகும்போது இருநிலைகள். கயிறு கயிருகவே தெரிவது மெய். கயிறு பாம்பாகத் தெரிவது மெய்யல்ல. காண்பவனுக்குக் காணும் போது பாம்பாகவே தெரிவதால் அவனளவில் அப்போது மெய். கயிற்றைக் கயிருகக் கண்ட கண்களே தான் இப்போது பாம்பாகக் காண்கின்றன. இது மெய்யல்ல என்பது எப்படி ?*

*கயிற்றைச் கயிருகக் காண்கையில் அதிஷ்டானமும் தோற்றமும் மாறுபடவில்லை. கயிறு பாம்பாகத் தெரிகிற போது இரண்டும் மாறுபடுகின்றன. அதிஷ்டானமும் தோற்றமும் பொருந்தினுல் மெய். வேறுபட்டால் மெய்யல்ல.*

*'நான் - எனது' என்ற வட்டத்திற்கு உட்பட்டே காட்சியின் மெய் நிலை உணரப்பெறுகிறது. உலகம் உலகமாக இருக்கும்போது ஒரு குழப்பமுமில்லை. உலகை நான் எனது என்ற குறுகிய வட்டத்தில் தான் பார்க்கிறேன். பிறர் கண்களில் கயிருகப்படுவதே என் கண்களில் பாம்பாகப்படுகிறது. தோற்றத்தைப் பொருட்படுத்தாமல் அதிஷ்டானத்தைக் காண்பவனே மெய்ஞ்ஞானி. அதிஷ்டானத்தைக் காண்பவன் தோற்றத்தைப் பற்றி ஆராய்வதில்லை. அதனுல்* **யஸ்மிந் த்ருஷ்டே நத்ருச்யதே கிமபி** *என்பது சரி: அதிஷ்டானத்தைத் தவிர வேறென்றையும் காணவில்லை. அப்படி யானுல்* **''ஏகவிஜ்ஞாநேந ஸர்வம் விஜ்ஞாதம் பவதி''** *''அந்த ஒன்றை அறிவதால் எல்லாம் அறிந்ததாகும்'' என்பது எப்படிப் பொருந்தும் ?*

अत्रेयं तान्त्रिकप्रक्रिया— 'इच्छामि', 'जानामि' इत्यादावुत्तमपुरुषान्तर्भासमानं स्फुरणान्वयि ज्ञानमेव प्रकाशाभिधं ब्रह्म । तच्च सर्वज्ञत्व-सर्वेश्वरत्व-सर्वकर्तृत्व-पूर्णत्व-व्यापकत्वादिशक्तिसंवलितम्। तस्य च आनन्दरूपांश एव स्फुरणं परा अहंता, विमर्शः, परा ललिता भट्टारिका, त्रिपुरसुन्दरीत्यादिपदैर्व्यवह्रियते । उक्तं च विरूपाक्षपञ्चाशिकायां विश्वशरीरस्कन्धे 'ईश्वरता कर्तृत्वं स्वतन्त्रता

चित्स्वरूपता चेति । एतेऽहंतायाः किल पर्यायाः सद्भिरुच्यन्ते ॥'
इति । पराहंतामन्तरेणेदंताया असंस्फुरणादहमिदमोः ससंबन्धिकत्वात्, इदंपदगम्यस्य दृश्यस्याहंतारूपशक्त्या तद्विशिष्टब्रह्मणा वा जन्यत्वम् । तच्च दृश्यं तत्परिणाम एव, 'तस्यां परिणतायां तु न कश्चित् पर इष्यते' इति वामकेश्वरतन्त्रात्, 'वाचारम्भणं विकारः' इत्यादिश्रुतीनां तत्रैव स्वारस्याच्च । शक्तिशक्तिमतोरुपादानोपादेययोरत्यन्तमभेदः, न पुनरौपनिषदादिवद्भेदाभेदौ । अत एव 'सर्वं खल्विदं ब्रह्म' इति सामानाधिकरण्यमभेदे, न पुनर्बाधायाम् ।

தந்திர சாஸ்திர ரீதியில் ஒரு விளக்கம் உண்டு. விரும்புகிறேன், அறிகிறேன், செய்கிறேன் என்று ஏற்படுகிற உணர்வில் விருப்பம் அறிவு செயல் என்றவற்றிற்கு நான் என்பதுடன் உள்ள தொடர்பை 'றேன்' என்ற தன்னிலை (உத்தமபுருஷன்)க்கான விகுதி காட்டுகிறது. 'றேன்' என்பது நானின் வெளிப்பாடு (ஸ்ப்புரணம்). விரும்புகிறேன் என்பதால் விரும்புவதாக உணர்வு சித் சக்தியின் துடிப்பாக—அலைவரிசையாக வெளிப்படுகிறது. அறிகிறேன் எனும் போது அறிவதாகிய உணர்வும், செய்கிறேன் எனும் போது செயலாகிற உணர்வும், அந்த சித்சக்தியின் ஸ்புரணத்தில் கலக்கிறது. விருப்பம் அறிவு செயல் என்ற மூன்று உணர்வுகளும் மூலமான சித்சக்தி ஸ்ப்புரணத்தை ஆதாரமாகக் கொண்டவை. சித்சக்தி என்ற பேருணர்வே எல்லா உணர்வுகளுக்கும் அதிஷ்டானம். பேரறிவும் பேராற்றலும் பேரிருக்கையும் பேராண்மையும் பேராளுமையும் எங்கும் நீக்க மற்ற நிறைவும் விரிவும் எனப் பல சக்தித்துடிப்புகளின் மூல நிலையான அது பிரகாசம் என்ற பரம்பொருளே. அதன் வெளிப்பாடே பராசக்தி, பராஹந்தை என்ற பராஹங்காரம்; இதனையே **विमर्श** என்பர். பராசக்தி லலிதா பரா பட்டாரிகா, திரிபுரஸுந்தரி என தந்திரங்கள் கூறும். ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாம உரையில் (நா.576) **मत्ता** என்ற நாமத்தின் விளக்கத்தில் **मत् शब्दः अस्मदर्थकः । तस्य भावः मत्ता । परशिवनिष्ठ पराहन्तारूपा इत्यर्थः ।** என்ற விளக்கமும் இதனை ஒட்டியதே.

*அது இது (இதந்தா) என்று வெளிப்பொருளை உணர்த்த சித் சக்தியின் ஸ்புரணம் முற்படும் போது, நான் என்ற தனி உணர்வும் (அஹந்தாவும்) முன்நிற்கிறது. இதந்தா தனிப்படாவிடில் அஹந்தாவும் தனியாக வெளிப்படாது. பராஹந்தாவில் அது அடங்கி நிற்கும். நான் என்ற தனி உணர்வால் அது இது எனக் காணலாம். அது இது என உணரநேர்ந்தால் தான், நான் என்ற உணர்வு முன் நிலைப்படும். இதந்தாவும் அஹந்தாவும் நெருங்கிய தொடர்புள்ளவை. இந்த இதந்தையும் அகந்தையும் விமர்சசக்தியின் விரிவு. விமர்சம் பிரகாசமாகிய பரம்பொருளின் வெளிப்படுநிலை.*

*காணப்படும் உலகமனைத்தும் பராஹந்தையின் பரிணாமமே.* ''**தஸ்யாம் பரிணதாயாம் து நகஸ்சித் பர இஷ்யதே**'' *(எல்லாம் அதன் பரிணமமெனில் எதுவும் அதைக் காட்டிலும் வேறுபட்டதாகக் கொள்ள முடியாது.) என வாமகேச்வர தந்திரம் கூறும்.* ''**வாசாரம்பணம் விகாரோ நாமதேயம்**'' - *(சொல்லளவில் பெயரளவில் உருமாற்றம் என்ற அளவில் அவை வேறுபடலாமே தவிர உண்மையில் வேறுபடவில்லை) என வேதம் கூறுவதும் இந்த விளக்கத்திற்கே ஏற்புடையது. சக்தியும் சக்தியுடையவனும் வெவ்வேறல்ல. காரணப்பொருளும் காரியப்பொருளும் வேறுபட்டதல்ல; இரண்டும் ஒன்றே. வியவஹாரநிலையில் தனித்தனி; உண்மை நிலையில் வேறல்ல என்று ஒன்றிலேயே மாறுபட்ட நிலைகளில் வேற்றுமையும் வேற்றுமையின்மையும் என்பது கொள்ளத்தக்கதே.*

*''ஸர்வம் க்கலு இதம் ப்ரம்ஹ'' ('இது அனைத்தும் பிரும்மமே') என்ற ஒரு நிலைப்பாடும் இரண்டும் ஒன்றே என்பதில் தான். மற்றொன்று இல்லை என்ற பொருளில் அல்ல. பிரம்மமும் பிரபஞ்சமும் ஒன்று தான் என்றால் பிரபஞ்சமும் பிரம்மத்தின் வடிவமே என்று கொள்ளலாமே தவிர, பிரபஞ்சம் கிடையாது. அது பொய் என்று கொள்வது சரியல்ல.*

अद्वैतश्रुतयः सर्वा अप्येतदभिप्रायिका एवाविरुद्धाः । सर्वप्रमाणमूर्धन्यया श्रुत्या तदनुसारितन्त्रैश्चाद्वैते कथिते, तद्विरुद्धत्वेन भासमानः कार्यकारणयोर्भेदांश एव कल्पित आस्तां, न पुनः सर्वोऽपि प्रपञ्चः । 'नेह नानास्ति किंचन' इत्यादिश्रुतिष्वपि भेदांशस्यैव निषेधो न प्रपञ्चस्य । 'एकमेवाद्वितीयम्' इत्यादौ श्रूयमाणो भेदवत्प्रपञ्चाभावोऽपि विशेषणाभावप्रयुक्त एव ।

अत एव भामत्यां हाटकमकुटग्रन्थे भेदस्यैव हाटकन्यून-सत्ताकत्वं न मकुटस्योक्तम्, परिणामस्य परिणामिसमानसत्ता-कत्वावश्यिकत्वात् । 'मायामात्रमिदं द्वैतम्' इत्यत्रापि द्वैतशब्देन भेदस्यैव मिथ्यात्वमुच्यते, न पुनर्भेदवतः; तथात्वे तु प्रतियोगिता-संबन्धेन जगत इवानुयोगितासंबन्धेन ब्रह्मणोऽपि भेदवत्त्वस्य सत्त्वात् सदसद्भ्यामभावो निरूप्यत इति न्यायसिद्धत्वा-विशेषान्मिथ्यात्वापत्तेः । ततश्च श्रुतेरपि परिणामवाद एव संमतः सिध्यति । भगवता व्यासेनापि 'प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्' इत्यस्मिन्नधिकरणे एकविज्ञानेन सर्वविज्ञानप्रतिज्ञां मृद्घटनखनि-कृन्तनादिदृष्टान्तम् 'बहु स्यां प्रजायेय' इत्यभिध्योपदेशादिकं चानुसंधानेन परिणामवाद एवाभिप्रेतः, कण्ठरवेणोक्तश्च 'आत्म-कृतेः परिणामात्' इति सूत्रे ।

भाष्यकारैरपि तत्र विवर्तवादानुसारेण व्याचक्षाणैरपि सौन्दर्यलहर्याम्, 'मनस्त्वं व्योम त्वम् —' इति श्लोके 'त्वयि परिणतायाम्' इति स्वाभिमतः परिणामवाद एव स्फुटीकृतः । अस्मिन् पक्षे रहस्यनामसहस्रे 'मिथ्याजगदधिष्ठाना' इत्यादौ श्रूयमाणं मिथ्यात्वं तु स्वानतिरिक्तरूपत्वम्, घटादिरूपेणानित्यत्वं ब्रह्मरूपेण नित्यत्वम्, मृद्घटयोरभेदेऽपि घटरूपेण ध्वस्तत्वं मृद्रूपेणाध्वस्तत्वं चेत्यादिवद्विरुद्धधर्मनिरासादिकमूह्यमित्यादिकः शांभवानन्दकल्प-लतायां विस्तरः ॥ ३ ॥

அத்வைதத்தைக் கூறுகிற உபநிடதவாக்கியங்கள். அனைத்தும் இந்தக் கருத்தைக் கொண்டால் தான் ஒன்றுக் கொன்று முரண்படாதிருக்கும். எல்லா பிரமாண நூல்களிலும் தலை சிறந்தது உபநிஷதம். அதனை ஒட்டியே தந்திரங்கள். இவை பிரும்மம் உலகம் இவற்றினிடையே வேற்றுமையின்மையை விளக்குகின்றன. இதற்கு முரண்படுவது போல், காரண நிலையிலும் காரிய நிலையிலும் அவை வெவ்வேறுகப் புலப்படலாம். (தங்கம் - வளைபோல, மண் - குடம் போல்) இந்த வேற்றுமை கல்பனையின் விளைவு. உண்மையல்ல. உலகமாய் தோன்றுமளவில் பலவாக ஒன்றுக்கொன்று மாறுபட்டதாக உணரப்படுகிற வேற்றுமை மட்டும் தான் கல்பனை (மெய்யல்லாத விளக்கம்). இதனுல் பிரபஞ்சமே மெய்யல்லாதது என்று கொள்ளத் தகாது. வேறுபட்டது என்ற கருத்தை மறுக்கத்தான் ''நேஹ நாநா அஸ்தி கிஞ்சந'' (இங்கு பலவாக உள்ள எதுவும் இல்லை) என்று உபநிடதவாக்யம் கூறுகிறது. உலகமே இல்லை என்று கூற உபநிடதம் வரவில்லை. பாமதீயிலும் (சங்கரரின் ஸூத்ரபாஷ்யத்தின் விரிவுரை) தங்கத்தையும் கிரீடத்தையும் பற்றிய ஆராய்ச்சியில் தங்கத்தைவிடக் கிரீடம் எந்நிலையிலும் தன்மையில் தாழ்ந்ததல்ல. பரிணாம மடைவதால் மூலப்பொருள்- விளைபொருள்களிடையே நிலேவேறுபாடு கிடையாது. அவை வேறுபட்டவை என்ற எண்ணம் தான் மெய்யல்லாதது. ''மாயா மாத்ரம் இதம் த்வைதம்''. வேறு என்ற எண்ணம் தான் அறியாமையின் விளைவு. பிரும்மமே உலகமானதென்பதால் பரிணாம மடைவதும் அதனுல் வேறுபட்டது போன்று தோன்றுவதும் இயல்பே. அதனுல் உபநிஷதம் பரிணாமவாதத்தை ஏற்கிறது.

பகவான் வியாஸரும் ப்ரகிருதிச்ச ப்ரதிஜ்ஞா-த்ருஷ்டாந்த அநுபரோதாத் என்ற ஸூத்திரத்தால், பிரம்ஹம் உலகின் நிமித்தகாரணமும் உபாதான (மூலப் பொருள் - காரணப்பொருள்) காரணமும் தான் என்று விளக்கும் போது, 'ஏகவிஜ்ஞாநேந ஸர்வம் விஜ்ஞாதம் பவதி:' 'ஏகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருன்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்' ''பஹுஸ்யாம், ப்ரஜாயேய'' (ஒன்றை அறிந்தால்

எல்லாவற்றையும் அறிந்ததாகும். ஒரு மண் உருண்டை பற்றியறிந்தால் மண்ணாலானதனைத்தையும் அறிந்ததாகும். நான் (ஒன்றாக மட்டும் இருக்கும் பிரும்ஹமே) பலவாக ஆவேன். பலதோற்றங்களைப் பெறுவேன், என்ற உபநிஷத வாக்யங்களின் அடிப்படையில் பிரம்ஹத்தின் ஸங்கல்பப்படி அதுவே உலகமாக பரிணாமமடைந்தது என்று பரிணாமவாதம் ஏற்கப்படுகிறது. ''ஆத்ம க்ருதே: பரிணாமாத்'' என்ற ஸூத்ரத்தாலும் இதனை வியாஸர் வலியுறுத்துகிறார். இங்கு விவர்த்த வாதத்தை ஒட்டி (சிப்பி வெள்ளி விளக்கம்) சங்கரர் விளக்கம் தந்தாலும் தனது ஸௌந்தரிய லஹரியில்

मनस्त्वं व्योम त्वं मरुदसि मरुत्सारथिरसि
त्वमापस्त्वं भूमिस्त्वयि परिणतायां न हि परम् ।
त्वमेव स्वात्मानं परिणमयितुं विश्ववपुषा
चिदानन्दाकारं शिवयुवतिभावेन बिभृषे ॥

மனமும் நீயே. ஆகாயமும் நீயே. காண்பதனைத்தும் நீயே. நீயே உலகமாக மாறியதும் உன்னிடமிருந்து வேறுபடுகிற வேறு எதுவும் இல்லையே! நீயே உன்னை உலகவடிவில் பரிணாமம் அடையச் செய்ய சிதானந்த வடிவமேற்றுள்ளாய் என்று (35வது) சுலோகத்தில் ஐயம் திரிபில்லாமல் பிரம்மத்தின் பரிணாமமே உலகம் எனப் பரிணாமவாதத்தை விளக்கியுள்ளார்.

லலிதாஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தில் மித்த்யா ஜகத் அதிஷ்ட்டானா என்றொரு நாமம். மெய்யல்லாத உலகின் அதிஷ்டானம் அவள். அவளிடமிருந்து உலகம் வேறுபட்டதென்ற நிலையுணர்வுதான் மெய்யல்லாதது. உலகமாக மாறியதால் அழிவெனும் மாறுபாட்டிற்கு உட்பட்டது. மண்ணே குடமானாலும், குடநிலையில் அழிவுறும்; மண் நிலையில் அழிவற்றது என்ற முரண்படுகிற இயல்புகளை விளக்கவே உலகம் மித்த்யை என்று கூறியுள்ளதாகக் கொள்ளத்தகும். ''உலகமே இல்லை, அது பொய்'' என்றல்ல.

*இங்கு லலிதாஸஹஸ்ரநாமங்களில் மித்த்யாஜக தத்திஷ்ட்டாரு என்ற 735வது நாமத்திற்கு பாஸ்கரராயர் தந்த விளக்கமும் ஒப்பு நோக்கத்தக்கது.*

मिथ्यारूपस्य जगतः अधिष्ठानं भानाधिकरणं रजतस्येव शुक्तिः । 'मायामात्रमिदं द्वैतं अद्वैतं परमार्थतः'' । ''नेह नानास्ति किञ्चन'' इत्यादि श्रुतेः । ''सर्वं खल्विदमेवाहं नान्यदस्ति सनातनम्'' इति देवीभागवतात् ।'' यत्र त्रिसर्गो मृषा ''इति विष्णुभागवताच्च । वस्तुतस्तु जगतो ब्रह्मपरिणामकत्वं स्वीकुर्वतां तान्त्रिकाणां मते जगतः सत्यत्वमेव । मृद्घटयोरिव ब्रह्मजगतोरत्यन्ताभेदेन ब्रह्मणः सत्यत्वेन, जगतोऽपि सत्यत्वावश्यंभावात् भेदमात्रस्य मिथ्यात्व-स्वीकारेण अद्वैतश्रुतीनां अखिलानां निर्वाहः । भेदस्य मिथ्यात्वादेव भेदघटिताधाराधेय-भावसंबन्धोऽपि मिथ्यैव । तावन्मात्रेणैव अविरोधे सर्वस्य जगतो मिथ्यात्वकल्पनं तु वेदान्तिनामनर्थकमेव ।''

सदसद्रूपधारिणी *(ல.ஸ.661) நாமத்தை விளக்கவந்த பாஸ்கரர் தரும் விளக்கம்.* सत्- ब्रह्म । असत् - सद्भिन्नं जगत् । तयोः रूपे धारयति । सत् - व्यावहारिकं पारमार्थिकं वा सत्यम् असत् तुच्छम् । ते एव रूपे विषयौ भासयति ।

*ஸத் பரம்பொருள். அஸத் - அதிலிருந்து வேறுபட்ட உலகம் இவ்விரண்டின் ரூபத்தைத் தாங்குகிறாள். ஸத் - வியவஹார நிலையிலும் பரமார்த்த நிலையிலும் ஸத்யமாக உள்ளது. அஸத் - இவ்விரு ஸத்யங்களுமல்லாத மதிப்பற்ற பொருள். இரண்டையும் துலக்குபவள்.*

सकलाधिष्ठानरूपा*(ல-த்ரி 232)* अथात आदेशो नास्ति नेति नेति । नेह नानास्ति इत्यादिभिः श्रुतिभिः प्रतिपन्ना । श्रुतिनिषेधस्य अवध्यपेक्षायां प्रकृत्यादीनामपि तत्त्वज्ञानेन निवृत्तौ सर्वावधित्वेन अनुभूयते *(ஸ்ரீசங்கரபகவத் பாதபாஷ்யம்)*

सदसदाश्रया - *(ல.த்ரி 225)* अपरोक्षतया सन्निति प्रतीति-विषयतया व्यवह्रियमाणं सत्कार्यं रूपादिमत्तया व्यावहारिक सत्ताश्रयं, पृथिव्यप्तेजोभूतत्रयं सत् । असत् सद्भिन्नतया परोक्षज्ञानगोचरं वाय्वाकाशादि । तयोराश्रया अधिष्ठानभूता, आरोपितस्य अधिष्ठानसत्तातिरिक्त- शून्यतया तदनुस्यूता *(ஸ்ரீ பகவத்பாத சங்கரபாஷ்யம்).*

सत्यरूपा - *(ல.த்ரி233)* परिणामवादमाश्रित्य अपरोक्षज्ञानयोग्यानि पृथिव्यप्तेजांसि सत् । नित्यानुमेयाः परोक्षज्ञानविषयाः वाय्वादयः त्यत् । सत्त्वं रूपं यस्याः सा *(ஸ்ரீ சங்கரபகவத் பாதபாஷ்யம்)*

मूर्तामूर्ता *(ல.ஸ.பா 813-814)* रूपवद्वस्तु मूर्तम् (पृथिव्यप्तेजांसि) वाय्वाकाशादिकं अमूर्तम् । तत्तद्रूपेति नामद्वयार्थः (मूर्ता+अमूर्ता) *(3)*

*இதையே மேலும் இரு சுலோகங்களால் விளக்குகிறார்-*

इममेवार्थं श्लोकद्वयेनाह—

नैसर्गिकी स्फुरत्ता विमर्शरूपास्य वर्तते शक्तिः ।
तद्योगादेव शिवो जगदुत्पादयति पाति संहरति ।। ४ ।।

इहोत्पादनादित्रयं तिरोधानानुग्रहयोरुपलक्षणम् ।। ४ ।।

सावश्यं विज्ञेया यत्परिणामादभूदेषा ।
अर्थमयी शब्दमयी चक्रमयी देहमय्यपि च सृष्टिः ।। ५ ।।

अवश्यम्, सर्वविज्ञानसाधनत्वान्मोक्षादिपुरुषार्थप्रदत्वाच्च । अर्थमयी शिवादिक्षित्यन्तषट्त्रिंशत्तत्त्वरूपा । शब्दमयी परादि-वैखर्यन्ता । चक्रमयी बिन्द्वादिभूगृहान्ता । देहमयी सूक्ष्मादिस्थूलान्ता ।। ५ ।।

*இந்த பிரும்மத்திற்கு இயல்பாக அமைந்த ஸ்ப்புரணமானது (நுண்ணிய வெளிப்பாடு) விமர்சம் எனும் சக்தியாக உள்ளது. அந்த சக்தியின் துணையாலேயே சிவன் உலகத்தைத் தோற்றுவிக்கிறார், காப்பாற்றுகிறார், உலகை*

உருமாற்றமடையச் சுருக்குகிறுர். (மூலப் பொருளில் ஒடுக்குகிறுர்.)

விமர்சம் எனும் சக்தி அவசியம் அறியத்தக்கது. அதன் பரிணும விளைவே அர்த்தமயமானதும் சப்தமயமானதும் சக்ரமயமானதும் தேகமயமானதுமான இந்த உலகத்தின் வெளிப்பாடு.

ஸ்ருஷ்டி, ஸ்த்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று மட்டும் இங்கு குறிப்பிடப் பெற்றுலும். திரோதானம் அனுக்கிரஹம் என்ற மற்றிரு பணிகளும் இவற்றிற்குள்ளேயே அடங்கும்.

இதனை அறிந்தால் எல்லாவற்றைம் அறிய இயலும். அந்த அறிவு மோக்ஷம் தலையாய எல்லா புருஷார்த்தங்களையும் பெற உதவும். அர்த்தமயமான படைப்பு - சிவன் முதல் பூமி ஈருன 36 தத்துவங்களானது. சப்தமயமான படைப்பு என்பது பரா பச்யந்தீ மத்த்யமா வைகரீ என்ற 'சொல்' வடிவான உலகின் வெளிப்பாடு. பிந்து முதல் பூ புரம் வரையிலுள்ள அமைப்பே சக்ரமயப்படைப்பு. ஸூக்ஷ்மம் ஸ்தூலம் காரணம் என்றமைந்த உடலமைப்பே தேஹமயப்படைப்பு. இவற்றை முழுவதும் அறிவதே இந்நூலின் நோக்கம்.

பிரகாசம் - ஒரு பொருளையும் தனித்துப் புலப்படுத்தாத பேரொளி. இது அது என விளக்கமுறுதபேரிருக்கை. அறிபவன் அறியப்படுகிற பொருள் அறிவு என்ற திரிபுடியற்ற பேரறிவு. இனமறியாப் பேரானந்தம். துடிப்பற்ற நிறை நிலை.

அது தன்னை விளக்கிக் கொள்ள விமர்ச நிலைக்கு வந்தது. மனத்தில் உதித்த எண்ணம் சொல்வடிவமேற்றது போல் பேரொளி ஒரு பொருளைக் காட்டும் ஒளியானது. தானே ஆன ஆத்மா இது அது என்றறியத் தொடங்கியதும் பேரறிவு விளக்க நிலைக்கு வந்தது. பிரும்மம் என்று ஒன்ருக இருந்தது, பின் பிரும்மம் பிரும்ம சக்தி (சிவன் சக்தி) என்று ஸ்ப்புரணமற்ற நிலைமாறி ஸ்ப்புரணமே இயல்பாக விளக்கம் பெற்றது. நிராகாரமான பிரகாசம் ஸாகாரமான விமர்சம் ஆயிற்று. சிவனன்றி சக்தி நிற்காது. சக்தியின்றி சிவன்

அசையமாட்டார். விமர்சவடிவமே பிரகாசவடிவைத் துலக்கியது. பிரகாசம் விமர்சத்திற்கு ஆதாரமானது. உண்மையில் இரண்டும் வேறல்ல.

**அர்த்தமயஸ்ருஷ்டி - 36 தத்துவங்கள்.** ஏகமாகத் தனித்திருந்த பிரம்மம் ஸங்கல்பித்தது. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் என்பது தொடர்ந்து நிகழ்கிற செயல். முன் தன் ஸங்கல்பத்தால் வெளியிட்டிருந்த உலகைப் பிரும்மம் தன்னுள் லயமடையச் செய்திருந்தது. காலம் குணம் கர்மம் என்ற மூன்றை முன் ஸாதனமாக்கி உலகமாக விரிய வேண்டும். அப்படி விரிய அதன் ஸங்கல்பமே மூலப்பொருளும் துணையுமானது.

பிரம்மம் உலகமாக விரிய ஸங்கல்பம் கொள்ள உள் தூண்டுதலாக நின்ற அதன் ஆற்றல் அதனிடமிருந்து தனிப்பட்டது. உலகின் முதல் தத்துவமான **சிவனும்** இரண்டாம் தத்துவமான **சக்தியுமாக** பிரிந்தது. பிரகாச நிலையிலிருந்த சிவன் எனும் பிரம்மம் விமரிச நிலைக்கு வந்ததும் சிவனும் சக்தியுமானது. சிவதத்துவத்தின் விமர்சம் சக்தி. சக்தியின் விமர்சம் சிவன். இந்த சக்தி, படைப்பு முதலியதில் ஆர்வத்துடன் மேற்கொண்ட மறு விமர்சம் **சாந்தா** என்று. பின் விரிவடையவிருக்கிற **இச்சாசக்தி, ஜ்ஞான சக்தி, கிரியா சக்தி** என்ற மூன்று சக்திகளுக்கும் மூலமாகத் தோன்றியது. இதன் விமர்சமே ஸதாசிவன் முதலிய தத்துவங்களாக விரிந்தது

பிரகாசம்-விமரிசம்>சிவன்-சக்தி=>சாந்தா>இச்சாசக்தி ஜ்ஞானசக்தி-கிரியா சக்தி ஸங்கல்பம்>காலம், குணம், கர்ம>உலகம்

''நானே உலகமாகப் பலவாக ஆகிறேன்'' பஹு ஸ்யாம்'' ''ப்ரஜாயேய'' என்ற சிவசக்தி ஸங்கல்பம் சிவசக்திரூபமான தன்னில் உலகத்தைத் தனித்துக் கண்டது. இது சிவ சக்திகளின் பராஹந்தா எனும் அகந்தையின் மூல உருவம். அது **ஸதாசிவன்** என்ற மூன்றும் தத்துவ நிலை பெற்றது. ஸதாசிவன் தானே உலகம் என்ற கொண்ட ஸங்கல்பமே **சுத்த வித்யை** எனும் நான்காம் தத்துவம்.

இந்ததத்துவ நிலை வரை பிரம்மத்திடமிருந்து உலகம் பிரியவில்லை. (இச்சாசக்தி> பராஹந்தா-ஸதாசிவர்> சுத்தவித்யா> ஈச்வரர்.)

இதன் விரிவாகத் தன்னைக் காட்டிலும் உலகை வேறானதாகப் பிரித்துக்காண்கிற **ஈசுவரன்** என்ற ஐந்தாம் தத்துவ நிலை தோன்றிற்று. ஈசுவரனானவர், உலகம் என உலகைத் தன்னிடமிருந்து பிரித்து உணர்ந்தார். வேறுபடாததொன்றை வேறுபட்டதெனக் கருத உதவிய ஈசுவரனின் சக்தி **மாயா** என்ற ஆறும் தத்துவமானது.

மாயா எனும் சக்தி தன் ஆற்றலை வெளிப்படுத்தியதும் சுத்த வித்யா என்ற ஸதாசிவசக்தி திரோதான மடைந்தது. வித்யை ஈறான முன்னிருந்த தத்துவ நிலைகள் உணர்விற்கு அப்பாற்பட்டன. விளக்கிற்கு முன் உள்ள பொருள் புலப்படும். பின்னுள்ள பொருள் மீது இந்த விளக்கே தடையாகி இருட்டடிக்கும். மாயையின் வெளிச்சத்தில் பின்னிருந்த பொருள் காட்சிக்குப் புலனாகாத நிலை அது. வித்யா தத்துவத்திற்கு மாறுபடுவதால் மாயை **அவித்யை** என்ற ஏழாம் தத்துவமாகியது. ஈசுவரன்>திரோதானம் - மாயா>அவித்யா.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமங்களில் 264-274 நாமங்கள் இந்த விமர்ச சக்தி செயல்படுவதை விளக்குகின்றன.

1. **ஸ்ருஷ்டி** - பிரும்மாவின் செயல் - உலகைப்படைப்பது. ரஜோகுணமதிகமுள்ள சக்தியின் பணி இது.

2. **ஸ்திதி** -விஷ்ணுவின் செயல். உலகின் இருக்கையும் காப்பும் இதன் பணி. ஸத்வகுணமதிகமான சக்தியின் பணி இது.

3. **ஸம்ஹாரம்** - ருத்திரனின் செயல். பரமாணுவிலிருந்து விரிந்த உலகத் தோற்றத்தை படிப்படியாக ஒடுக்கிப்பரமாணு நிலையில் மறைப்பது. தமோகுணமதிகமாகவுள்ள சக்தியின் பணி இது.

4. **திரோதானம்** - ஈச்வரனின் செயல். பரமாணுவையும் மூலப்ரக்ருதியில் ஒடுக்கி பரம்பொருளிடம் லயமடைய உதவுவது. இறுகிய (கனதர) ஸத்வகுணமதிகமுள்ள சக்தியின் பணி இது. பிரபஞ்சமாக விரிந்த உலகினை இயக்கிய ஈச்வரதத்வத்தின் வெளி நோக்கின் முனைவு இந்நான்கிலும் வெளிப்படும்.

5. **அனுக்ரஹம்**- ஸதாசிவனின் செயல் இது. முழுவதும் தன்னுள் கரைந்து மறைந்த உலகின் மூலத்தை ஏற்று மறுபடி படைப்பு தொடங்கும் வரை மூலநிலையில் காத்துப் படைப்பு தொடங்கியதும் மூலப்ர கிருதியாக ஈச்வரனிடம் ஒப்படைப்பது. இறுகாத (விரலதர) ஆகாசம் போன்ற தெளிந்த சுத்த ஸத்வகுணநிலை இது. உள்நோக்கிப் பிரும்மத்தின் உள் அடங்கித்தனித்தன்மை காட்டாத பேருணர்வு இது. முதல் ஐந்து சிவ தத்வங்களான சிவன் சக்தி ஸதாசிவன் சுத்த வித்யை ஈசுவரன், என்பவர் வரை பிரும்ம நிலை, ஸதாசிவனின் அனுக்ரஹ நிலை, ஈசுவரனின் திரோதான நிலை இவற்றின் விளக்கம். மாயை அவித்யை கலா,ராகம், காலம் நியதி என்ற தத்துவங்கள் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற செயல்களை நடத்துகின்றன.

அவித்யையும் பேராற்றல் கொண்டதே. தன் ஆற்றல் முழுதும் ஒருங்கே வெளிப்படாதபடி **கலா, ராகம், காலம், நியதி** என்ற நான்கு தத்துவங்களைத் தன்னிடமிருந்து வெளிப்படுத்தியது. இவற்றின் மூலம் உலகமாகப் பலவாக அது பரிணமித்தது. கலா முதலிய நான்கும் 8வது முதல் 11வது தத்துவநிலை பெற்றன.

சிவன் - சக்தி, ஸதாசிவன் - சுத்த வித்யை, ஈசுவரன் - மாயை என்று இரு தத்துவங்களாக வந்த பரிணமத்தில், அவித்யை முதலாவதானது. சிவன் சக்தி என்று தனித்தும் காணப்பட்ட நிலை மறைந்து, சக்தியினுள் மறைந்த சிவதத்துவமாக உருப்பெறுகிற பரிணாமமே அவித்யை. சிவன் முழுவடிவுடன் காணமற் போனதற்குக் காரணமானவை இந்த கலா, ராகம், காலம், நியதி என்ற நான்கு தத்துவங்கள்.

சிவனின் வெளிப்பாடான ஆத்மா சிவனைப் போன்று எல்லாமறிந்தவனாக, எல்லாம் வல்லவனாக எல்லாமானவனாகப் பூர்ணனாகக் காட்சிதராமல், சிற்றறிவும் சிறு ஆற்றலும் குறைவுமே தன் இயல்பாகக் கொண்டவனாக ஆனது, கலா முதலிய தத்துவங்கள் அவன் மீது ஏற்படுத்திய மறைப்பால் தான். இந்த தத்துவங்களைக் கஞ்சுகம் (சட்டை) என்பர்.

பேராற்றல் பெற்ற ஆத்மாவை இவனால் இவ்வளவே செய்ய முடியும் எனக் குறுக்கியது **கலா** எனும் எட்டாம் தத்துவம்.

பூர்ணனாகத் தன் நிறைவு பெற்றிருந்த ஆத்மாவை அது வேண்டும், இது வேண்டும் எனத் தேவையுணர்ச்சியைத் தூண்டிப் பலவற்றை நாடுபவனாக ஆக்கியது **ராகம்** என்ற ஒன்பதாம் தத்துவம்.

தன் இயல்பான நித்தியத்தன்மையை உணராமல், தன் மீது போர்த்தியுள்ள உடல் முதலியவற்றின் அழிவைத் தன் அழிவாக உணரச் செய்து, காலத்தால் ஏற்படுகிற தோற்றம், இருக்கை, வளர்ச்சி, முதிர்ச்சி, தளர்ச்சி, மறைவு என்ற ஆறும் தன்னிலைகள் தாம் என உணரச் செய்து குறுக்கியது **காலம்** எனும் பத்தாம் தத்துவம்.

சிவனான ஆத்மா ஸர்வஸ்வதந்திரம் பெற்றவன், எதிலும் கட்டுப்படாதவன் என்ற நிலை உணராமல் கால - தேச - வஸ்துக்கள் தன்னைக்கட்டுப்படுத்துவதை உணரச் செய்து குறுக்கியது **நியதி** என்ற பதினோராம் தத்துவம்.

சிவனாக இருக்கத் தகுதி இழந்தவன் எனத் தன்னைக் குறுக்கி, தனதியல்பிற்கு மாறுபட்ட ஜீவன் என்ற நிலைக்குத் தாழ்ந்து, **ஜீவன்** (புருஷன்) என்ற பன்னிரண்டாம் தத்துவநிலை பெறுகிறான். காலம் குணம் கர்மம் என்ற மூன்றும் இப்போது புருஷனை ஆட்டுவிக்கின்றன.

ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களும் ஜீவனின் உள்ளத்து நிலையைக் கட்டுப்படுத்துபவை. முக்குணங்களும் தனித்து உணர இயலாதபடி இயக்கமுறாத சமநிலை **பிரகிருதி** எனும் பதிமூன்றாம் தத்துவம். சித்தம்

மனம் புத்தி அகங்காரம் என்ற உள்ளத்து நிலைகள் ஜீவனை ஆட்டுவிக்க விருக்கின்றன. முக்குணங்களின் சமநிலையில் மாற்றம் ஏற்பட்டு ஜீவனிடம் மாறுபாடுகளைத் தோற்றுவிக்கின்றன. மாற்றமடையாத சமநிலை பிரகிருதி என்ற சித்ததத்வம்.

ஸத்வம் தமஸ் என்ற இருகுணங்கள் சமநிலையிலிருந்து குறைந்து ரஜோகுணம் மேலேற **மனம்** என்ற பதிமூன்காம் தத்துவம் தோன்றுகிறது.

ரஜஸ் தமஸ் என்ற இருகுணங்கள் குன்றி ஸத்வகுணம் அதிகமாக **புத்தி** என்ற பதினைந்தாம் தத்துவமும் ரஜஸுᵐம் ஸத்வமும் அடங்கி தமஸ் கூட, **அஹங்காரம்** என்ற பதினாறும் தத்வமும் தோன்றுகின்றன.

சித்தம் என்பது பிரகிருதியின் சமநிலை. மனம் புத்தி அகங்காரம் என்பது சமநிலைமாறி ஏற்றத் தாழ்வு பெறும் விகிருதி நிலை. விகிருதி -மாற்றம். ஜீவனின் உள்ளமாக விரிவடைகிற தத்துவங்கள் இவை. இவற்றில், அஹங்காரம் ஜீவனின் பிரதிபலிப்பு தான் எனினும், அதில் முற்பிறவிகளில் பெற்ற வாஸனை - ஸம்ஸ்காரங்கள் என்ற பதிவுகள், — முற்பிறவியில் தேய்வடைந்ததுபோக மீதமுள்ளவை- இடம் பெறுகின்றன. ஸ்ருஷ்டிக்குத் துணை நிற்கிற காலம் குணம் கர்மம் என்பவற்றில் குணம் ஸத்வம் முதலியனவாகவும் கர்மம் வாஸனை - ஸம்ஸ்காரங்களாகவும் இணையும் நிலைகள் பிரகிருதி முதல் அஹங்காரம் வரையுள்ள தத்வங்கள்.

இனி மாற்றம் வேகமாக நிகழ்கிறது. உள்ளம் வாஸனாவசத்தால் உவந்தேற்கிற **சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம்** என்ற தந்மாத்திர குணங்கள் ஐந்து, அந்த தந்மாத்திரகுணங்களின் ஆதாரமான **ஆகாசம் வாயு அக்னி ஜலம் பிருத்வி** என்ற ஐம்பூதங்களும், குணங்களை ஏற்று உணர்வுகளாக வெளிப்படுத்துகிற ஞானேந்திரியங்களான **காது, தோல், கண், நாக்கு, மூக்கு** என்பவையும் இயக்கம் மிக்க **வாக்கு, கை, கால், குதம், குறி** என்ற கர்மேந்திரியங்களும் 17-36 தத்துவங்கள்.

முதல் ஐந்தும் சிவதத்துவங்கள், 6-12 வித்யாதத்துவங்கள். 13-36 ஆத்மதத்துவங்கள்.

இந்த விளக்கம் பரசுராம கல்பஸூத்திரங்களின் ராமேசுவரரின் உரையை ஒட்டியது. தத்துவங்களின் வரிசை, எண்ணிக்கை, தொகைமுறை முதலியவை மற்ற தர்சனங்களில் பிரிப்பவரின் நோக்கத்தை ஒட்டி மாறுபடும்.

இது **அர்த்தமயீஸ்ருஷ்டி**. இதில் முழுப்பங்கும் பிரும்மமும் பிரம்ம சக்தியும் பிரிந்து சிவனும் சக்தியுமாக ஆனதைப் பொறுத்தது. பிரகாசமான பிரும்மம், தன் சக்தியைத் தனிப்படுத்தி சிவன் சக்தி என்ற விமர்சநிலையடைந்தது. விமர்சத்தின் விளக்கமே ஸதாசிவன் முதல் பூமிவரை உள்ள தத்துவநிலை பெற்றது.

**சப்த மயீ ஸ்ருஷ்டி** - விமர்சசக்தியின் மற்றொரு விரிவு ஒலியாக மாறுகிறது. ஒலியாக மாறவிருக்கிற மூலப் பொருள் **சாந்தா - பரா** எனப்படும். அது **பச்யந்தீ, மத்த்யமா வைகரீ** என்று பரிணாமமடைகிறது. பூதங்களின் முதலாவதான ஆகாசம் அதன் பரம ஸூக்ஷ்ம நிலையில் பரா என்ற ஒலி வடிவிலுள்ளது. ஆகாசத்தின் ஸூக்ஷ்மபூத நிலையில் அதற்கும் அதன் சிறப்புகுணமான சப்த ஸூக்ஷ்ம நிலைக்கும் வேறுபாடு அறிய முடியாதிருப்பதால் அதனை சப்ததன்மாத்திரம் என்பர். சப்ததன்மாத்திரத்திற்கும் மூலப்பொருள் பரா என்ற சப்த சக்தி. அதன் பிந்து நிலை வெளிப்பாடே பரா வாக். அது விதை உருப்பெறுகிறது. பெரும் மரத்தின் விரிவனைத்தும் பிரித்தறியமுடியாதபடி நுண்ணிய விதையில் அடங்கியுள்ளது போல் ஒலிவிரிவனைத்தும் பராவில் மிக சூட்சும நிலையில் புலப்படாத அவ்யக்த நிலையில் மூலாதாரத்தில் தங்கி வியக்த நிலைக்கு வரத்துடிக்கிறது. தனி மனிதனின் உடலில் மூலாதாரமே அனைத்து சக்திகளுக்கும் ஆதார இடம். அந்தப் பரா ஒலியில் பேசவிரும்புவனின் விருப்பமும் ஸங்கல்பமும் துடிப்பை உண்டாக்குகிறது. வாயு அதை அசைவாக்கி பரா ஒலியை மேலெழும்பச் செய்கிறது.

**(தேஹே(அ)பி மூலாதாரே (அ)ஸ்மின் ஸமுதேதி ஸமீரண: ।**
**விவக்ஷா ரிச்ச்யா உத்த்தேந ப்ரயத்நேந ஸுஸம்ஸ்க்ருத: ।**

**ஸ வ்யஜ்ஞயதி தத்ரைவ சப்தப்ரம்ஹணி ஸர்வகம்.**) சப்தப்ரம்ம நிலையிலுள்ள சப்தகாரண பிந்துவான பரா வாக்கானது நாதமாக நீட்சி பெற்று பீஜம் என்ற விதை நிலையடைகிறது. மேலும் விரிவடைய நாபி வரை மேனோக்கிச் செல்கிறது. இதுகாறும் ப்ரத்யக் என்ற உள் நோக்கு கொண்ட சக்தி இனி பராக் என்ற வெளிநோக்கைப் பெறுகிறது.

விதை நீரில் ஊறி உப்பி விரிவடைந்து மலர்ந்து முளையிட்டுச் செடியாக வெளி வருவது போல் விதை நிலையிலிருந்த பரா தானிருந்த அவ்யக்த நிலையை விட்டு வியக்த நிலைக்கு வரத்துடிக்கிறது. ஒலிவடிவம் கலகலத்து, விரிவடையத் தகுதி பெற்றுள்ள தன்னைத் தானே உற்று நோக்குகிறது. வெளியே கிளம்ப ஆயத்தமான பெண், தன் ஆடைஆபரணம் உடல் அமைப்பு இவற்றின் கோலம் நன்கு அமைந்துள்ளதா என ஜன்னலருகே நின்று தன்னை உற்று நோக்குவது போல் பரா நாபியை அடைந்ததும் தன் விரிவை உற்று நோக்குவதால் அவள் **பச்யந்தீ** (உற்று நோக்குபவள்) எனப்படுகிறாள். (**பச்யதி ஸர்வம் ஸ்வாத்மநி, கரணாநாம் ஸரணிமபி யதுத்தீர்ணா । தேநேயம் பச்யந்தீதி உத்தீர்ணேதி அபி உதீர்யதே மாதா.**) இவள் தான் செல்லவிருக்குமிடத்தை உற்றுநோக்குகிறாள். அவ்யக்த நிலையிலிருந்து வியக்த நிலைக்கு வரவிருக்கிற நடுநிலையாதலால் **வியக்தாவ்யக்தா.**

நாபியிலிருந்து எழுந்த சப்த சக்தியான பச்யந்தீ மார்பில் அநாஹதம் என்ற இதயத்தைச் சென்றடைகிறது. இதுவரை வியக்த ஒலியாகாதிருந்தது வியக்தநிலைக்கு வருமுன் அநாஹதமான - அடிவாங்காத - மோதல் பெறாத- ஒலியாகிறது, சப்தசக்தியை மேலே கொணர்கிற வாயு பேசுபவனின் விருப்பம் இறுகுவதால் வேகம் பெற்று தொண்டை, நாக்கு, பற்கள், அண்ணம், தாடை, உதடு என்று பல இடங்களில் மோதுகிறது. மோதலால் ஒலி இறுகிக் கடினமாகி அ-க-ச-ட-த-ப என்ற ஆஹத ஒலியாக மாறவிருக்கிறது. ஆஹத நிலை பெறு முன்னரே அநாஹத ஒலியாக மத்த்யமா ஒலியாக உருப் பெறுகிறது. இது **மத்த்யமா**

என்ற ஒலிவடிவம். இச்சா சக்தி கிரியாசக்தியாக உருப்பெறுவதன் இடை நிலை இது.

பச்யந்தீயாக இருந்த ஒலி பேசுபவனின் இச்சை இதற்குள் அடங்கிவிட்டிருந்தால் வெளியாகாமலே நிற்கக் கூடும். ஆனுல் மத்யமா ஒலி நிலை பெற்றுவிட்டால் ஆஹத ஒலியாக வைகரியாகக் கட்டாயம் மாறிவிடும். மத்யமாவால் பின்நோக்கிச் செல்ல முடியாது. விதை உப்பி வெடித்து முளையிட்ட நிலை இது. (**பச்யந்தீவ ந கேவலம் உத்தீர்ணா நாபி வைகரீவ பஹி: । ஸ்ப்புடதர நிகிலா வயவா வாக்ரூபா மத்த்யமா தயோ ரஸ்மாத்.**) பச்யந்தீ போல் செல்லவிருக்கிற தடத்தைப்பற்றிய கண்ணேட்டத்துடன் நில்லாமல், வைகரீபோல் முழுவதும் வெளிப்பட்டதாக ஆகாமல், நடுநிலை பெற்ற வாக்கு மத்தியமாவாகும்.

குண்டலினியிலிருந்து வாயுவேகத்தில் இருதயத்திற்கு வந்த சப்த சக்தியானது, தொண்டை, அண்ணம், நாக்கு, பற்கள், தாடை, உதடு இவைகளில் மோதி, இறுகிச் அ-க-ச-ட-த-ப-ய-ச என ஒலிக்கிற நிலைக்கு வருகிறது. இதயம் வரை கொண்டுவந்த வாயு இறுக்கம் பெற்று **விகரன்** ஆகிருன். காற்றுவடிவில் சுமந்து வந்த ஒலியை நெருக்கமற்றிருந்ததை - குறுகிய வாயில்களிலும் தடைசெய்கிற தடங்களிலும் மோதவிட்டுச் சொல்லாக எழுத்தாக அக்ஷரமாக ஆக்குகிருன். இது **வைகரீ.**

பராவின் மேல் பரவிய வாயுவின்வேகம், ஒரு நொடி அணுநேரத்திற்குள் வைகரியாக மாற்றுகிறது. இது **சப்தமயீ ஸ்ருஷ்டி.** (லலிதாஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தில் பரா ப்ரத்யக்சிதீ ரூபா என்று தொடங்கும் 8 நாமங்களுக்கான பாஸ்கரராயரின் உரையை ஒட்டியது.)

ஸ்ரீ சக்கிரத்தில் மத்தியகேந்திரமான பிந்து தொடங்கி விரிந்த ஆவரணங்கள் ஒன்பதும் **சக்ரமயீ ஸ்ருஷ்டி.**

**தேஹமயீ ஸ்ருஷ்டி**– ஸ்தூலமான ஐந்து பூதங்கள் கூடி அமைந்து உருவத்தால் புலப்படுகிற முப்பரிமாணங்கள் கொண்ட உடலைத் தந்தன. இந்திரியங்களும் பிராணனும் மனமும் கூடி உணர்வாலும் செயலாலும் ஊகித்தறியக் கூடிய ஸூக்ஷ்ம சரீரத்தைத் தந்தன. ஜீவன் இவ்விரண்டிலும்

*இப்பிறவியில் முன் பிறவிகளில் பெற்ற வாஸனை - ஸம்ஸ்காரங்களை ஒட்டித் தனக்கென விதி அமைத்துத் தந்த ஸ்தூல ஸூக்ஷ்மசரீரங்களில் தன் முன் வாஸனை - ஸம்ஸ்காரம் பதிந்த புத்தி சித்தம் அஹங்காரம் என்ற காரண சரீர அமைப்பைத் தன்னை இயக்க உதவுபவையாக ஏற்றுன். இந்த மூன்று சரீரங்களும்* **தேஹமயீ** *ஸ்ருஷ்டியாகும். (4-5)*

तज्ज्ञानार्थमुपाया विद्या लोके चतुर्दश प्रोक्ताः ।
तेष्वपि च सारभूता वेदास्तत्रापि गायत्री ॥ ६ ॥

चतुर्दश विद्याः— चत्वारो वेदाः षडङ्गानि न्यायो मीमांसा पुराणं धर्मशास्त्रं चेति । तन्त्राणां धर्मशास्त्रेऽन्तर्भावः । तेषां प्रामाण्यसमर्थनं त्वस्मदीये त्रिपुरसुन्दरीबाह्यवरिवस्याविधौ द्रष्टव्यम् । तन्त्रराजव्याख्याने च विस्तरेण तन्त्राणां धर्मशास्त्रेऽन्तर्भावः प्रपञ्चयिष्यते । एवं च न शिष्टाकोपाधिकरणस्थवार्त्तिकविरोधः, शास्त्रपरिमाणानतिक्रमात् ॥ ६ ॥

तस्या रूपद्वितयं तत्रैकं यत् प्रपठ्यते स्पष्टम् (ऽस्पष्टम्)।
वेदेषु चतुर्ष्वपि परमत्यन्तं गोपनीयतरम् ॥ ७ ॥

तस्या गायत्र्याः स्पष्टमस्पष्टं चेति पदच्छेद आवृत्त्या । चरणत्रयम् 'तत् सवितुः' इत्यादि स्पष्टम् । 'परोरजसे सावदोम्' इति चतुर्थचरणं त्वस्पष्टमित्यर्थः । परं श्रीविद्याख्यं द्वितीयं रूपम् ॥ ७ ॥

*அந்த விமர்ச சக்தியை நன்கு அறிவதற்கான உபாயங்களாகப் பதினான்கு வித்யைகள் உள்ளன. அவற்றி னுள்ளும் ஸாரமானவை வேதங்கள். அவற்றினுள்ளும் ஸாரமானது காயத்ரியாகும். காயத்திரிக்கும் இரு வடிவங்கள் உண்டு. ஒன்று வேதங்களில் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது. மற்றொன்று மிக மிக ரஹஸ்யமானது.*

*பதிநான்கு வித்தியைகள் - வேதங்கள் நான்கு, அதன் அங்கங்கள் ஆறு, உபாங்கங்கள் நான்கு (பக்.2)*

உபாங்கமானதர்ம சாஸ்திரத்தினுள் தந்திரங்களும் அடங்கும். வேதத்தில் கூறப்பட்ட காயத்திரிக்கும் வெளிப்படையானது, மறைபொருளாயிருப்பது என்ற இரு வடிவங்கள் உண்டு. (प्रपद्यते स्पष्टम्-प्रपद्यतेऽस्पष्टम् என இரண்டு விதமாகவும் படிக்கலாம்) மூன்று பாதங்கள் கொண்ட காயத்திரி வெளிப்படையானது. பரே ரஜஸே ஸாவதோம் என்ற நான்காம்பாதம் காயத்திரி என வெளிப்படையாகக் கூறப்பெறுதது. ஸ்ரீவித்யையே மிக மிக ரஹஸ்யமான இரண்டாவது வடிவம்.

காயத்திரியின் மூன்று பாதங்களும் மூன்று வேதங்களின் ஸாரமாகத் தொகுக்கப்பட்டுள்ளன. त्रिभ्य एव तु वेदेभ्यः पादं पादमदूदुहत् । तदिति ऋचोऽस्याः सावित्र्याः परमेष्ठी प्रजापतिः । என மனு கூறுகிறுர். ருக்வேதத்திலிருந்து முதல் பாதமும் யஜுர்வேதத்திலிருந்து இரண்டாம் பாதமும் ஸாம வேதத்திலிருந்து மூன்ரும் பாதமும் தொகுக்கப் பட்டதென்பர். உபனயனத்தின் மூலம் வேத மந்திரம் கூறத் தகுதி பெற்றவர் மட்டுமே இந்த மூன்று பாதங்களைக் காயத்திரியாக ஜபிப்பர். வானப்பிரஸ்தர் ஸந்யாஸி மற்றும் சில விசேஷத் தகுதிகள் பெற்றவர் மட்டுமே நான் காம்பாதத்தை மிக மிக ரகசியமாக உபதேசம் பெற்று ஜபிப்பர் என்பதால் வேத காயத்ரியிலும் அஸ்பஷ்ட (ரகசிய உபதேச) நிலை உண்டு. ஸ்ரீவித்யையோ மிக மிக ரகசியமாக உபதேசிக்கப் பெறுவதனுல் மிக மிக ரகசியமாகப் பாதுகாக்கப் பெறத்தக்கது.

விமரிச சக்தியை அறிய உதவுபவை 14 வித்யா-ஸ்தானங்கள் எனக் குறிப்பிட்டு, வேதஸாரமான காயத்ரியை விட பரமானதெனக் கூறப்படுகிற ஸ்ரீ வித்யை தந்திரங்களில் கூறப்பட்டதென்பதால் 14 வித்யாஸ்தானங்களில் தந்திரங்கள் அடங்காதனவாயிற்றே என்ற ஐயம் எழும்பும். அதனைத் தீர்க்க வித்யாஸ்தானங்களில் 14ல் ஒன்ருன தர்ம சாஸ்திரத்தினுள் அடங்கும் என விளக்கம் தருகிறுர். மனுமுதலியவர்களின் ஸ்மிருதி போலவே தந்திரங்களும் ஈசனின் அவதாரமானவர்களாலும் ஈசனுலும் உபதேசிக்கப்

பெற்றவையானதால் ஸ்மிருதிகளே. மனுமுதலியவர்களின் ஸ்மிருதிகள் வேதத்தின் கர்மகாண்டத்திற்கு அனுசரணையானவை. தந்திரங்களோ இறைவன் உலகம் ஜீவன் என்ற தத்துவ விளக்கத்தை முக்கியமாகக் கொண்ட ஜ்ஞானகாண்டத்திற்கு உதவுபவை என்பது குறிப்பிடத்தக்கது. परमार्थतस्तु तन्त्राणां स्मृतित्वाविशेषेऽपि मन्वादिस्मृतीनां कर्मकाण्डशेषत्वं, तन्त्राणां तु ब्रह्मकाण्डशेषत्वं इति सिद्धान्तात् । *(லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர உபோத்க்காத இறுதியில் பாஸ்கரராயர் உரை.) (6-7)*

यद्यपि तन्त्रराजादौ सौन्दर्यलहर्यां च हादिविद्याया एव प्रथममुद्धारो दृश्यते, तथापि १. 'श्रीविद्यैव तु मन्त्राणां तत्र कादिर्यथा परा' इति वचनात्, २. षोडशीघटकत्वाच्च, ३. यदक्षरैकमात्रेऽपि', 'यदेकादशमाधारम्' इत्यादिरहस्यार्थप्रतिपाद्याक्षरशालित्वाच्च, ४. त्रिशत्यामस्या एवादराच्च, ५. त्रिपुरोपनिषद्येतन्मूलकत्वेनैवान्यासामुद्धाराच्च, ६. योगिनीहृदयादावुक्तानामिहापि वक्ष्यमाणानामर्थानामत्रैव स्वारस्याच्च, ७. शाङ्खायनश्रुतौ 'चत्वार ईं बिभ्रति' इत्यस्यामृचि च प्रथममस्या एवोद्धाराच्च कादिविद्यायाः प्राधान्यमिति द्योतयंस्तस्याः प्रतीकमादत्ते—

*ஸ்ரீவித்யை என்பது திரிபுரஸுந்தரீ, காமேச்வரீ, லலிதா, மஹா காமேச்வரீ, மஹா த்ரிபுரஸுந்தரீ என்று துதிக்கப்படுகிற பரதேவதையை தெய்வமாகக் கொண்டது. ஸ்திரீ தேவதையாகக் கொண்டதால் இந்த மந்திரம் வித்யை எனப்படும். பரதேவதையின் மந்திரத்தை ஸ்ரீவித்யை எனவும் அவளது நகரத்தை ஸ்ரீபுரம் என்றும் சக்கிரத்தை ஸ்ரீ சக்ரம் எனவும் தாயை ஸ்ரீமாதா எனவும் ஸ்ரீ என்பது அடைமொழியாகவும் சுட்டுப் பெயராகவும் அமைந்துள்ளது. ஸ்ரீவித்யை என்று குறிப்பிடப்பெறுகிற மந்திரங்கள் பல உள்ளன. அவற்றில் 'ஹ' என்பதை முதல் எழுத்தாகக் கொண்டவை' ஹாதி வித்யைகள் எனவும், 'க'வை முதல் எழுத்தாகக் கொண்டவை 'காதிவித்யைகள்' எனவும்,*

'ஸ'வை முதலில் கொண்டவை ஸாதிவித்யைகள் எனவும் வழங்கப்படுகின்றன. இவை ஒவ்வொன்றிலும் பல மந்திரங்கள் பலரால் உபாசிக்கப்பட்டுள்ளன. இவற்றில் சிறந்தது எது ? ஹாதி வித்யை எனச் சிலர். காதிவித்யை எனச் சிலர். இந்நூலில் '15 அட்சரங்கள் கொண்ட காதிவித்யையை ஆதாரமாகக் கொண்டே பல விளக்கங்கள் தரப்படுகின்றன. காதிவித்யையில் ஏன் இந்த ஈடுபாடு ? பாஸ்கரராயர் 8வது சுலோகத்தின் முன்னுரையில் இதனைக் குறிப்பிடுகிறுர்.

தந்திரராஜம் முதலிய நூல்களிலும் ஸௌந்தர்ய லஹரீயிலும் (ச்லோ32) ஹாதிவித்யையே முதலில் குறிப்பிடப்பெறுகிறது. எனினும் (1) லலிதாஸஹஸ்ரநாம ஸ்தோத்திர உபோத் காதத்தில் (ச்லோ.17) **ஸ்ரீ வித்யைவது மந்த்ராணாம் தத்ர காதிர் யதா பரா.''** என மந்திரங்களில் ஸ்ரீவித்யையும் ஸ்ரீ வித்யைகளில் காதிவித்யையும் சிறந்ததென குறிப்பிடப்பட்டுள்ளது. (2) ஷோடசீ மந்திரங்கள் அனைத்தும் காதிவித்யையைக் கொண்டவை. (3) ஸ்ரீவித்யையில் தனித்து அச்-ஹல் என ஒவ்வொரு அக்ஷரத்தையும் கணக்கிட்டு அதன் சக்தியை விளக்கி, 11வது அக்ஷரத்தை வித்யையின் ஆதார அக்ஷரம் என விளக்கியிருப்பதும் காதி வித்யையில் தான் பொருந்தும். (4) லலிதா த்ரிசதியில் இந்த வித்யையின் அக்ஷர வரிசைப்படி நாம அமைப்பு ஏற்கப்பட்டுள்ளது. (5) திரிபுரோப நிஷத்தில் 'காமோ யோநி: கமலா என்ற மந்திரத்தின் மூலம் இதன் அக்ஷர விளக்கமே தரப்பட்டுள்ளது. அதன் ஆதாரத்திலேயே மற்ற மந்திரங்கள் குறிப்பிடப்பெறுகின்றன. (6) யோகினீஹ்ருதயத்தில் கூறப்பட்டுள்ள மந்திரப் பொருள் விளக்கங்களுக்கும் இந்நூலில் கூறவிருக்கிற விளக்கங் களுக்கும் காதிவித்யையுடன் பொருத்தம் உள்ளது. (7) சாங்காயன ச்ருதியில் (ருக்வேத சாகையில்) நான்கு 'ஈ' என்ற அக்ஷரங்களைக் கொண்டது என்று பொருள்படுகிற ''சத்வார ஈம் பிப்ரதி'' என்ற மந்திரம் (ருக்வேதம் 5.47.4) காதி வித்யையுடன் தான் பொருந்தும். இந்த காரணங்களால் காதிவித்யையே இங்கு முக்கியம். இதனை மேல் விளக்குகிறுர்.

कामो योनिः कमलेत्येवं सांकेतिकैः शब्दैः ।
व्यवहरति न तु प्रकटं यां विद्यां वेदपुरुषोऽपि ॥ ८ ॥

'कामो योनिः कमला वज्रपाणिर्गुहाहसा मातरिश्वाभ्रमिन्द्रः । पुनर्गुहासकला मायया च पुरूच्येषा विश्वमातादिविद्या ॥' इति शाङ्खायनश्रुतिः । कामो मातरिश्वा च ककारः । योनिरेकारः । कमला तुरीयः स्वरः । वज्रपाणिरिन्द्रश्च लकारः । गुहाद्वयं माया च लज्जाबीजम् । हसेति सकलेति च स्वरूपम् । गुहया सह समासाद्बहुवचनं न पुनः सकारो दीर्घः । एवं लकारोऽपि । अभ्रं हकारः । एतादृशैः सांकेतिकैः शब्दैर्व्यवहारादत्यन्तगोपनीयत्वं समर्थितं भवति ॥ ८ ॥

காம: யோநி: காமகலா என்றவாறு ஸங்கேதச் சொற்களைக் கொண்டே வேத புருஷனும் இந்த வித்யையை அறிமுகப்படுத்துகிறார். வெளிப்படையாக அல்ல.

(திரிபுரோபநிஷத்தில் உள்ள) இந்த மந்திரம் சாங்காயன ச்ருதிக்கு உட்பட்டது. இவை ஸங்கேதச் சொற்கள். இவைகளின் வெளிப்படையான பொருள் வேறு. இங்கு குறிப்பிடப் பெறும் ரகசியப் பொருள் வேறு. **காம:**- காற்று, ககாரம். **யோநி:**- ஏகாரம். **கமலா**- ஈகாரம் **வஜ்ரபாணி:**- இந்திரன் - லகாரம். **குஹா ஹஸா** - ஹ்ரீம், ஹஸ என்று இரு எழுத்துகள், **மாதரிச்வா** - ககாரம், அப்ரம் - ஹகாரம், **இந்த்ர:**- லகாரம், **குஹா**-ஹ்ரீம். **ஸகலா:** ஸ-க-ல என்ற எழுத்துக்கள் - **மாயயா**- ஹ்ரீமுடன் **புரூசீஏஷாவிச்வ மாதா ஓம்** - தனித்த சிறப்புள்ள இந்த ஆதிவித்யை ஓம் என்ற பிரணவவடிவில் விளங்குகிறது. இது எல்லாவற்றிற்கும் முன்னோடி. இத்தகைய ஸங்கேதச் சொற்களால் குறிப்பிடப்பெறுவதால் மிகவும் ரகசியமாகக் காக்க வேண்டியதென்பது வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

ருக்வேத உபநிஷத்தான திரிபுரோபநிஷத்திலும் அதர்வவேத உபநிஷத்தான தேவீ உபநிஷத்திலும் காமோயோநி: காமகலா என்ற மந்திரம் இடம் பெறுகிறது.

நான்கு ஈகாரங்கள் - முதல் கூடத்தில் ஈ என்ற அக்ஷரம், மூன்று கூடங்களிலும் ஹ்ரீம் என்பதிலுள்ள ஈகாரங்கள் மூன்று. இது ஹாதிவித்யையில் பொருந்தாது.

சிவ: சக்தி: காம: என்ற ஸௌந்தரியலஹரீ சுலோகத்தில் ஸங்கேதப்படி விளக்கம் பெறுவது ஹாதிவித்யை என பாஸ்கர ராயர் குறிப்பிடுகிறுர். ஆனுல் ஸௌந்தரியலஹரீக்கு உள்ள உரைகளில் இந்த சுலோகத்தால் குறிப்பிடப்பெறுகிற வித்யை பற்றி மூன்று விதக் கருத்துக்கள் உள்ளன. அருணா மோதினீ, டிண்டிமம், ஆனந்த லஹரீ என்ற உரைகளில் காதி வித்யையும் ஹாதி வித்யையும் குறிப்பிடப்பெறுவதாகவும். லக்ஷ்மீதரரின் உரையில் காதிவித்யையே குறிப்பிடப்பெறுவதாகவும், ஸௌபாக்யவர்த்தினீ, ஆனந்த கிரீயா, தாத்பர்யதீபினீ, பதார்த்த சந்திரிகா, கோபால ஸுந்தரீ, ஆனந்த லஹரீ என்ற உரைகளில் ஹாதிவித்யை குறிப்பிடப்பெறுவதாகவும் காணப்படுகிறது.

**पञ्चदश वर्णरूपं कञ्चन** (ச்லோ58) என்றும் மூகபஞ்சசதியின் ஆர்யா சதகம் காதிவித்யையையே குறிப்பிடும்.

ஹாதிவித்யை பரமேசுவரனைக் குறிப்பதாகவும் காதிவித்யை பரமேசுவரியைக் குறிப்பதாகவும் டிண்டிம பாஷ்யம் கூறுகிறது.

சாங்காயன சாகை (ஸாங்க்யாயன சாகை) என்பது ருக்வேதத்தின் ஒரு சாகையானதால் இங்கு சாங்காயனச்ருதி எனக் குறிப்புள்ளது. திரிபுரோபநிஷத் அந்த சாங்காயன சாகையைச் சேர்ந்த உபநிஷத்தாகும் என்கிறது டிண்டிம பாஷ்யம்.

ஸத் சித் ஆனந்தம் - பேரிருக்கை, பேரறிவு, பேரானந்தம் என்பதைத் தன் இயல்பாகக் கொண்ட துண்டாட முடியாத (அகண்டம்) சிவ சக்தி ஸமஷ்டிரூபமான - சிவ - சக்த்யேகரூபிணீ என்று குறிப்பிடப் பெறுகிற பரப்பிரம்மம் பிரகாசமாகும். சக்தி அதன் விமர்சம். படைத்தல் காத்தல் ஒடுக்குதல் முதலியவை சக்தியின் தடஸ்த லக்ஷணம், தாற்காலிக அடையாளம்.

விமரிசநிலைக்கு வந்ததற்கு மூன்று வடிவங்கள் உண்டு. வில்லும் அம்பும் பாசமும் அங்குசமும் கொண்டவள் என்பது போன்றவற்ருல் அடையாளம் காட்டப்பெறுபவள் - ஸ்தூலவடிவினள். தியானம் வழிபாடு இவற்றில் இவ்வடிவம் இன்றியமையாதது. மற்ருென்று மந்திரவடிவம். இந்த சுலோகத்தின் மூலம் அறிமுகமானது. ஸூக்ஷ்மமானது. மூலமந்த்ராத்மிகா மூல கூடத்ரய கலேபரா, ஸ்ரீமத்வாக்பவ கூடைகஸ்வரூப முக பங்கஜா. கண்ட்டாத: கடிபர்யந்த மத்த்யகூட ஸ்வரூபிணீ, சக்தி கூடைகதாபந்ந கட்யதோபாக தாரிணீ என்று லலிதாஸஹஸ்ரநாமஸ்தோத்திரம் ஸூக்ஷ்மரூபத்தை அறிமுகப்படுத்தும். மூன்ருவது வாஸனாமயமான வடிவம். ராகஸ்வரூப பாசாட்ட்யா, க்ரோதாகாராங்குசோஜ்ஜ்வலா என்றவாறு இது ஸ்தூலஸூக்ஷ்மரூபங்களின் உட்கருத்தை விளக்கும். ஸூக்ஷ்மஸ்வரூபத்தில் மந்திரம், குண்டலினீ, பராவாக், என்றவாறு பல பகுதிகள் உண்டு. இவை வரிசையாக விளக்கப்படுகின்றன. (8)

विद्यावर्णानुद्धरति—

क्रोधीशः श्रीकण्ठारूढः कोणत्रयं लक्ष्मीः ।
मांसमनुत्तररूढं वाग्भवकूटं प्रकीर्तितं प्रथमम् ॥ ९ ॥

शिवहंसब्रह्मवियच्छक्राः प्रत्येकमक्षरारूढाः ।
द्वैतीयीकं कूटं कथितं तत् कामराजाख्यम् ॥ १० ॥

शिवतो वियतो मुक्तं तृतीयमिदमेव शक्तिकूटाख्यम् ।
हृल्लेखानां त्रितयं कूटत्रितयेऽपि योज्यमन्ते स्यात् ॥ ११ ॥

क्रोधीशो ब्रह्मा च ककारः । श्रीकण्ठोऽनुत्तरमक्षरं चाकारः । तमारूढस्तेन युक्तः । कोणत्रयं योनिः । लक्ष्मीः कमला । मांसं शक्रश्चेन्द्रः । शिवो वियच्च हकारः । हंसः सकारः । अक्षरसमूहात्मकत्वात् कूटत्वव्यपदेशः ॥ ९-११ ॥

பஞ்சதசி எனும் ஸ்ரீவித்யையின் எழுத்துக்களை ஸங்கேதச் சொற்கள் மூலம் வெளிக் கொணர்கிறார். **ஸ்ரீகண்ட்டாரூட:- க்ரோதீச:-** ககாரம், (க்ரோதீச: என்ற ஸங்கேதச் சொல்லின் பொருள். 'க்'. ஸ்ரீகண்ட: 'அ'. **கோணத்ரயம்** - த்ரிகோணம் 'ஏ'. **லக்ஷ்மீ: 'ஈ'. அநுத்தர ரூடம் மாம்ஸம்,** முதல் எழுத்தான 'அ'வுடன் கூடிய ல் (ல) இது முதலாவதான வாக்பவ கூடம். (9) **சிவ** 'ஹ்' ஹம்ஸ 'ஸ்' ப்ரம்ஹ 'க்'. **வியத்** - ஆகாசமாகிய 'ஹ்', **இந்த்ர** 'ல்' **ப்ரத்யேகம் அக்ஷராரூடா:-** இவை ஒவ்வொன்றும் அகாரம் சேர்ந்தவை. ஹ ஸ க ஹ ல. இது இரண்டாவது காமராஜ கூடம். இதிலேயே **சிவ - வியத்** ஆகிய இரு ஹகாரங்களை நீக்க மூன்றாவது சக்தி கூடம் இது. ஒவ்வொரு கூடத்தின் இறுதியிலும் ஹ்ரீம் என்ற ஹ்ருல்லேகா சேர்க்கப்படவேண்டும்.

மந்திர சாஸ்திரத்தில் மந்திரத்தை ஸங்கேத மொழியில்தான் கூறுவர். குருமுகமாகவே அறியத்தக்கவை. நூல்களில் அவற்றை விளக்குவது ஸம்பிரதாயத்தைத் தூய்மையுடன் காக்கவும் கவனக்குறைவால் மாறுபாடடையாமலிருக்கவும் உதவும். ஹ்ருல்லேகா, மாயா பீஜம், புவனேச்வரீ, சக்திபீஜம் என்று ஹ்ரீம் என்ற மந்திராக்ஷரத்திற்குப் பல பெயர்கள் உண்டு.

இந்த ஸங்கேதச் சொற்களை விளக்க ஏகாக்ஷ ரகோசம், மந்திராபிதானம், பீஜநிகண்டு, மாத்ருகா நிகண்டு, வர்ண நிகண்டு, வர்ணபீஜகோசம், தக்ஷிணா மூர்த்திகோசம் முதலிய பல கோசங்கள் உள்ளன.

இந்த மந்திரம் மூன்று பகுதிகள் கொண்டது. இப்பகுதியை கூடம் (குவியல்) என்பவர். முதல் கூடம் வாக் சக்தி மிக்கதானதால் வாக்பவகூடம் என்றும் நடு (மத்தியம) கூடம் காம (இச்சா) சக்திமிக்கதானதால் மத்த்ய கூடம், மத்த்யம கூடம், காமகூடம், காமராஜ கூடம், என்று கூறுவர். மூன்றாவது கூடம் சக்தி கூடம். ஒவ்வொரு கூடத்திலும் கடைசியில் ஹ்ருல்லேகா உள்ளது. இதுவே கூடங்களைப் பிரித்துத் தனித்துக் காட்டும். ஒவ்வொன்றையும் இணைக்கும்.(9-11)

हृल्लेखायाः स्वरूपं तु व्योमाग्निर्वामलोचनम् ।
बिन्द्वर्धचन्द्ररोधिन्यो नादनादान्तशक्तयः ॥ १२ ॥

व्यापिकासमनोन्मन्य इति द्वादशसंहतिः ।
बिन्द्वादीनां नवानां तु समष्टिर्नाद उच्यते ॥ १३ ॥

ஹ்ருல்லேகாவின் வடிவம் இது - வ்யோம (ஆகாசம்) - 'ஹ்', அக்னி - 'ர்' வாமலோசநம் - 'ஈ', பிந்து அனுஸ்வாரமான 'ம்'. ரீம் என்ற ஒலி நீண்டு 'ம்'ன் கார்வை தொடர அர்த்த சந்த்ரம் (2) ரோதினீ (3) நாதம் (4) நாதாந்தம் (5) சக்தி, (6) வியாபிகா, (7) ஸமநா, (8) உந்மநீ என்று ஒலி நீட்சியில் ஒலியின் தேய்வாகப் புலப்படுகிற ஸூக்ஷ்ம நிலை. பிந்துவிலிருந்து உந்மநீ வரையுள்ள ஒன்பது நிலைகளின் ஸமஷ்டி - நாதம் எனப்படும். ஸமஷ்டி-தொகை

व्योम हकारः केवलो, न त्वकारविशिष्टः । अग्निः रेफस्तादृशः । वामलोचनमीकारः । बिन्द्वादयो नवापि सूक्ष्मसूक्ष्मतरसूक्ष्मतम-कालैरुच्चार्या ध्वनिविशेषाः, वर्णविशेषा वा । न च ककारादिवत् स्पष्टमनुच्चार्यत्वात् तन्त्रीस्वरतुल्यत्वेन श्रूयमाणत्वाच्च कारप्रत्ययाद्य-भावाच्च 'बीजबिन्दुध्वनीनां च त्रिकूटेषु ग्रहात्मिका' इत्यादौ ध्वनिपदेनैव तन्त्रेषु व्यवहाराच्च न वर्णत्वमर्धचन्द्रादेरिति वाच्यम्, अनुस्वारविसर्गादावुक्तहेतुसत्त्वेऽपि वर्णत्वस्येष्टत्वात् । कथमन्यथा 'त्रिषष्टिश्चतुःषष्टिर्वा वर्णाः शंभुमते मताः' इति प्रतिज्ञाय 'अनुस्वारो विसर्गश्च—' इति परिगणनं शिक्षायां संगच्छेत ? न च तादृश-संख्याविरोधादेव नात्र वर्णत्वम्, तत्र स्पष्टोच्चार्याणामेव गणनात् । न च ताल्वादिपरिगणितस्थानानभिव्यङ्ग्यत्वान्न वर्णत्वम्, तदनभि-व्यङ्ग्यत्वस्य पश्यन्त्यादावव्याप्तेः, 'चत्वारि वाक्परिमिता पदानि' इति श्रुत्या वर्णसमूहात्मकपदत्वस्य स्पष्टमुक्तत्वाच्च । अत एव चतुःशतीशास्त्रे नादस्यार्थवर्णनं संगच्छते । (न च रथघोषवत् पदार्थ-

स्मारकत्वोपपत्तिः; तत्र हि तत्कालकरणीयत्वसंबन्धेन माहेन्द्र-स्तोत्रोपाकरणस्य स्मृतिविषयताया वाचनिकत्वेन रथघोष-सामान्यस्य लौकिकादिसाधारणस्य स्मारकत्वाभावेन तस्य तत्र शक्तेरयोगात्, प्रकृते तु न तथेति वैषम्यात्;) 'हृल्लेखात्रयसंभूतै-स्तिथिसंख्यैस्तथाक्षरैः' इत्यादौ प्रतिहृल्लेखं हकाररेफेकारानु-स्वारनादपञ्चकमिति पञ्चदशाक्षराणीत्युक्त्या, नादेऽक्षरत्व-व्यवहारस्यासकृद्योगिनीहृदये

'भूमिश्चन्द्रः शिवो माया शक्तिः कृष्णाध्वमादनौ ।
अर्धचन्द्रश्च बिन्दुश्च नवार्णो मेरुरुच्यते ।
महात्रिपुरसुन्दर्या मन्त्रा मेरुसमुद्भवाः ॥'

इति ज्ञानार्णवादावप्यसकृद्व्यवहारस्य दर्शनाच्च । ध्वनिपदेन व्यवहारस्तु तत्तुल्यत्वाल्लक्षणया ध्वनिपर्यायनादपदवाच्यत्वान्नेयार्थ-रूपलक्षणया वा नेय इति दिक् । एवं च प्रथमतृतीयकूटे अष्टादश-वर्णात्मके; मध्यमकूटं तु चतुरधिकम्; संहत्याष्टपञ्चाशद्वर्णात्मिका विद्येति सिद्धम् । यद्यपि बिन्दुविनिर्मुक्तानामष्टानामेव नादसंज्ञा मन्त्रशास्त्रे, तथापि व्यवहारसौकर्याय तत्सहितानामेव सात्र कृतेति ध्येयम् ॥ १२, १३ ॥

*(இதனை மேலும் விளக்குகிறார்.) பிந்து முதலிய ஒன்பதும் ஸூக்ஷ்மமான நேர இடைவெளியில், மிக ஸூக்ஷ்மமான - மிக மிக ஸூக்ஷ்மமான நேர இடைவெளியில், உச்சரிக்க வேண்டிய ஒலிகள் அல்லது எழுத்துகள். 'க' முதலான எழுத்து போல் சிறக்க உச்சரிக்க முடியாத ஸூக்ஷ்ம ஒலி இது. வீணைத் தந்தியின் மீட்டலில் கார்வையாக வரும் ஒலி கிரமமாக தேய்வுறுவது போல் சிறிது சிறிதாக காதில் ஒலிக்காமல் குறைகிற ஒலி.* அகாரம் இகாரம் *என்பது போல் தனி எழுத்துவடிவமற்றது. அதனால் பீஜம் பிந்து இவற்றில் எழுகிற ஒலியை எழுத்தாகக் கொள்ளாமல் ஒலி (த்வனி) என்றே குறிப்பிடுவர். இது ஒலியா*

எழுத்தா ? ஒலி என்றும் எழுத்து என்றும் சொல்லலாம். அம் என்பதில் உள்ள 'ம்' ஐ அனுஸ்வாரம் என்றும் அ: என்பதில் உள்ள ':'ஐ விஸர்கம் என்றும் பெயருடன் குறிப்பிட்டு அனுஸ்வாரத்தையும் விஸர்கத்தையும் எழுத்தென்றே குறிப்பிடுவர். உண்மையில் இங்குள்ள 'ம்'க்கோ ':'க்கோ தனித்து உச்சரிப்பில்லை. அதன் முன் अः आः என ஏதோ ஒரு உயிர் எழுத்து இருக்க வேண்டும். தனித்திருக்க இயலாத நிலையிலும் அதற்கு 'எழுத்து' என்ற நிலை உண்டு. அதனுல் பிந்து முதலானவை எழுத்து என்ற நிலையும் ஒலி என்ற வடிவமும் கொண்டவை எனக் கொள்ளத் தகும்.

பாணினி எழுத்துக்களின் எண்ணிக்கையை தனது சிக்ஷா (பாணினீய சிக்ஷா) நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறுர்.

त्रिषष्टिर्वा चतुःषष्टिः वर्णाः शंभुमते मताः ।
प्राकृते संस्कृते चापि स्वयं प्रोक्ताः स्वयंभुवा ॥

स्वरा विंशतिरेकश्च स्पर्शानां पञ्चविंशतिः ।
यादयश्च स्मृता ह्यष्टौ चत्वारश्च यमाः स्मृताः ॥

अनुस्वारो विसर्गश्च ≍ क≍पौ च पराश्रितौ ।
दुःस्पष्टश्चेति विज्ञेयः ॢकारः प्लुत एव च ॥

(அதாவது अ इ उ ऋ ऌ என குறில் 5, आ ई ऊ ॠ ए ऐ ओ औ என நெடில் 8, अ इ उ ऋ ऌ ए ऐ ओ औ இவற்றின் ப்ளுதம் 9, क च ट त प என்றவர்க எழுத்துக்கள் 25, य र ल व श ष स ह என 8, யமாக்ஷரங்கள் 4, அனுஸ்வாரம் (अं) விஸர்கம் (अः) ஜிஹ்வாமூலீயம் (≍क) உபத்மானீயம் (≍प) என 4 என 63 வர்ணங்கள் என எண்ணியிருப்பது குறிப்பிடத்தக்கது. कवर्गத்தின் முதல் நான்கு எழுத்துகள் क ख ग घ என இவை न முதலிய அனுஸ்வார எழுத்துடன் சேரும் போது இரட்டிக்கும். அவை யம அக்ஷரங்கள். (யம-இரட்டை) पलिक्नीः என்பது पलिक्क्नीः என்ருகும். அவ்வாறே चख्ख्नतुः, अग्ग्निः, घ्घ्नन्ति என்றவாறு நான்கு இரட்டை எழுத்துகளும் யம

*அக்ஷரங்கள்.)* वर्गेष्वाद्यानां चतुर्णां पञ्चमे परे मध्ये यमो नाम पूर्वसदृशो वर्णः प्रातिशाख्ये प्रसिद्धः । पलिक्क्नीः चख्ख्नतुः,अग्ग्निः,, घ्घ्नन्तीत्यत्र क्रमेण कखगघेभ्यः परे तत्सदृशा एव यमाः ।) *அனுஸ்வாரமும் விஸர்கமும் அங்கு சேர்க்கப்பட்டதன் காரணம் அவைகளையும் சிறப்பாக உச்சரிக்க முடியும் என்பதால்தான்.* ஌ என்ற நெடிலெழுத்து சேர 64 வர்ணங்கள்.

*தாடை முதலியவற்றில் மோதி ஒலிச்சிறப்பு பெறுவதால்* **अ क** *முதலியவை வர்ணங்கள். பிந்து முதலியவை அப்படி மோதாததால் வர்ணங்கள் அல்ல என்பதும் சரியாகாது. முன் விளக்கம் பெற்றுள்ள ஒலிவரிசையில் வைகரீயைத்தவிர பரா பச்யந்தீ மத்த்யமா என்ற மூன்றும் மோதா ஒலிகளே. வாக்கின் நான்கு நிலைகளும் எழுத்தின் உருவமாகி எழுத்துக்களின் இணக்கமே பதமாகிறது என 'சத்வாரி வாக் பரிமிதா பதாநி என வேதமும் கூறுகிறது.*

*சதுச்சதீ என்ற தந்திர சாஸ்திரத்தில் நாதத்திற்கும் பொருள் உண்டு என்று கூறியிருப்பதும் இந்நிலையில் பொருந்துமே ! பதத்திற்கே பொருள் என்ற நிலைமாறி எழுத்துக்கும் அதன் நுண்பகுதிகளான நாதம் முதலியவற்றிற்கும் பொருள் உண்டெனில் அவையும் உருவமைந்த எழுத்துவடிவமே*

1. **பிந்து:** நெற்றியின் மத்தியில் தீபத்தைப் போன்ற ஒளியுடையதாய் வட்டமாயிருக்கும். (கீழ்க்கோடு சார்பைக் குறிக்கும்)

2. **அர்த்தசந்திரன்:** பிந்துவின் மேல் ஒளியிலும், வடிவிலும் பிறைபோலிருக்கும்.

3. **ரோதிநீ:** நிலவைப் போன்ற ஒளியும், முக்கோண வடிவும் கொண்டது.

4. **நாதம்:** பத்மராகம் எனும் சிகப்புநிற ரத்தினத்தின் ஒளியுடன் பீஜகோசங்களுக்கு இடையே உள்ள தையல்போல் வடிவம் கொண்டது.

5. **நாதாந்தம்:** மின்னலைப்போல் ஒளியுடன் இடது பக்கத்தில் பிந்துவோடு ஏர்க்காலைப் போன்றுள்ளது.

6. **சக்தி:** குறுக்கே இரு பிந்துக்கள். இடது பிந்துவின் மேல் செங்குத்துக்கோடு. சக்தியின் வடிவமிது.

7. **வியாபிகா:** கீழே பிந்துவைக் கொண்ட முக்கோண வடிவம் கொண்டது.

8. **ஸமநா:** மேலும் கீழும் பிந்துவுடன் கூடிய செங்குத்துக் கோட்டின் வடிவம் கொண்டது.

9. **உந்மநீ:** கீழ் பிந்துவுள்ள செங்குத்துக் கோட்டின் வடிவம் கொண்டது.

10. **மஹாபிந்து:** சார்பற்ற தனி பிந்து.

*மேலும் விளக்கம் 22-26 சுலோகங்களில் காணலாம். யோகினீ ஹ்ருதயத்தில் ஸ்ரீவித்யையிலுள்ள மூன்று ஹ்ருல்லேகாக்களிலும் சேர்ந்து 15 அக்ஷரங்கள் உள்ளன என்று கூறப்படுகிறது. ஹ் ர் ஈ ம் நாதம் என்ற ஐந்து அவயவங்கள் ஒவ்வொரு ஹ்ருல்லேகாவிலும் உண்டு. அதனுல் நாதமும் அக்ஷரமே என்று தேறுகிறது.*

**भूमिःचन्द्रः शिवो मायां शक्तिः कृष्णाध्वमादनौ । अर्धचन्द्रश्च बिन्दुश्च नवार्णो मेरुरुच्यते ॥** *என ஜ்ஞானார்ணவத்தில் மஹாத்ரிபுர ஸுந்தரியின் மந்திரம் மேருமந்த்ரத்திலிருந்து தோன்றியது. மேருமந்த்ரம் 9 அக்ஷரங்கள் கொண்டது. பூமி ல, சந்திரன் ஏ, சிவன் ஹ், மாயா ஈ, சக்தி ஏ. க்ருஷ்ணாத்வா ர், மாதன: க், பிந்து அநுஸ்வாரம். அர்த்த சந்த்ரன் என்பது ஸ்வரநீட்சியின் பகுதி. என ஒன்பது அட்சரம் கொண்டதாக மேரு மந்திரம் (கஏஈலஹ்ரீம் என்ற வாக்பவ கூடம் 9 அட்சரம் கொண்டதாக (க ஏ ஈ ல என 4 ஹ்ர்ஈம் - அர்த்த சந்திரன் என 5. எளிதில் புரியாதவாறு குருமூலமாகத் தெரிந்து கொள்ளத்தக்கதென அக்ஷரவரிசையையும் மாற்றி ஜ்ஞானார்ணவம் குறிப்பிடுகிறது). அனுஸ்வாரமும் அர்த்த சந்திரனும் தனி அட்சரமாக ஏற்கப்பட்டுள்ளது. நாதம் நாதாந்தம் முதலியவற்றை ஒலி எனக் குறிப்பிடக் காரணம், நாதம் முதலான பெயர்களே ஒலி என்ற பொருள்*

கொண்டதால் இருக்கலாம். அப்போது லக்ஷணையாக எழுத்து என்ற பொருளும் கொள்ளலாம். முதல் கூடமும் மூன்றும் கூடமும் 18 எழுத்துக்கள் கொண்டவை.

பிந்து வெனும் அனுஸ்வாரம், மற்ற எட்டும் நாதமென்று மந்திர சாஸ்திரம் குறிப்பிடுமெனினும் வழக்கில் பிந்துவையும் சேர்த்தே நாதம் எனக் குறிப்பிடுகின்றனர். (12-13)

இதை விளக்குகிறார்.

सिद्धमेवाह—

प्रथमेऽष्टादश वर्णा द्वाविंशतिरक्षराणि मध्ये स्युः ।
प्रथमेन तुल्यमन्त्यं संघातेनाष्टपञ्चाशत् ॥ १४ ॥

முதல் கூடத்தில் 18, நடுக்கூடத்தில் 22, கடைசிக் கூடத்தில் 18 என 58 அக்ஷரங்கள். (14)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| क् अ | 2 | ह् अ | 2 | स् अ | 2 |
| ए | 1 | स् अ | 2 | क् अ | 2 |
| ई | 1 | क् अ | 2 | ल् अ | 2 |
| ल्-अ | 2 | ह् अ | 2 | ह् र् ई म् | 4 |
| ह् र् ई म् | 4 | ल् अ | 2 | नादः | 8 |
| नादः | 8 | ह् र् ई म् | 4 | | 18 |
| | 18 | नादः | 8 | | |
| | | | 22 | | |

இந்த அக்ஷரங்களை உச்சரிப்பதில் உள்ள காலவரையை விளக்குகிறார்.

वर्णानां कालानाह—

मात्राद्वितयोच्चार्या कामकला च त्रिकोणा च ।
बिन्दुरहितहल्लेखा मात्राकालत्रयोच्चार्याः ॥ १५ ॥

अन्येषां वर्णानां मात्राकालोऽर्धमात्रया सहितः ।
बिन्दोरर्धं मात्रा परे परे चापि पूर्वपूर्वार्धाः ॥ १६ ॥

संहत्यैकलवोनो मात्राकालोऽस्य नादस्य ।

मात्रा लघ्वक्षरस्य कालः । तद्द्विगुणो गुर्वक्षरस्य । अत एव कामकला, कमला त्रिकोणा, योनिश्च द्विमात्रा । हृल्लेखायां द्वयोर्व्यञ्जनयोरेका मात्रा, कामकलाया द्वे मात्रे इति तिस्रः । अन्येषामकारसहितानां ककारादिदशवर्णानाम् । बिन्दोरपि व्यञ्जनत्वादर्धा मात्रा, 'एकमात्रो भवेद्ध्रस्वो द्विमात्रो दीर्घ उच्यते । त्रिमात्रस्तु प्लुतो ज्ञेयो व्यञ्जनं त्वर्धमात्रकम् ॥' इति वचनात् । परे परे, अर्धचन्द्ररोधिन्यादयः, पूर्वपूर्वार्धाः; अर्धचन्द्रस्यार्धकालो रोधिन्याः, रोधिन्यर्धकालो नादस्येत्यादिक्रमेण कालवन्तः । अयं भावः— कालपरमाणुर्लव इत्युच्यते । 'नलिनीपत्रसंहत्याः सूक्ष्मसूच्यभिवेधने । दले दले तु यः कालः स कालो लवसंज्ञितः । अतः सूक्ष्मतमः कालो नोपलभ्यो भृगूद्वह ॥' इति वचनात् । षट्पञ्चाशदुत्तरशतद्वयलवैरेका मात्रा । बिन्दोरष्टाविंशत्युत्तरशतं लवाः । अर्धचन्द्रस्य चतुःषष्टिः । रोधिन्या द्वात्रिंशत् । नादस्य षोडश । नादान्तस्याष्टौ । शक्तेश्चत्वारः । व्यापिकाया द्वौ लवौ । समनाया एको लवः । उन्मनायास्तु नास्त्येव कालः । (यद्यपि योगिनीहृदये चक्रसंकेते 'दीपाकारोऽर्धमात्रश्च' इत्यनेन बिन्दोः कालमुक्त्वा अर्धचन्द्रादेः शक्तिपर्यन्तस्य चतुरंशाष्टांशषोडशांशादि-रूपभागद्वैगुण्यं कालस्योक्त्वा शक्त्यादीनां पूर्वपूर्वद्विगुणांशकालवत्त्वं सामान्येनोक्तम् 'चतुःषष्टिस्तदूर्ध्वं तु द्विगुणं द्विगुणं ततः' इति, तेन च वचनेन मात्राया द्वादशोत्तरपञ्च-शततमो भाग उन्मनाकालः, मात्रास्वरूपं च द्वादशोत्तरपञ्चशत-लवात्मकत्वमेव प्रतीयते, अत एव 'देशकालानवच्छिन्नं तदूर्ध्वं परमं महत्' इत्युत्तरग्रन्थेऽप्युन्मनायाः

परत एव कालानवच्छेद उक्त इति व्यक्तं प्रतीयते; तथापि 'चतुःषष्टिः—' इति श्लोकस्य शक्तेश्चतुःषष्टितमो मात्राभागः, तदूर्ध्वं द्विगुणं व्यापिकाया अष्टाविंशत्युत्तरशततमो भागः, ततो द्विगुणं समनायाः षट्पञ्चाशदुत्तरशतद्वयात्मको भाग इत्यर्थस्ततस्तदूर्ध्वमिति पदाभ्यां द्विगुणपदद्वयेन च स्पष्टं प्रतीयते; अत एवोत्तरार्धे 'शक्त्यादीनां च मात्रांशो मनोन्मन्यास्तथोन्मनी' इत्यत्र मनोन्मनीति पदस्य समनापर्यायस्य समनापर्यन्तानामित्यर्थकत्वमङ्गीकृत्य शक्त्यादीनां तिसृणामित्यमृतानन्दैर्व्याख्यातम् ।) नादस्य बिन्द्वादि-नवकस्य ॥ १५-१६ ॥

உயிர் எழுத்துக்களில் (லகு) அ இ உ முதலிய குறில் எழுத்துக்களை உச்சரிக்கத் தேவைப்படுகிற நேர அளவை **மாத்திரை** என்பர். ஆ ஈ முதலியவற்றின் உச்சரிப்பிற்கான நேரம் லகு எழுத்திற்கானதை விட இரு மடங்கு - இருமாத்திரைகளாகும். மெய்யெழுத்தை உச்சரிக்க $^1/_2$ மாத்திரை க் ச் ட் என உயிரெழுத்துடன் கூடாத மெய்யெழுத்தே $^1/_2$ மாத்திரை காலத்தில் உச்சரிக்கத்தக்கது. குறில் உயிர் எழுத்துடன் உச்சரிக்க (क कि कु) $1^1/_2$ மாத்திரை நெடிலுடன் $2^1/_2$ மாத்திரை. कं खं என்றவாறு உயிர் எழுத்துடன் ஒட்டிவருகிற அனுஸ்வாரம் (பிந்து - புள்ளி) $^1/_2$ மாத்திரை நேரத்தில் உச்சரிக்கத்தக்கது. இதனை மனத்திற் கொண்டு விளக்குகிறுர்.

காமகலா (ई) வும் திரிகோணா(ए) வும் 2 மாத்திரை நேரத்தால் உச்சரிக்கக் கூடியவை. பிந்துவுடன் சேராத ஹ்ருல்லேகா (ह्रीं) 3 மாத்திரை காலத்தில் உச்சரிக்கத் தக்கது. பஞ்சதசாக்ஷரியின் மற்ற எழுத்துக்கள் ஒவ்வொன்றும் ஒன்றரை மாத்திரை கொண்டவை. பிந்துவுக்கு $^1/_2$மாத்திரை பிந்துவைத் தொடர்ந்து வருகிற அர்த்தசந்திரன் முதலிய பிந்துவின் கார்வை நிலைகளின் அளவு முன்னதைவிடப் பின்னது பாதியளவு என்ற வகையில் ஒரு லவ அளவு குறைந்த ஒரு மாத்திரை.

ஒரு மாத்திரை என்பது 256லவம் கொண்டது. பிந்து 128 லவம், அர்த்தசந்திரன் 64லவம். ரோதினீ 32 லவம், நாதம் 16லவம், நாதாந்தம் 8லவம், சக்தி 4லவம் வ்யாபிகா 2லவம், ஸமனா 1லவம். உன்மனி 0லவம் என 255 லவங்கள் கொண்டகாலவரை. அதனால் ஒரு மாத்திரை அளவில் ஒரு லவநேரம் குறைவு.

அதனால் ए ई என்ற குரு அக்ஷரங்கள் 2+2=4 மாத்திரைகள். பிந்து சேரா ह्री மூன்றும் 9 மாத்திரை. क ल ह स क ह ल स क ल என்ற மற்ற 10 எழுத்துக்களும் ($10X1^1/_2$) 15 மாத்திரைகள். மூன்று ह्रीं ன் மூன்று பிந்துக்களும் சேர்ந்து 3லவம் குறைந்த 3மாத்திரைகள். அதனால் பஞ்சதசாக்ஷரியின் மொத்தகால அளவு 3லவம் குறைந்த 31மாத்திரைகள். பிந்துவான (—) ம் மெய்யானதால் $^1/_2$ மாத்திரை என்பது நினைவிற் கொள்ளத்தக்கது.

லவம் என்பது மென்மை மிக்கத் தாமரை இதழ்களை ஒன்றன் மேல் ஒன்றாக வரிசையாக அடுக்கிக் கூர்மிக்க ஊசியால் துளைக்கிற நேரம் என்று விளக்குவர். மிக மிக சூட்சுமமான இந்தக் காலவரை வெளிப்புலன்களால் உணரத்தக்கதல்ல. இதனை விட நுண்ணிய காலவரைக் கணக்கு உண்டு. எனினும் அது எழுத்து உச்சரிப்பில் தேவையற்றது.

யோகினீ ஹ்ருதயத்தின் உரையாசிரியர் அம்ருதானந்தயோகி பிந்து முதலியதன் அளவீட்டில் உந்மநா என்பது $^1/_2$லவ அளவு (மாத்திரையில் 512ல் ஒரு பங்கு) எனக் குறிப்பிடுகிறார்.

பிந்து முதல் உன்மநா வரை உள்ள ஒன்பதையும் பொதுவாக நாதம் என்பர். நாதம் என்பது 255லவ அளவுள்ள நேரம் ★ (15-16)

एकादश वाक्कूटे सार्धा एकादशोदिता मध्ये ॥ १७ ॥

सार्धा अष्टौ शक्तावेकैकलवोनिता मात्राः ।
संहत्यैकत्रिंशन्मात्रा मन्त्रे लवत्रयन्यूनाः ॥ १८ ॥

शक्तौ तृतीयकूटे ॥ १७-१८)

ஆக வாக்பவ கூடத்தில் **(क ए ई ल ह्रीं)** ஒரு லவம் குறைவாக 11 மாத்திரைகள். மத்யகூடத்தில் **(हस क ह ल ह्रीं)** ஒரு லவம் குறைவாக 11 1/2 மாத்திரைகள். மூன்றுவதான சக்தி கூடத்தில் **(सकलह्रीं)** ஒரு லவம் குறைவாக 8 மாத்திரைகள். ஆக 3லவம் குறைந்த 31 மாத்திரைகளில் பஞ்சதசி உச்சரிக்கப்படுகிறது. (17-18)

இந்த 15 எழுத்துக்களும் வைகரியாகத் தொண்டையிலிருந்து வெளிவரும் போது, அந்தக் காற்று வடிவிலுள்ள ஒலி மோதுமிடத்திற்கும் செயலழுத்தத்திற்கும் ஏற்ப எழுத்தொலியாக மாறுவதால், 15 அட்சரங்கள் அடிபடும் இடங்கள் மற்றும் அழுத்தம் பற்றி விளக்குகிறுர்.

उत्पत्तिस्थानयत्नावाह—

**कण्ठे च कण्ठतालुनि तालुनि दन्तेषु मूर्ध्नि नासायाम् ।
स्पृष्टविवाराद्यान्तरबाह्यैर्यत्नैस्तदक्षरोत्पत्तिः ॥ १९ ॥**

★கால அளவை (பாகவதம்-3-11)
ஒருநாள் 24 மணிநேரம் கொண்டது. 8யாமங்கள் - 1நாள் (24மணிகள்)
6 முஹுர்த்தங்கள் - 1 யாமம் (3 மணி)
2 நாடிகள் 1 முஹுர்த்தம் (30 நிமிஷம்)
15 லகு 1 நாடி (15 நிமிஷம்)
15 காஷ்ட்டா 1 லகு (1 நிமிஷம்)
5 க்ஷணம் 1 காஷ்டா (4 ஸெகண்டு)
3 நிமேஷம் 1 க்ஷணம் (4/5 ஸெகண்டு)
3லவம் 1 நிமேஷம் - 26.6/100 ஸெகண்டு
3 வேதம் 1 லவம் - 8.8/100 ஸெகண்டு
100 த்ருடி 1 வேதம் - 2.8/100 ஸெகண்டு
3 த்ரஸரேணு 1 த்ருடி - 2.8/10000 ஸெகண்டு
2பரமாணு - 1 த்வ்யணுகம்.
3த்வ்யணுகம் 1 த்ரஸரேணு)

(1)தொண்டையிலும், (2) தொண்டையிலும் தாடையிலும், (3) தாடையிலும் (4) பற்களிலும் (5) மேலண்ணத்திலும் (6) மூக்கிலும் என்று ஆறு இடங்களில் ஏற்படுகிற மோதலாலும், உள்ளழுத்தம் மற்றும் வெளி அழுத்தம் முதலியவற்றாலும் எழுத்தொலிவடிவம் பெறுகின்றன.

ककारत्रयमकारदशकं हकारपञ्चकं च कण्ठे । द्वितीयमक्षरं कण्ठतालुनि । प्राण्यङ्गत्वादेकवद्भावः । ईकारचतुष्टयं तालुनि । लकारत्रयं सकारद्वयं च दन्तेषु । रेफत्रयं तु मूर्ध्नि । बिन्द्वादिनवकत्रयं नासायाम् । स्पृष्टेति । ककाराः स्पृष्टयत्नाः । अकाराः संवृताः । ईकारा एकारश्च विवृताः । रेफा लकाराश्चेषत्स्पृष्टाः । हकाराः सकारौ चेषद्विवृताः । बिन्द्वादयः संवृततमाः । इत्याभ्यन्तरो यत्नः । ककारा विवारश्वासाघोषवन्तोऽल्पप्राणवन्तश्च । सकारौ महाप्राणवन्तौ विवारादिमन्तौ च । स्वराः सर्वेऽप्युदात्ताः । रेफा लकाराश्च संवारनादघोषाल्पप्राणवन्तः । हकारास्तु संवारादित्रयवन्तो महाप्राणवन्तश्च । बिन्द्वादयस्त्वात्यन्तिकसंवारादिचतुष्कवन्तः । इति बाह्यः प्रयत्नः ॥ १९ ॥

*இந்த 15 எழுத்துக்களில் क 3, अ 10, ह 5, என இவை தொண்டையில் வெளிப்படுபவை. ए என்பது தொண்டையிலும் தாடையிலும் வெளியானது. ई 4 எழுத்துக்களும் தாடையில். ल 3 स 2 பற்களில். र 3 மேலண்ணத்தில். பிந்து 3 முதலிய நாதங்கள் மூக்கில்.*

*क-3ம் ஸ்ப்ருஷ்டம், अ10ம் விவ்ருதம்- ई4, एம் விவ்ருதம், र3, ल3 ஈஷத்ஸ்ப்ருஷ்டம். ஹ 5, स2 ஈஷத் விவ்ருதம். பிந்து முதலிய நாதங்கள் ஸம்வ்ருததமம். என உள்ளழுத்தத்தில் வேறுபாடுகள். क3, விவாரம் ச்வாஸம், அகோஷம் என்று குறைந்த பிராண சக்தியால் எழுபவை. (அல்பப்ராணம்)स2ம் விவாரம் முதலிய அதிகபிராண*

சக்தியால் எழுபவை. (மஹாப்ராணம்) இதில் உள்ள மெய்யெழுத்துக்கள் உதாத்தஸ்வரத்தில் சொல்லப் படுபவை. ₹3ம் ऊ3ம் ஸம்வாரம் நாதம் கோஷம் என்ற அழுத்தத்தில் பிராண சக்தி குறைந்து பயன்படுபவை. ई5ம் ஸம்வாரம் முதலிய அழுத்தத்தில் பிராண சக்தி அதிகம் பயன்படுபவை. பிந்து முதலியவை ஸம்வார நாத கோஷங்களுடன் பிராண சக்தி குறைவாகப் பயன்படுபவை. இவை வெளி அழுத்தத்தால் வடிவுறுபவை.

மூலாதாரத்திலிருந்து எழும் பரா எனும் ஒலிசக்தியின் வேகம் இதயத்தைக் கடந்து குரல்வளையின் மூலம் வைகரி என்ற நிலை பெறுகிறது. [(ச்லோ.5)] குரல்வளையில் நுழைந்ததும் காற்றுவடிவில் பல இடங்களில் மோதுகிறது. தொண்டை, தாடை, பல், மேல் அண்ணம், உள் நாக்கு, மூக்கு முதலியவை மோதும் இடங்கள். இவையே எழுத்தொலியாக மாற்றுகிற ஸ்தானங்கள். எழுத்துக்கள் உருப்பெற தொண்டை முதல் உதடு வரை உள்ள பகுதிகளில் உள்ள தசைகளில் பலவாறு அசைவு - இயக்கம் நேர்கிறது. பேசுகிற எண்ணத்தின் விளைவான தசை அசைவிற்கான பிரயத்தினங்களும் இதில் உதவுகின்றன. இந்த பிரயத்னங்கள் இருவகைப்படும். ஆப்யந்தாம் (உள்ளியக்கம்) பாஹ்யம் (வெளி இயக்கம்) என. உதடு மூடித்திறத்தல், நாக்கு அசைதல் முதலியவை வெளி இயக்கமாகும். தொண்டை முதலியவற்றில் ஏற்படுவது உள் இயக்கம். ஸ்ப்ருஷ்டம், ஈஷத் ஸ்ப்ருஷ்டம் விவ்ருதம் ஸம்வ்ருதம் என நான்கும் உள்ளியக்கத்தின் நிலைகள். விவாரம் ஸம்வாரம் சுவாஸம் நாதம் கோஷம் அகோஷம் அல்பப்ராணம் மஹாப்ராணம் உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதம் என்ற பதினொன்றும் வெளி இயக்க நிலைகள்.

ஸ்பருஷ்ட நிலையில் உருவாகிற எழுத்துக்கள் -कவிலிருந்து म முடிய உள்ள வர்க்க எழுத்துக்கள். ஈஷத்ஸ்ப்ருஷ்டத்தில் यरलव. விவ்ருதத்தில் - शषसह. உயிர் எழுத்துக்கள் (अ-औ). ஸம்வ்ருதத்தில். தனித்த अ, மற்றவற்றுடன் சேரும் போது விவ்ருதமே.

விவாரம் சுவாஸம், மற்றும் அகோஷத்தில் कख, चछ, टठ, तथ, पफ, இவற்றின் இரட்டிப்பு, ᳵक, ᳵप, ᳵख, ᳵफ, விஸர்கம் शष स.

ஸம்வாரம் நாதம், மற்றும் கோஷத்தில் மற்றவை. மஹாப்ராணம் - அதிக பிராண அழுத்தம் தேவைப்படுகிற ख, घ, छ झ, ठढ, थध, फभ, शष सह

அல்பப்ராணம் - குறைந்த பிராண அழுத்தம் தேவைப்படுபவை. कगङ, चजञ, टडण, तदन, पबम, यरलव

உதாத்தம் அநுதாத்தம் என்பவை ஸ்வர ஏற்ற இறக்கத்தில் மாறுபாடு. இந்த ஸ்தான - பிரயத்ன நிலைகள் மிக சூட்சுமமானவை. வியாகரணமும் சிக்ஷையும் இதனை நன்கு விளக்குகின்றன.

பஞ்சதசி எழுத்துக்கள் குண்டலினியில் பெறும் இடத்தையும் வடிவையும் விளக்குகிறார்.

अथ वर्णानां स्थितिस्थानं रूपमाकारं चाह—

प्रलयाग्निनिभं प्रथमं मूलाधारादनाहतं स्पृशति ।
तस्मादाज्ञाचक्रं द्वितीयकूटं तु कोटिसूर्याभम् ॥ २० ॥

तस्माल्ललाटमध्यं तार्तीयं कोटिचन्द्राभम् ।
मालामणिवद्वर्णाः क्रमेण भाव्या उपर्युपरि ॥ २१ ॥

मूलाधारादित्यादि पञ्चमीत्रयं ल्यब्लोपे । मूलाधारमारभ्येत्यर्थः । तस्मादनाहतमारभ्य । तस्मादाज्ञाचक्रमारभ्य । इदं च स्थानत्रयं बिन्द्वादिरहितकूटत्रयस्यैव । सुषुम्णाख्यनाडीमूलाग्रयोर्द्धे सहस्रदलकमले, मध्ये चाष्टदलषड्दलादीनि त्रिंशत्पद्मानि सविस्तरं स्वच्छन्दसंग्रहादौ प्रपञ्चितानि । तत्र गुदोपरि द्व्यङ्गुलोर्ध्वे लिङ्गे नाभौ हृदि कण्ठे भ्रूमध्ये च मूलाधारस्वाधिष्ठानमणिपूरानाहत-

विशुद्धयाज्ञानामकानि चतुःषड्दशद्वादशषोडशद्विदलानि द्विद्वि-ग्रन्थिमध्यसंदष्टानि चक्रपदवाच्यान्यपि षट् पद्मानि सन्तीत्यन्यत्र विस्तरः ॥ २०,२१ ॥

முதல் கூடம் பிரளயாக்னி போன்றது. அது மூலாதாரத்திலிருந்து அநாஹதம் வரை பரவி நிற்கிறது. அநாஹதத்திலிருந்து நடுநெற்றியிலுள்ள ஆஜ்ஞாசக்ரம் வரை இரண்டாவது கூடம் கோடி சூரியர்களின் ஒளியுடன் அளாவி நிற்கிறது. மூன்றுவது கூடம் நெற்றி நடுவிலிருந்து ஸஹஸ்ராரம் வரை கோடி சந்திரர்களின் ஒளியுடன் அளாவி நிற்கிறது. மாலையில் கோர்த்துள்ள ரத்தின மணிபோல் இவ்வெழுத்துக்கள் ஒன்றன் மீதொன்ருக இருப்பதாகப் பாவனை செய்ய வேண்டும்.

மூன்று கூடங்களிலும் உள்ள இடங்கள் பிந்து நீக்கிய எழுத்துக்களுக்கு மட்டுமே.

குதவாயிலின் மேல் மூலாதாரமும், குறிக்கு இரண்டங்குலம் மேல் ஸ்வாதிஷ்டானமும், நாபியில் மணிபூரகமும், இதயத்தில் அநாஹதமும், தொண்டையில் விசுத்தியும் புருவ நடுவில் ஆஜ்ஞையும் இடம் பெறுகின்றன. இவை முறையே 4,6,10,12,16,2 தளங்கள் உள்ள தாமரை போன்றவை. மேலும் கீழுமாக கிரந்திகள் இவற்றின் மூலம் சக்தி ஸஞ்சாரத்தைக் கட்டுப் படுத்துகின்றன. ஒவ்வொரு சக்ரத்திடையேயும் குண்டலியின் பாதையில் பாதை குறுகிச் சக்தியின் போக்குவரத்து கட்டுப்படுத்தப்படுகிறது. இவை கிரந்திகள் எனப்படும். மூலாதார ஸ்வாதிஷ்டானங்களுக்கு இடையேயும் ஸ்வாதிஷ்டான - மணிபூரகங்களுக்கு இடையேயும் உள்ள கிரந்திகள் பிரம்ஹக்ரந்தி. மணிபூரக-அநாஹதங்களுக்கிடையேயும் அநாஹத விசுத்திகளுக்கு இடையேயும் உள்ளது விஷ்ணு க்ரந்தி. விசுத்திக்கும் ஆஜ்ஞைக்கும் இடையேயும் ஆஜ்ஞைக்கும் அதன் மேலுள்ள குலசக்கிரங்களுக்கும்

இடையேயும் உள்ளது ருத்ரக்ரந்தி. இவற்றின் மூலம் கட்டுப்பட்டுக் குண்டலினி மேலேறிக் கீழ் இறங்குகிறது. இதன் விளக்கம் பின்னரும் உண்டு. (20-21)

आधारोत्थितनादो गुण इव परिभाति वर्णमध्यगतः ।

மூலாதாரத்திலிருந்து கிளம்பிய நாதம் (ஒலி) வர்ணங்களின் இடையே, ஆடையின் இடையே நூல் போல் காணப்படுகிறது.

अत्रेयं शब्दसृष्टिप्रक्रिया—वटबीजान्तर्गतवटवृक्षीयसूक्ष्मरूपतुल्यशब्दसृष्टिसूक्ष्मरूपशालिनी पूर्वोक्तरूपा त्रिपुरसुन्दर्येव तादृशसूक्ष्मरूपवत्त्वप्रवृत्तिनिमित्तकपरापदवाच्या । सैव च माति तरति कायतीति च व्युत्पत्त्या मातृकेत्युच्यते । तस्यां च निर्विकारायामप्यनादिसिद्धप्राण्यदृष्टवशात् स्वान्तः संहृतविश्वसिसृक्षा उत्पद्यते । ततः स्रष्टव्यपदार्थानालोचयति, 'तदैक्षत बहु स्यां प्रजायेय' इति श्रुतेः । तादृशमीक्षणमेव प्रवृत्तिनिमित्तीकृत्य तस्यां पश्यन्तीति पदं प्रवर्तते । सैव च पश्यन्त्याख्या मातृका करणसरणितः उत्तीर्णत्वादुत्तीर्णे-त्युच्यते । तदवयवाश्च वामादयोऽष्टौ शक्तयोऽन्यत्र प्रपञ्चिताः । अतः सैव व्यष्टिसमष्टिभेदेन नवविधा । ततो नव नादा अविकृतशून्यादयो जाताः । तत्समष्टिश्च नादध्वन्यादिपदवाच्या नातिसूक्ष्मा परावत्, नातिस्थूला वैखरीवत्, अतो मध्यमाख्या मातृका । मध्यमावयवरूपं अविकृत-शून्य-स्पर्श-नाद-ध्वनि-बिन्दु-शक्ति-बीजाक्षराख्यं नादनवकं मूलाधारादिषट्के नादे नादान्ते ब्रह्मरन्ध्रे च स्थितम् । नवभिर्नादैः अकचटतपयशळाख्यवर्गनवकवती वैखर्याख्या मातृका जाता, वैनिश्चयेन स्पष्टतरत्वात्, खं कर्णविवरवर्तिनभोरूपश्रोत्रेन्द्रियं, राति गच्छति, तज्जन्यज्ञान-विषयो भवतीति व्युत्पत्तेरित्याद्यन्यतो विस्तरः ।

एवं च ककारादौ कत्वादिवर्णधर्माणां षड्जत्वादिध्वनिधर्माणां चानुभूयमानत्वात् परिणामे परिणामिनोऽनुस्यूतताया मृद्घटे दर्शनाच्च वर्णेषु नादोऽनुस्यूतः । तन्तुविशेषजन्यः पटविशेषो वर्णकपदवाच्यः । तत्र कप्रत्ययपरित्यागेन प्रयोगस्त्वक्षरवाचकवर्णपदेन श्लेषार्थः । गुण इव वर्णाकाख्यपटविशेषोपादानभूततन्तुविशेषवत्, मालामण्याधार-सूत्रवच्चेत्यर्थः । वर्णमध्यगत इत्यस्य द्वयोर्वर्णयोर्मध्यभागे वर्ण-शरीरान्तर्भागे च स्थित इत्यर्थः ।

अयं भावः— द्वयोर्वर्णयोर्मध्यभागे मणिद्वयमध्यभागस्थ-शुद्धसूत्रवच्छुद्धनादस्य भानम्, वर्णशरीरान्तर्भागे तु पटाभेदेन संवलिततन्तुवद्घटान्तर्मृद्वच्च तत्तद्वर्णाभेदेनैव नादस्य भानम्, न पुनस्तत्र मण्यन्तर्गतसूत्रदृष्टान्तः, तस्य मणितोऽत्यन्तभिन्नत्वादिति ॥ २१॥

வரிவஸ்யா ரஹஸ்யம் என்ற இந்த நூல் ஸ்ரீமாதாவின் ஒரு ஸ்வரூபமான பஞ்சதசாக்ஷரீ வித்யையின் தத்துவத்தை விளக்க வந்தது. இதில் பராசக்தியே பிரும்மம். ஸ்ரீ சங்கரபகவத்பாதர்களும், ஸாதகர்கள் தங்கள் ருசிக்கேற்ப சிவன் விஷ்ணு சக்தி கணபதி ஸுப்ரமண்யன் ஸூரியன் என்று தம் தமது ருசிக்கேற்ப வழிபட ஆறு மதங்களை உருவாக்கினார்கள். அதன்படி பிரும்மத்தின் ஸகுண வடிவில் சக்தியும் ஒன்று. சாக்தர்களின் கருத்தில், சக்தியே அந்த ஆறுவடிவங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறாள். तदैक्षत என்று நபும்ஸக லிங்கத்திலும் सोऽकामयत என புல்லிங்கத்திலும் பிரும்மத்தை உபநிஷதம் முதலியவை குறிப்பிடும். அந்த ஈக்ஷா-காமம் கொண்ட பிரும்மம் தான் சக்தி. பிரும்மம் விகாரமற்றதாக நிர்விகாரமாக இருப்பதை சக்தி, தேவி, என்றவாறு சாக்தர் குறிப்பிடுவர். ईक्षित्री, ईक्षणसृष्टाण्डकोटिः என

லலிதாத்ரிசதி நாமங்களும் मूलप्रकृति: अव्यक्ता व्यक्ताव्यक्तस्वरूपिणी, उन्मेषनिमिषोत्पन्नविपन्नभुवनावलि: என்ற லலிதாஸஹஸ்ரநாமங்களும் பிரும்மம் எனும் சக்தியின் படைப்பு முதலிய பணிகளுக்கான ஈக்ஷா, காமம் என்ற ஸங்கல்ப நிலையை விளக்குகின்றன. படைப்பில் முதலிடம் பெறுவது ஒலி.

ஒலியின் உற்பத்தி பற்றிய ஒரு கண்ணோட்டம்— ஆலம் விதையின் உள் ஆலமரத்தின் முழுவடிவமும் மிக சூட்சுமமாக அமைந்துள்ளது. அதில் எந்த அணு மரத்தின் எந்தப்பகுதியாக வெளியாகவிருக்கிறது என்பதை விதை நிலையில் கண்டறிய இயலாது. அவ்வாறே பரந்த இந்த சொற்கடலாக விரிந்துள்ள சொற்களின் மூலமான எழுத்துக்களுக்கும் விதையான மூலநிலை உண்டு. தேவிதிரிபுரஸுந்தரியே ''பரா'' ''மாத்ருகா'' என்ற காரணப்பெயருடன் ஒலியின் உற்பத்தியின் மூலப்பொருளாக உள்ளாள். ஒலியின் மூலநிலையான ஸூக்ஷ்மநிலைக்கும் அவள் அப்பாற்பட்டவளானதால் ''பரா''. அந்த சக்தியே எழுத்தை அளவிட்டுத் தன்னுள் அடக்கி வைத்திருக்கிறுள். எழுத்தாகத் திகழ்கிறுள், அந்த எழுத்திற்கும் சொல்லிற்கும் அப்பாற்பட்டவளுமாகிறுள். அதனுல் சப்தசக்தியின் தாய்வடிவினள். தாய் தனது ஓரம்சத்தைத் தன்னிடமிருந்து பிரித்து வேருனதாகக் காட்டி வளர்த்து உரிய பரிணாமமடைந்ததும் வெளியிடுவதைப் போல் சப்தசக்தி ஒலி ஒளி எனப் பிரிக்க முடியாமல் தன்னுள் இருந்த அனைத்து சக்தியுமாகி, ஒவ்வொன்றையும் பிரித்து அந்தந்த சக்தியாக்கி, அதனைத் தனித்து வளர்த்துத் தாய் போல் வைகரியாக வெளியிடுவதால் அவள் மாத்ருகா.

அந்த மாத்ருகாவாக மாறவிருக்கும் பரா சக்தி மாறுபடாதவள். மாறுபாடடையாதவள். எந்தமாறு பாட்டையும் ஏற்காதவள். அவளிடம் கோடிகோடியான ஜீவராசிகள் வடிவமும் நிலையும் மற்ற

சிறப்புகளுமிழந்து, லயமாகி அடங்கியிருந்தனர். அவர்களது அதிருஷ்டம் (பாபமும் புண்யமும் காரணமாகப் பலவாறு தோன்றி மறைகிற கட்டாயம்) காரணமாக பராசக்தியிடம் படைக்குமெண்ணம் தோன்றியது. அதிருஷ்டமும் காலதேசவரை எதுவும் காணவோ கூறவோ முடியாதவாறு தொடர்கிறது. உலகம் ஆதியற்றது. அதனைத் தோன்றவும் மறையவும் செய்கிற அத்ருஷ்டஸமஷ்டியும் ஆதியும் முடிவுமற்றது.

படைக்கிற எண்ணம் உதித்ததும் பராசக்தியின் மனத்தில் படைப்பைப்பற்றிய மனத்தளவிலான திட்டம் உருவாயிற்று. படைக்கவேண்டியவை தன்னுள் வேறுபாடற்று லயமடைந்தவையே. அந்த எண்ணத்தின் விளைவான திட்டம், தான் பலவாக ஆவேன் என்ற முடிவிற்கு வந்தது. அந்த எண்ணம் 'பரா'வாக இருந்தவளை 'பச்யந்தீ'யாக முன் கூட்டிச் செயல் திட்டத்தை மனத்தளவில் கண்டுகொள்பவளாக ஆக்கியது. திட்டமாக இருந்த நிலைமாறிச் செயல் முறைக்கு வந்து வெளியே அந்த செயல் முறை தெரிந்ததும் செயல்படுபவளாகத்தானுகி உலகைச் செய்யப்படுகிற பொருளாகக் கண்டாள். அவள் செயலளவில் இறங்கிச் செயலைக்கடந்து விளைபொருளாக மாறவிருப்பதால் 'உத்தீர்ணா' ஆனுள். அதன் விளைவாகவே அவள் வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீ என்ற சக்திகள், பிரும்மா விஷ்ணு ருத்ரன் என்ற சக்திகள், இவற்றின் ஸமஷ்டியான அம்பிகாவும் ஈசுவரனும் என்ற எட்டு நிலைகளைப் பெற்ருள்.

பரா என்ற குணமும் செயலுமற்ற அதிஸூக்ஷ்மநிலையைக் கடந்து செயல் முறைபற்றிய திட்டமிடுபவளாக 'பச்யந்தீ' ஆகி, வெளிப்படுநிலைக்கு வருமுன்நிலையாக • மனத்தில் உலகைக் காணத்தொடங்கியவள், செயலுக்கு ஆயத்தமாக, காரிய காரண நிலையற்ற நிலைமாறி காரியகாரண நிலைக்கு உட்பட்டு உத்தீர்ணா வானுள். எல்லாமாக வேறுபாடற்ற

நிலைமாறி படைப்பு காப்பு லயம் என்ற செயல்பாடுகளுக்கான ஸமஷ்டியுருவான அம்பிகா-ஈசுவரனுகி, படைப்பு முதலியவற்றைத் தனித்து இயக்குகிற த்ரிமூர்த்திகளும் த்ரிசக்திகளுமானுள். இவ்வெட்டின் ஸமஷ்டி அவள் தானே. ஆக ஒன்பதும் அவளே- அவளிடமிருந்துதான் ஒன்பது நாதங்களும் தோன்றின. அந்த ஒன்பதன் ஸமஷ்டி, பரா என்ற மூலநிலைக்கும் வைகரீ என்ற ஸ்தூல நிலைக்கும் இடையே உள்ள மத்த்யமா என்ற மாத்ருகாவின் நிலை. மத்யமாநிலையில் அவிக்ருதம், சூன்யம், ஸ்பர்சம், நாதம், த்த்வனி, பிந்து, சக்தி, பீஜம், அக்ஷரம் என்ற ஒன்பது நாத நிலைகள் சூட்சுமமாய் உள்ளன. அவை முறையே மூலாதாரம் முதலிய ஆறு சக்ரங்களிலும் நாதம் நாதாந்தம் பிரும்ம ரந்திரம் என்ற ஆஜ்ஞைக்கப்பாற்பட்ட துவாத சாந்தத்திலும் தென்படுபவை. இந்த ஒன்பது நாத அவயவங்களின் ஸமஷ்டியை நாதம் த்வனி என்று கூறுவர்.

இந்த ஒன்பது நாதங்களே வைகரியாக, அவர்க்கம் கவர்க்கம் சவர்க்கம் டவர்க்கம் தவர்க்கம், பவர்க்கம், யவர்க்கம் ஶவர்க்கம் ளவர்க்கம் என ஒன்பது

| பரா | பச்யந்தி | மத்த்யமா -ஸமஷ்டி | | மத்த்யமா -வ்யஷ்டி | ஸ்தானம் வேறுபாடு வெளிப்படுமிடம் | வைகரியாக வ்யஷ்டிநிலை |
|---|---|---|---|---|---|---|
| குண-வடிவ-வேறுபாடற்றநிலை | குணவடிவ வேறுபாட்டிற்கு உட்படுகிற எண்ணமுள்ளநிலை | வேறுபாட்டிற்காக தன்னை மாற்றிக் கொண்ட நிலை. | वामा | अविकृतं | मूलाधारः | अ - अः(अ) |
| | | | ब्रह्मा | शून्यं | स्वाधिष्ठानं | क - ङ (क) |
| | | | ज्येष्ठा | स्पर्शः | मणिपूरकं | च - ञ(च) |
| | | | विष्णुः | नादः | अनाहतं | ट - ण(ट) |
| | | | रौद्री | ध्वनिः | विशुद्धिः | त - न(त) |
| | | | रुद्रः | बिन्दुः | आज्ञा | प - म(प) |
| | | | अंबिका | शक्तिः | नादः | य - ब(य) |
| | | | ईशानः | बीजं | नादान्तः | श - ह(श) |
| | | | समष्टिः | अंक्षरं | ब्रह्मरन्ध्रं | ळ - क्ष(ळ) |

எழுத்தணிகள் கொண்டதாயிற்று.

பலவாக ஆகாத பச்யந்தீ நிலையிலிருந்து பலவாக ஆகவிருக்கிற மத்த்யமா என்ற நிலை தோன்றியது. மத்தியமாவிலிருந்து பலவாக ஆன நிலையான வைகரீ தோன்றிற்று.

**வை**- நிச்சயமாக இதுதான் என்று வெளிப்படையாக உணரும்படி **க்க** செவிமடலிலுள்ள ஆகாசத்தை-செவிப்புலனை **ரீ** சென்றடைந்த சப்த சக்தி **வைகரி**யாவாள். செவி எனும் பொறியால் உணரத்தக்க விஷயமாக சப்தமாக ஆகிறாள். மற்ற விளக்கங்களை பிறிதொரு இடத்தில் பெறலாம்.

க என்ற எழுத்தில் க என்ற எழுத்தின் தனித்தன்மையும் உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதம் ஷட்ஜம் நிஷாதம் என்ற ஸ்வரதர்மங்களும் உணரப்படுகின்றன. மாறுபாடுகள் உணரப்பெறும்போது மாறுபடுகிற பொருளும் உட்பொருளாகத் தொடர்ந்து இடையறாமல் உணரப்படும். மட்குடமாகப் பார்க்கும் போது அதன் மூலப்பொருளான மண் என்பதும் கூடத் தெரியுமல்லவா ? திரிந்த (Product) பொருளில் திரியும் (material) பொருளும் கூட உணரப்பெறும். சொற்களாகக் கேட்கும் போது எழுத்து நிலையும் எழுத்தாகக் கேட்கும் போது நாத நிலையும் உணரப்பெறும்.

இங்கு விளக்கத்திற்கு எடுத்துக் கொண்ட பஞ்சதசீ மந்திரம் வைகரீ நிலையில் உணரப்பெறுகிறது. அதுவும் மூலாதாரத்தில் பராவாக மணிபூரகத்தில் பச்யந்தீயாக, அநாஹதத்தில் மத்த்யமாவாக அநாஹத ஒலியாகி தொண்டையில் வைகரியாக ஆஹத ஒலியாக மாறுபாடடைந்ததே. வைகரி நிலையிலும் எழுத்தும் ஒலியுமாக வெளிப்படுகின்றது. எழுத்துடன் உதாத்தம் - ஷட்ஜம் என்ற ஸ்வரங்களாக அந்த ஒலி தனித்தும் உணரப் பெறுகிறது.

சுலோகத்திற்குப் பொருள் காண்போம். சில நிறங்களைத் தனித்து உணரும்படி நெய்த ஆடை வர்ணம் (வர்ணகம்) எனப்படும். வர்ணகமாகத் தெரியும்போதே ஆடையாக மாறிய நூலும் கூடவே உணரப்பெறுவது போல், மாலையாக ரத்தின மணிகள் தெரியும் போதே இருமணிகளுக்கிடையில் அதனை இணைக்கின்ற நூல் அல்லது கம்பி தெரிவதுபோல், எழுத்தாக தனிச்சிறப்புள்ள எழுத்துருவம் தெரியும் போதே இடைவெளியில் (மாலையாகத் தெரியச்செய்கிற நூலும் தெரிவது போல்) மூலாதாரத்தில் எழுந்த (எழுத்தாக ஆகாத) நாதமும் புலப்படும்.

பொருளைக் காணும் போது அதனை விளக்குகிற ஒளி தனித்து உணரப்பெறுவதில்லை. ஒளியைத் தனித்தும் உணரமுடியாது. ஒளியால் விளங்குவதைக் கொண்டே ஒளி இருப்பது தெரியும். பொருளின் காட்சி நொடிக்கு நொடி விட்டுவிட்டே தெரியும். இருகாட்சிகளுக்கிடையே ஒரு வெற்றிடம் உண்டு. அந்த வெற்றிடத்தைக் காண.முற்படுபவனுக்கே காட்சியைத் தருகிற ஒளி தெரியும். அந்த ஒளியாகிய வெளி தான், காட்சிப் பொருளாகக் காட்சி தரும். இதேபோல் இரு எழுத்துக்களுக்கிடையே இரண்டிற்கும் வேறுபாட்டை உணர்த்துகிற ஒலி தொடர்கிறது. ஆக எழுத்தொலி - தனி ஒலி - எழுத்தொலி - தனி ஒலி என்று மணியும் நூலும் போல் வெவ்வேறாகத் தெரியும். அவ்யக்த ஒலியே வியக்த ஒலியாக மாறும் போது வியக்தம் என்ற வெளிப்பாட்டின் இடையே அவ்யக்த ஒலியும் உணரப்பெறும். இந்த அவ்யக்த ஒலி உணரப் பெறுவிடில் இரு எழுத்துகளுக்கிடையே உள்ள வேறுபாடு தெரியாது. வேறுபாடு தெரியாத ஒலி சொல்லாகாது.

இருமணிகளுக்கிடையே உள்ள நூல்போல், இரு எழுத்துக்களிடையே ஆதாரநாதம் தெரிகிறது என்பது ஒரு விளக்கம். தனித்த நிறமுள்ள நூலாலான ஆடையில் நிறமுள்ள ஆடை தெரிவது போல் துணியின் நிறமும்

தெரிகிறது. அந்த நிறத்திற்கு ஆதாரமான நூலும் நூலுக்கு ஆதாரமான பஞ்சும் என்ற மூலநிலையும் சேர்ந்தே உணரப்பெறுகிறது என்பது மற்ருெரு விளக்கம். பஞ்சும் நூலும் தவிர ஆடை எனத் தனித்தெதுவுமில்லை. இருமணிகளுக்கிடையே காண்கிற நூல் மணிகளைக் காட்டிலும் வேறுபட்டது. மாலை எனும் காட்சியில் நூலும் சேர்ந்ததே. நூலும் ஆடையும் மண்ணும் குடமும்போல் தோற்ற அளவிலன்றி வேறுபாடற்றதென்பதைக் காட்டும். சொல்லின் உணர்வில் எழுத்துக்களும் இடம் பெறும். குடமும் மண்ணும் போல். ஒரே சொல் என்பதில் பல எழுத்துக்கள் உண்டு. அவ்வெழுத்துக்களை இடையருது இணைத்தே சொல் வடிவமாக்குகிருேம் எனினும் ஒரு எழுத்துக்கும் மற்ருெரு எழுத்திற்கும் இடையே ஒரு வெளி உண்டு. அது எழுத்தொலியாக மாருத சுத்த ஒலி எழுமிடம். எழுத்தொலிமட்டும் செவியில் படும். இடையேயுள்ள சுத்த நாதம் உணர இயலாதது. மணிகளாகத் தெரிகிற மாலையில் அவற்றைக் கோர்த்துள்ள நூல் தெரியாததுபோல் சுத்தநாதம் தெரியாது. ஆனுல் நூல்போன்ற சுத்த நாதமின்றி மாலை போன்ற சொல் உருப்பெருது. ஆக் சொல், சொல்லின் கூட்டுப்பொருளான எழுத்து, எழுத்தின் மூலப்பொருளான நாதம், எழுத்தாக உருப்பெருத சுத்தநாதம் இந்த நான்கு நிலைகளை உணர்வதே இந்த விளக்கத்தின் குறிக்கோள். (22)

இதுவரை வர்ணங்கள் தோன்றுமிடம், அதன் உருவகம், நிறம் முதலியவை கூறப்பட்டன. இனி பிந்து முதல் உன்மனீவரை அவற்றின் இடம் உருவம் நிறம் முதலியவற்றை விளக்குகிருர்.

अथावशिष्टस्य बिन्द्वादिनवकस्य स्थितिस्थानरूपाकारानाह—

मध्येफालं बिन्दुर्दीप इवाभाति वर्तुलाकारः ॥ २२ ॥

तदुपरि गतोऽर्धचन्द्रोऽन्वर्थः कान्त्या तथाकृत्या ।

अथ रोधिनी तदूर्ध्वं त्रिकोणरूपा च चन्द्रिकाकान्तिः ।। २३

नादस्तु पद्मरागवदण्डद्वयमध्यवर्तिनीव सिरा ।
नादान्तस्तडिदाभः सव्यस्थितबिन्दुयुक्तलाङ्गलवत् ।। २४ ।।

तिर्यग्बिन्दुद्वितये वामोद्गच्छत्सिराकृतिः शक्तिः ।
बिन्दूद्गच्छत्त्र्यश्राकारधरा व्यापिका प्रोक्ता ।। २५ ।।

उर्ध्वाधोबिन्दुद्वयसंयुतरेखाकृतिः समना ।
सैवोर्ध्वबिन्दुहीनोन्मना तदूर्ध्वं महाबिन्दुः ।। २६ ।।

शक्त्यादीनां तु वपुर्द्वादशरविकान्तिपुञ्जाभम् ।

*பிந்து முதலிய 9 நாதங்களுக்கும் அமைப்பையும் அடையாளத்தையும் விளக்குகிறார்.*

நெற்றியின் நடுவே வட்டவடிவான **பிந்து** தீபஒளி போன்று வட்டமாகக் காணப்படுகிறது. அதன் மேல் ஒளியாலும் உருவமைப்பாலும் பிறைச்சந்திரன் போல் உள்ளது **அர்த்த சந்திரன்**. அதன்மேல் **ரோதினி** - முக்கோண வடிவமுள்ளது. அதன் ஒளி நிலவு போன்றது. இருபுறமும் அண்டகோசமும் நடுவில் நரம்பு போன்ற அமைப்பும் கொண்டது. பத்மராகமணி நிறம் கொண்டது. **நாதாந்தம்** ஏர்க்கால் போன்று நடுவே தண்டும் இடதுபுறம் பிந்துவும் கூடியது. மின்னல் போன்ற ஒளி கொண்டது. அதன்மேல் **சக்தி**யானது கீழே படுக்கையாக இரு பிந்துக்கள். அவற்றின் இடது புறத்திலுள்ள பிந்துமேல் ஒரு குழல் போன்று தண்டு. அதன்மேல் **வியாபிகா**- கீழே பிந்து. அதன்மேல் ஒரு திரிகோணம். திரிகோணத்தின் ஒரு கூர்முனை பிந்துவின்மேல். அதன்மேல் **ஸமநா**, மேலும் கீழுமாக இருபிந்துக்கள் நடுவே இணைக்கிற ஒரு கோடு போன்ற அமைப்பு. அதன் மேல் **உந்மநா**. கீழே ஒருபிந்து. அதன்மேல் மேல் நோக்கிய ஒரு கோடு. (ஸமநாவின் அமைப்பில் மேல் பிந்து இல்லை.) அதன்மேல்

மஹாபிந்து என்ற பிந்துமட்டும். சக்திமுதல் ஸமநா வரை *12 சூரியர்களுக்கு ஒப்ப ஒளி கொண்டவை.*

| | |
|---|---|
| 1. பிந்து: | 6. சக்தி: |
| 2. அர்த்தசந்திரன்: | 7. வியாபிகா: |
| 3. ரோதிநீ: | 8. ஸமநா: |
| 4. நாதம்: | 9. உந்மநீ: |
| 5. நாதாந்தம்: | 10. மஹாபிந்து: |

मध्येफालं फालस्य मध्ये। 'पारे मध्ये षष्ठ चा वा' इति समासः। कान्त्या, आकृत्या चान्वर्थः; अर्धचन्द्रवत्कान्तिराकारश्चेत्यर्थः। अण्ड स्थानीयौ द्वौ बिन्दू सिरास्थानीया मध्यरेखा चेति त्रयं संहत्य नादस्याकारः, 'बिन्दुद्वयान्तरे दण्डः शेवरूपो मणिप्रभः' इति चक्रसंकेतोक्तेः। शेवो मुष्कद्वयमध्यर्तिनी नाडी, मणिः पद्मराग इति तु सांप्रदायिकी व्याख्या। दण्ड स्य शेवरूपत्वविशेषणं घनतादार्ढ्य-योर्निरासाय, केशतुल्यपिष्ट विकारेषु पायसोपयुक्तेषु शेवपद-प्रयोगादित्यपि व्याख्या नातीव विरुद्धा। ऊर्ध्वाग्रं दक्षिणारं लाङ्गलम्, वामभागे बिन्दुरेक इति नादान्ताकारः। विसर्जनीयवदूर्ध्वाधो बिन्दुद्वयमिति भ्रमनिरासायाह— तिर्यगिति। वामाद्वामभागस्थ-बिन्दुमारभ्योर्ध्वं गच्छ न्ती निःसरन्ती या सिरा रेखा तदाकारेत्यर्थः। 'शक्तिर्वामस्थबिन्दूद्यत्सिराकारा' इति चक्रसंकेते।

आर्षत्वात् समस्तस्यापि बिन्दुपदस्य पूर्वपदेन सह बहुव्रीह्यवयवत्वेन, उत्तरपदेन सह पञ्चमीतत्पुरुषावयवत्वेनापि काकाक्षिन्यायेनान्वय इति सांप्रदायिकैर्व्याख्यानात्। उद्यत्पदस्य सामान्यवाचकस्यापि बिन्दूद्यदिति विशेषे लक्षणायां वामस्था-द्बिन्दोरुद्यत्याः सिराया आकारो यस्या इत्येव विगृह्य बिन्दोर्वामस्थत्वविशेषणबलादेव दक्षिणदिग्भागे निःसिराक

एको बिन्दुरस्तीति गम्यत इति व्याख्यायां वा न कोऽपि क्लेशः ।

बिन्दुसंस्पृष्टाग्रकत्रिकोणाकारा व्यापिका । 'बिन्दुद्वयान्तरालस्थऋजुरेखामयी पुनः । समना' इति वचने शक्तिवद्बिन्दुद्वयं तिर्यग्रूपं मा भूदित्यतः संप्रदायमनुसरन्नाह— ऊर्ध्वाध इति । संयुता अग्रमूलभागयोः संश्लिष्टा, न त्वस्पृशन्ती स्थिता । इयं च ब्रह्मरन्ध्रसंस्थाना । इयमेव च मनोन्मनीत्यपि व्यवह्रियते । मनसो यथावस्थितरूपस्यैवाभ्यासविशेषेण एतावत्पर्यन्तवृत्त्युद्गमः सुसाध इत्यतः समनेत्युच्यते । एतदुपरि तु रूपान्तरं प्राप्तस्यैव मनसो धृतिविषयतेत्यतः उत्क्रान्तमनस्कत्वादुन्मना । प्रकृतानुपयुक्तमप्युन्मनोपरिस्थानं चक्रराजस्य त्रिविधभावनान्तर्गतनिष्कलभावनायामुपयुक्तत्वेन प्रसङ्गादाह— तदूर्ध्वं महाबिन्दुरिति ॥ शक्त्यादीनामिति । समनान्तानां तिसृणामिति संप्रदायः । शक्त्यादीनां तिसृणां द्वादशरवितुल्यकान्तयस्तनवः' इति पाठो युक्तः। बिन्द्वादिस्वरूपाङ्गविस्तरः स्वच्छन्दसंग्रहे द्रष्टव्यः ॥ (२२—२६)

*நாத அமைப்பு ஆணின் அண்டகோசம் போன்று இருபுறமும் இருபிந்துக்கள் ஒட்டி நிற்க நடுவில் சேபம் (ஆண்குறி) போன்றோ, சேவம் (சேவை என்ற உணவுப்பொருளின் மூலப்பொருளான சேமியா), போல் நீண்டோ நிற்கும். விஸர்கம் போல் மேலும் கீழும் பிந்து என்றிராமல் படுக்கை வசத்தில் ஒன்றின் பக்கத்தில் மற்ருென்ருக இருபிந்துக்களில் இடது பிந்து மேல் குமாய் செறுகியது போன்று அமைப்புள்ளது நாதாந்தம். ஸமநாவை மநோன்மனீ என்றும் கூறுவர். மனத்தைப்பயிற்சிமுறைச்சிறப்பால் இந்நிலை வரை கொண்டுவந்து அதன் போக்கைக் கட்டுப்படுத்துவதால் ஸமநா. மனத்தை உந்மனாநிலைக்கு உயர்த்த உதவுகிற நிலையாதலால் மனோன்மனி. இதுவரைதான் மனத்தைக் கட்டுப்படுத்தி அழைத்து வரலாம். இதன் மேலுள்ள உன்மநா - மனத்தைக் கடந்த நிலை. மனத்தின் இயற்கை*

*நிலையான சபலத் தன்மை நீங்கி உறுதியுடன் இறுகிய நிலை.*

*உந்மநா நிலை வரை நாத நிலைகள். 'பஞ்சதசியின் அக்ஷரங்கள், அவற்றின் கூறுகள், இடம், நிறம், வடிவம் என்று விளக்குகிற இந்தப் பிரகரணத்தில் உந்மநா வரை தான் விளக்க வேண்டியுள்ளது. ஆனாலும் உந்மநாவிற்கு மேலும் மற்றொரு நிலை உண்டு. அது மஹாபிந்துவாகும். அதைப்பற்றிய விளக்கம் இந்த பிரகரணத்தில் தேவையில்லாததெனினும் பின்னர் அது பயன்படும். ஸகலம், நிஷ்கலம், ஸகல நிஷ்கலம் என ஸ்ரீசக்ரபாவனை மூன்று விதமாகச் செய்யும் போது, (ச்லோ52) மஹாபிந்துபாவனை அவசியம். அதனால் அதனை இங்கு விளக்குகிறார்- ஸ்வச்சந்த ஸங்கிரகம் என்ற நூலில் பிந்து முதலியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன. (22-27)*

अथ वर्णानामुच्चारणप्रकारमाह—

इत्येवं वर्णानां स्थानं ज्ञात्वोच्चरेद्यत्नात् ॥ २७ ॥

नादः प्राथमिकस्तु द्वितीयकूटेन साकमुच्चार्यः ।
द्वैतीयीकं नादं तार्तीयेनोच्चरेन्न पृथक् ॥ २८ ॥

बिन्द्वादिनवकयोस्तु प्राक्तनकूटस्थयोरनयोः ।
संमेलनेन शबलं तार्तीयीकं विभावयेत् कूटम् ॥ २९ ॥

बिन्द्वादिकसमनान्तं क्रमेण तार्तीयमुच्चरेन्नादम् ।
उन्मन्यन्तर्लीनं विभावयेदेतदुच्चरणम् ॥ ३० ॥

स्थानं कण्ठाद्युत्पत्तिस्थानं मूलाधारादि स्थितिस्थानं च । यत्नादान्तरबाह्ययत्नपूर्वकम् । इदं च मानसजपातिरिक्तविषयम् । तत्र तत्तत्स्थानयत्नविभावनमात्रस्योपयोग इति द्रष्टव्यम् । नादो बिन्द्वादिनवकम् । पूर्वपूर्वकूटस्थनादस्योत्तरोतरकूटोच्चारणेनैवो-च्चरितप्रायत्वात्, न तत्र पार्थक्येन यत्नः कालविलम्बो वा कार्य

इत्यर्थः । तृतीयकूटे तु, उत्तरकूटाभावात्तदुभयमपेक्षितमित्याह—बिन्द्वादिकेति ॥ २७—३०॥

பஞ்சதசியின் எழுத்துக்களை அவற்றின்-உற்பத்தி இடம் அமைப்பு மற்றும் நிறத்தை நன்கு உணர்ந்து உச்சரிக்க வேண்டும். வாசிகமாக ஜபம் செய்யும் போது மந்திராக்ஷரங்கள் வெளிப்படுமிடமான தொண்டை முதலியவை, மூலாதாரம் முதலியஸ்தானங்கள் பிரயத்னங்கள் (பார்க்க ச்லோ-19) முதலியவற்றை உணர்ந்து ஒவ்வொரு அக்ஷரத்தையும் உச்சரிக்கவேண்டும். மானஸஜபத்தில் அவை பாவனையாக அமைந்துவிடும்.

முதற் கூடத்தின் முடிவில் வருகிற ह्रीं என்பதன் பிந்து முதல் உன்மனீ வரை உள்ள நாதத்தை இரண்டாவது கூடத்தின் முதலெழுத்தான 'ஹ'வுடன் செருகியும் இரண்டாவது கூடத்தின் இறுதியிலுள்ள நாதத்தை மூன்றுவது கூடத்தின் முதல் எழுத்தான 'ஸ'வுடன் செருகியும் உச்சரிக்க வேண்டும். நாதத்திற்கும் அடுத்த கூடத்தின் முதல் எழுத்திற்கும் இடையே இடைவெளி தருவதும் ஒவ்வொரு கூடத்தையும் தனித்து உச்சரிப்பதும் கூடாது. மூன்றுவது கூடத்தின் இறுதியில் உள்ள நாதத்தில் முன்னிரு கூடங்களின் நாதாவயவங்களான அர்த்தசந்திரன் முதல் ஸமநாவரை வரிசையாகச் சேர்த்து உச்சரித்துத் தனித்தனியே பாவனையுடன் அம்மூன்றின் நாதாவயவங்களும் உந்மனியில் அடங்கிவிட்டதான பாவனையுடன் உச்சரிக்கவேண்டும். மறுபடி மூன்றுவதன் நாதத்தை முதல் கூடத்துடன் இணைக்காமல் முதல் கூடத்தைத் தனித்தே உச்சரிக்கவேண்டும்.

மந்திர உச்சரிப்பில் இம்முறை பின்பற்றுவது அவசியம். மூன்றுவது கூடத்தின் இறுதியில் பிந்து நாதத்தின் கார்வை நீட்சி நன்கு உணரப்பட்டால் தான் பூர்ணமான உச்சரிப்பு நேரும். (27-30)

पूर्वं विद्यास्वरूपस्य काल उक्तः, इदानीमुच्चारणकालं निष्कृष्याह—

आद्ये दश मध्ये ताः सार्धास्तार्तीयकूटेऽष्टौ ।
एकलवोना ऊनत्रिंशन्मात्रा मनोर्जपे कालः ॥ ३१ ॥

आद्ये कूटे दश मात्राः । मध्ये कामराजकूटे ताः दश सार्धाः मात्राः । तार्तीयकूटेऽष्टाविति । अस्य पूर्वपरवर्ति पदद्वयं काकाक्षिन्यायेन द्विर्द्विरन्वयितव्यम् । तेनैकलवोनाः सार्धाः अष्टौ मात्रास्तृतीयकूटे यथापूर्वमवस्थिताः इत्यर्थः । संहत्य त्वाह— एकलवोनाः इति । ऊनत्रिंशदेकोनत्रिंशत् । जपे वाचिके । न तु मानसे पूर्वोक्तकालादयः । प्रथमद्वितीयकूटस्थास्तु यत्र न्यासादौ संध्याङ्गभूतैकैककूटमात्रजपे च प्रातिस्विकमुच्चारणेन कूटानां विनियोगविधिस्तत्रैव सार्थका इति विज्ञेयम् ॥ ३१ ॥

ஒவ்வொரு எழுத்தையும் குரு லகு எனப்பிரித்து மாத்திரை என்ற உச்சரிப்புக்கான காலவரை முன்பு (15-18ச்லோ) விளக்கப்பட்டது. அதனையொட்டி மந்திர ஜபகாலவரையை அறுதியிட்டு விளக்குகிறுர்.

முதற் கூடத்தின் ஜபகாலவரை 10 மாத்திரைகள். மத்திய கூடம் $10\,^1/2$மாத்திரைகளிலும் மூன்றுவது கூடம் $8\frac{1}{2}$ மாத்திரைகளிலும் உச்சரிக்கப்படும். ஒரு லவநேரம் குறையும். முழுமந்திரத்திற்கும் ஒரு லவம் குறைந்த 29மாத்திரைகள் வாசிக ஜபத்திற்குத் தேவை. மானஸஜபத்தில் காலவரை கிடையாது. தனித்து ஒவ்வொரு கூடத்தையும் உச்சரிப்பது மந்திரத்தின் அங்க நியாஸ - கரநியாஸங்களிலும் ஸ்ரீவித்யாங்கமான ஸந்தியாவந்தனத்திலும் மற்றும் சாஸ்திரீயமான உபயோகமுறைகளிலும் காணத் தக்கது. மந்திரஜபத்தில் தனித்தனிக்கூடத்தின் காலவரை இவ்வாறு மாறும்.

முன்பு 11, $11\,^1/2$, $8\,^1/2$ என தனித்தனியே கூடங்களின் மாத்திரைகள் கூறப்பட்டன. (ச்லோ 17-18) இங்கு 10, $10\,^1/2$- $8\,^1/2$ என அது மாற்றிக் கூறப்படுகிறது. மந்திரமாக (தனித்துக் கூடம் கூடமாகப் பிரிக்காமல்) உச்சரிக்கும்

போது 29மாத்திரைகளிலும், தனித்தனியே நியாஸம் முதலியவற்றில் உச்சரிக்கும் போது 31 மாத்திரைகளிலும் உச்சரிக்கப்பெறுகிறது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். தனித்தனிக் கூடமாக இருக்கும் போது 3லவம் குறைந்த 31 மாத்திரையும் மொத்தமாக ஜபிக்கையில் ஒருலவம் குறைந்த 29மாத்திரையும் என இடையே 2லவங்கள் குறைந்த 2மாத்திரை வித்தியாசப்படுகிறது. (31)

அதனுல் மூன்று கூடங்களையும் தனித்தனியாக உச்சரிக்கிற வியஷ்டி நிலை 3, மூன்றையும் ஸமஷ்டியாக உச்சரிக்கிற நிலை 1, என நான்கிலும் உள்ள உருவக வேறுபாட்டை விளக்குகிறுர்.

अथ कूटानां व्यष्टिसमष्टिभेदेन चतुर्धा भिन्नानां स्वरूपविशेषानाह—

व्यष्टि-समष्टि-विभेदादस्यां चत्वारि बीजानि ।
सृष्टि-स्थिति-संहारानाख्यारूपाणि भावनीयानि ॥ ३२ ॥

पुट-धाम-तत्त्व-पीठान्वय-लिङ्गक-मातृ-तत्समष्टीनाम् ।
रूपान्तराणि बीजान्यमूनि चत्वारि चिन्तनीयानि ॥ ३३ ॥

अनाख्या तिरोधानानुग्रहयोः समष्टिः, कृत्यपञ्चकेष्वपि औदासीन्यावलम्बनरूपावस्थानविशेषो वा । पुटादिषट्कं धामसप्तकं च त्रित्रिरूपं पृथक्पृथक्, तत्समष्टिरेकैकेत्येवं चत्वारि चत्वारि । यथा— पुटानि ज्ञातृज्ञानज्ञेयानि तत्सामरस्यं च । धामानि चक्र-नाथ-दशा-शक्तित्रयात्मरूपाणि सप्त । तत्र चक्राण्यग्निचक्रसूर्यचक्र-सोमचक्राणि ब्रह्मचक्रं च । नाथा मित्रेशनाथषष्ठीशनाथोड्डीश-नाथाश्चर्यानन्दनाथः च । दशाः जाग्रत्स्वप्नसुषुप्तयस्तुरीया च । शक्तयः— वामाज्येष्ठा-रौद्र्यः शान्ता च; इच्छाज्ञानक्रियाः अम्बिका च; कामेश्वरी-वज्रेश्वरीभगमालिन्यो महात्रिपुरसुन्दरी च । आत्मानः आत्मान्तरात्मपरमात्मानो ज्ञानात्मा च ।

तत्त्वान्यात्मतत्त्वविद्यातत्त्व-शिवतत्त्वानि सर्वतत्त्वं च । पीठानि कामरूपपूर्णगिरि-जालंधराण्योड्याणपीठं च । अन्वयाः प्राग्दक्षिण-पश्चिमान्वया उत्तरान्वयश्च । एत एव समयपदेनाम्नायपदेन च कथ्यन्ते । लिङ्गानि स्वयंभूबाणेतराणि परं च । मातृकाः पश्यन्ती-मध्यमावैखर्यः परा च । धामपदार्थत्वेनोक्तं शक्तित्रयं मातृपदस्य वार्थः ॥ ३२, ३३ ॥

*இந்த நான்கு நிலைகளில் முறையே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், அநாக்க்யா என்ற நான்கு பீஜங்கள் பாவனை செய்யப்படுகின்றன. இந்த நான்கு பீஜங்களும் புடம், த்தாம, தத்வம், பீடம், அன்வயம், லிங்கம், மாத்ருக்கள், இவற்றின் ஸமஷ்டி என்ற எட்டின் மாற்றுருவங்கள் என பாவனை செய்யப்பெற வேண்டும். (வியஷ்டி தனித்தனிப்பொருள் - தனி மரம் போல். ஸமஷ்டி - தொகை, காடுபோல்) தனித் தனியே ஒவ்வொரு கூடமும் வியஷ்டி. மூன்று கூடங்களும் சேர்ந்து ஸமஷ்டி. புடம் முதலியவை தனித்தனியே மூன்று கூடத்தின் பொருள். இவ்வற்றின் ஸமஷ்டி பஞ்சதசியின் பொருள்)*

*ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் திரோதானம் அனுக்கிரஹம் என 5 கிருத்யங்கள். முதல் மூன்றும் நடைமுறையில் உணரப்பெறுவது. திரோதானமும் அனுக்கிரஹமும் அறிவிற்கு அப்பாற்பட்ட தத்துவங்கள். அதனால் அவ்விரண்டையும் ''அநாக்க்யா'' என்பர் சிலர். இவ்வைந்திலும் பரம் பொருளுக்குத் தனித்த ஆர்வமில்லாத ஒதுங்கிய-பற்றற்ற- உதாஸீன நிலை உண்டு. அதனையே அநாக்க்யா என்பர் சிலர்.*

*புடம் தத்துவம் பீடம் அன்வயம் லிங்கம் மாத்ருகா என்ற ஆறும் மூன்று பிரிவுகள் உள்ளவை. தாம என்பது ஏழு பிரிவுகள் உள்ளது. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கூடத்திற்கும் ஒவ்வொன்றாக வியஷ்டி நிலையில் மூன்று,*

ஸமஷ்டி நிலையில் ஒன்று என நான்காகப் பிரிக்கப்படுகிறது.

(1) புடம்- அறிபவன், அறியப்படுவது, அறிவு என்ற மூன்றும் வியஷ்டி புடங்கள். இம்மூன்றும் அமைந்தால் தான் அறிகிறேன் என்ற உணர்வு வரும். அறிகிறேன் என்ற உணர்வு த்ரிபுடீ ஜ்ஞானம். இது ஸமஷ்டி புடம்.

(2) தாம- இது ஏழு வகைப்படும். சக்ரங்கள், நாதங்கள், தசைகள், வாமா முதலிய சக்திகள், இச்சா முதலிய சக்திகள், காமேச்வரீ முதலிய சக்திகள், ஆத்மாக்கள், என.

சக்ரங்கள்- அக்னி சக்ரம், ஸூர்ய சக்ரம், ஸோமசக்ரம் என வ்யஷ்டியில். ப்ரம்ஹ சக்ரம் ஸமஷ்டியில்.

நாதர்கள்- மித்ரேசநாதர், ஷஷ்டீசநாதர், உட்டீசநாதர் என வ்யஷ்டியில், சர்யா நாதர் ஸமஷ்டியில்.

தசைகள்- ஜாக்ரத் (விழிப்பு) ஸ்வப்நம் (கனவு) ஸுஷுப்தி (ஆழ்ந்ததூக்கம்) என வ்யஷ்டியில். துரீயா என ஸமஷ்டியில்.

வாமாதிசக்திகள்- வாமா, ஜ்யேஷ்ட்டா, ரௌத்ரீ என வ்யஷ்டியில். சாந்தா ஸமஷ்டியில்.

இச்சாதிசக்திகள்- இச்சா சக்தி, ஜ்ஞானசக்தி, கிரியா சக்தி என வ்யஷ்டியில், அம்பிகா என ஸமஷ்டியில்.

காமேச்வர்யாதி சக்திகள்- காமேச்வரீ, வஜ்ரேச்வரீ, பகமாலினீ என வ்யஷ்டியில். மஹாத்ரிபுர ஸுந்தரீ ஸமஷ்டியில்.

ஆத்மா- ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா என வ்யஷ்டியில், ஜ்ஞாநாத்மா என ஸமஷ்டியில்.

3. தத்வம்- ஆத்ம தத்வம், வித்யாதத்வம், சிவதத்வம் என வ்யஷ்டியில், ஸர்வதத்வம் ஸமஷ்டியில்.

4. **பீடங்கள்**- *காமரூபம் பூர்ணகிரி ஜாலந்தரம் என வ்யஷ்டியில், ஓட்யாணபீடம் என ஸமஷ்டியில்.*

5. **அன்வயம்** - *பூர்வாம்நாயம், தக்ஷிணாம்நாயம், பச்சிமாம்நாயம் என வ்யஷ்டியில். உத்தராம்நாயம் ஸமஷ்டியில் (அன்வயம் - ஸம்பிரதாயம் - வழிவழியாக காது வழிகேட்டுத் தொடர்வது - ஸமயம் ஆம்நாயம் என்றும் கூறுவர்.)*

6. **லிங்கம்**- *ஸ்வயம்பூ, பாணம், மற்றவை, என வ்யஷ்டியில். எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது பரம் - ஸமஷ்டியில்.*

7. **மாத்ரு** - *(***மாத்ருகா***) பச்யந்தீ மத்த்யமா வைகரீ என வ்யஷ்டியில், பரா ஸமஷ்டியில்.*

*வாமாதி - இச்சாதி - காமேச்வர்யாதி சக்திகளும் 'மாத்ரு' என்பதன் பொருள் என்பதுமுண்டு.*

*வியஷ்டியிலுள்ளவை வரிசையாக வாக்பவம், காமம், சக்தி என்ற மூன்று கூடங்களின் தனிப்பொருள். ஸமஷ்டியாயிருப்பவை பஞ்சதசீ என்ற ஸமஷ்டியின் பொருள். (32-33)*

*ஒவ்வொரு கூடத்தின் தன்னிலையையும் ஸமஷ்டியின் தன்னிலையையும் விளக்கினார். இனி மந்திரத்தின் 15 எழுத்துக்களில் ஒவ்வொன்றின் நிலையை விளக்குகிறார்.*

अथ प्रत्यक्षरं स्वरूपमाह—

एकैकस्मिन् कर्मणि सृष्ट्यादिविभेदतस्त्रिविधे।
ब्रह्माद्या अधिपतयो भारत्यादिस्वशक्तिभिः सहिताः ॥३४॥
ब्रह्मादयस्त्रयोऽमी भारत्याद्याश्च शक्तयस्तिस्रः।
प्रत्यक्षरस्वरूपाः शाक्तार्थे वक्ष्यमाणया रीत्या ॥ ३५ ॥

सृष्टिकर्म त्रिविधं सृष्टिसृष्टिः सृष्टिस्थितिः सृष्टिसंहृतिश्चेति। एवं स्थितिकर्म, स्थितिसृष्टिः स्थितिस्थितिः स्थितिसंहृतिश्चेति । एवं

संहृतिकर्मापि संहृतिसृष्टिः संहृतिस्थितिः संहृतिसंहृतिश्चेति । अत्र प्रतित्रिकं ब्रह्मादयस्त्रयो ब्रह्मविष्णुरुद्रा भारतीपृथिवीरुद्राणीसहिता अधिपतयः । एवं च प्रथमकूटे—ककारो ब्रह्मण एव रूपान्तरम्, त्रिकोणा तु भारतीस्वरूपा, तुर्यः स्वरो विष्णुस्वरूपः, लकारः पृथिवीस्वरूपः, हकारो रुद्रस्वरूपः, रेफो रुद्राणीस्वरूपः, तुर्यः स्वरस्तु शान्ताम्बिकात्मकमिथुन स्वरूपः । द्वितीयकूटे मध्यमहकारं परित्यज्य अवशिष्टाक्षरेष्वेषैव रीतिः । तृतीयकूटे तु द्वितीयकूटस्थ-परित्यक्तहकारस्य ब्रह्मस्वरूपत्वाद्भारतीमारभ्यैव सकारेणारम्भः । शक्तिकूटत्वेन शक्तेः प्राधान्येन प्रथमं निर्देशः । तदेतदाह—शाक्तार्थे वक्ष्यमाणयेति ॥ ३४, ३५ ॥

ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று பணிகள் ஒவ்வொன்றும் மேலும் மூன்றுவகையாகப் பிரிக்கப் படுகின்றன. ஸ்ருஷ்டிஸ்ருஷ்டி, ஸ்ருஷ்டி ஸ்த்திதி, ஸ்ருஷ்டிஸம்ஹாரம் என ஸ்ருஷ்டி மூன்று விதம். ஸ்த்திதி ஸ்ருஷ்டி, ஸ்த்திதிஸ்த்திதி, ஸ்த்திதிஸம்ஹாரம் என ஸ்த்திதி மூன்றுவிதம். ஸம்ஹாரஸ்ருஷ்டி, ஸம்ஹாரஸ்த்திதி, ஸம்ஹார ஸம்ஹாரம் என ஸம்ஹாரம் மூன்று விதம். ஸ்ருஷ்டிக்கு பாரதீ சக்தியுடன் கூடிய பிரம்ஹாவும், ஸ்த்திதிக்குப்பிருதிவீ என்ற சக்தியுடன் கூடிய விஷ்ணுவும் ஸம்ஹாரத்திற்கு ருத்ராணீ சக்தியுடன் கூடிய ருத்ரரும் அதிபர்கள்.

முதல் கூடத்தில் க-பிரும்மா ஏ-பாரதீ, ஈ-விஷ்ணு, ல-ப்ருதிவீ, ஹ்-ருத்ரர், ர்-ருத்ராணீ, ஈ-சாந்தா-அம்பிகா என்ற இருவர்.

இரண்டாவது கூடத்தில் ஹ இருமுறை வருகிறது. அதன் இரண்டாவது ஹவை நீக்கி மற்றவை பிரும்மா, பாரதீ, விஷ்ணு, ப்ருதிவீ, ருத்ரர், ருத்ராணீ, சாந்தா-அம்பிகா என்ற ஸமஷ்டிவடிவம்.

*மூன்றுவது கூடத்தில் இரண்டாவதில் நீக்கிய ஹ-பிரம்ஹா, மற்றவை வரிசையாக முன்போல். மூன்றுவது சக்தி கூடமானதால் ஸ-பாரதீ என்ற சக்தியுடன் தொடக்கம். (34-35)*

*மூன்று கூடங்களின் இறுதியிலுள்ள ஹ்ரீம்ல் ஹ்ர்ா என்ற மூன்றிற்கும் உருவகம் காட்டினுர். இனி மேலுள்ள பிந்து முதலியவற்றை விளக்குகிருர்.*

अथावशिष्टानां बिन्द्वादीनां स्वरूपमाह—

हृल्लेखाकामकलासपरार्धकलाख्यकुण्डलिन्युत्थाः ।
नादाश्चक्रत्रितयत्रितयात्मानो विभावनीयाः स्युः ॥ ३६ ॥

अत्र प्रथमकूटे या हृल्लेखा, तदन्तर्गता या कामकला, तस्यां गुरुमुखैकवेद्या या सपरार्धकला, सा वह्निकुण्डलिनीत्युच्यते । सैव द्वितीयकूटे सूर्यकुण्डलिनीति, तृतीयकूटे सोमकुण्डलिनीति च कथ्यते । बिन्द्वादिसमष्टिरूपो नादस्तु तत एवोत्पन्नो दीपशिखाग्रवर्तिकज्जललेखावत् । एवं चानाहतमारभ्योत्थितो नादः, त्रैलोक्यमोहन-सर्वाशापरिपूरक-सर्वसंक्षोभणचक्रत्रयस्य त्रिविधसृष्टिरूपस्यापरं रूपम्; भ्रूमध्यमारभ्योत्थितो नादः, सर्वसौभाग्यदायक-सर्वार्थसाधक-सर्वरक्षाकरचक्रत्रयस्य त्रिविधस्थितिरूपस्यापरं रूपम्; बिन्दुस्थानमारभ्योत्थितो नादः सर्वरोगहर-सर्वसिद्धिप्रद-सर्वानन्दमयचक्रत्रयस्य संहृतित्रयरूपस्यापरं रूपमिति विभावनीयाः ॥ ३६ ॥

*ஹ்ருல்லேகா காமகலா ஸபரார்த்தகலா என குண்டலினீயிலிருந்து எழுகின்ற நாதங்கள் மூவகைப்படும். அவை ஸ்ரீசக்ரத்தின் ஒன்பது சக்ரங்களின் மும்மூன்றுக்கும் ஒன்வொன்ருக பாவனை செய்யப்படுகின்றன.*

முதல் கூடத்திலுள்ள ஹ்ரீம் என்ற ஹ்ருல்லேகாவில் காமகலா உள்ளடங்கியுள்ளது. அதனுள் ஸபரார்த்தகலா அடங்கியுள்ளது. அந்தகலைக்கு வந்ஹி குண்டலினீ எனப் பெயர். இரண்டாவது கூடத்தில் அந்த ஸபரார்த்தகலா ஸௌர்யகுண்டலினீ ஆகிறது. மூன்றுவது கூடத்தில் ஸோமகுண்டலினீயாகிறது.

ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரம் ஹ்ருல்லேகா எனப்படும். அதிலுள்ள ई காமகலையாகும். அதிலுள்ள ஒன்பது அவயவங்கள் உள்ள பிந்து ஸபரார்த்தகலை எனப்படும். அந்த பிந்து தீபஜ்வாலையிலிருந்து எழுகிற புகைக்கோடு போன்றது. புகை சிறிது சிறிதாகச் சிறுத்து மறைவதுபோல் பிந்துவில் எழுந்த ஒலி உன்மநா என்ற பூஜ்ய (0) நிலைக்கு வருகிறது.

ஸபரார்த்தகலா என்பது பிந்து. இது ஒரு ஸங்கேதச்சொல் ஸ பர- 'ஸ'விற்கு அடுத்த எழுத்தான 'ஹ'. அது விஸர்க்கவடிவில் இரு பிந்து வடிவில் ':' என உருப்பெறுகிறது. அதன் பாதி ஸபரார்த்தகலா, ஒரு பிந்து வடிவம். இதை குருமுகமாக உணரவேண்டியதெனச் சொல்கிறுர்.

எனவே அநாஹதம் தொடங்கி எழுத்து மத்த்யமா நிலையிலிருந்து வைகரீநிலைக்கு வருகிறது. த்ரைலோக்ய மோஹனம், ஸர்வாசாபரிபூரகம், ஸர்வஸம்க்ஷோபணம் என்ற மூன்று ஸ்ருஷ்டி சக்ரங்கள், அநாஹதம் தொடங்கி எழுந்த நாதத்தை உருவகப்படுத்துகின்றன. ஆஜ்ஞா தொடங்கி எழுகிற நாதத்தை 'ஸர்வஸௌபாக்ய தாயகம், ஸர்வார்த்தஸாதகம், ஸர்வரக்ஷாகரம் என்ற மூன்று ஸ்த்திதி சக்ரங்கள் உருவகப்படுத்துகின்றன. பிந்து ஸ்தானம் தொடங்கி எழுந்த நாதத்தை, ஸர்வரோகஹரம் ஸர்வஸித்திப்ரதம் ஸர்வாநந்தமயம் என்ற மூன்று ஸம்ஹார சக்ரங்கள் உருவகப்படுத்துகின்றன.

இவ்வாறு நாதஸ்தானத்தையும் ஸ்ரீசக்ரத்தின் ஒன்பது ஆவரண சக்ரங்களையும் இணைத்து உருவகப்படுத்தி

*மந்திரஜபத்தில் பாவனை செய்யவேண்டும். (36)*

*இனி ஐந்து அவஸ்தைகள், ஆறு சூன்யங்கள், ஏழு விஷுவத்துகள் இவற்றையும் இணைத்து ஜபகாலத்தில் பாவனை செய்ய வழிகாட்டுகிறுர். (16 சுலோகங்களில்).*

अथावस्थापञ्चकं शून्यषट्कं विषुवत्सप्तकं च जपकाले विभाव्यमाह—इन्द्रियदशकेत्यादिना, एवमवस्थेत्यन्तेन श्लोकषोडशकेन।

**इन्द्रियदशकव्यवहृतिरूपा या जागरावस्था।**
**तत्र प्रकाशरूपो हेतुर्भाव्यस्तृतीयगे रेफे॥ ३७॥**

कर्मेन्द्रियाणि पञ्च वाक्पाणिपादपायूपस्थानि; ज्ञानेन्द्रियाण्यपि पञ्च घ्राणरसनचक्षुस्त्वक्श्रोत्राणि; एतेषां दशानां स्वस्वविषयोत्पादकत्वं व्यवहारः; स एव जागरावस्था। तत्र हेतुरूपं ज्ञानं अरूपत्वाद्भावनादशायां प्रकाशरूपत्वेन तृतीयकूटस्थरेफस्थाने विभावनीयम्॥ ३७॥

*கர்மேந்திரியங்கள் 5, ஜ்ஞானேந்திரியங்கள் 5 என பொறிகள் 10. இவற்ருல் தன்னைச் சூழ்ந்துள்ள உலகை உணர்வது விழிப்பு நிலை (ஜாகராவஸ்த்தா). இதற்குக்காரணம் 'நான் அறிகிறேன்' என்கிற உள்ளொளி. (ஆத்மபிரகாசம்). இது மூன்ருவது கூடத்திலுள்ள ரவால் உணரத்தக்கது.*

*வாக்கு, கை, கால், குதம், உபஸ்தம் என ஐந்து கர்மேந்திரியங்கள். மூக்கு, நாக்கு, கண், தோல், காது என ஐந்து ஜ்ஞானேந்திரியங்கள். இந்த பத்து பொறிகளின் மூலம் மணம் முதலியவற்றை அனுபவத்திற்கு கொணரமுடிகிற இயக்கம் ஜாகரம் எனும் விழிப்பு நிலையாகும்.*

இதனை இயக்கிவைக்கிற அறிவு பொறிகளால் உருவகப்படுத்த முடியாதது. நான் அறிகிறேன் என்ற ஆத்மபிரகாசம் அது. அந்த உள்ளொளி வடிவில் அதனை மூன்றுவது கூடத்தின் 'ர்' என்ற எழுத்தில் பாவனை செய்யவேண்டும். முதலாவது கூடம் இரண்டாவதுடனும், இரண்டாவது மூன்றுவதுடன் இணைவதால் (ச்லோ 28-30) முதல் இரண்டு கூடநாதங்கள் மூன்றுவது கூட நாதத்துடன் இணைந்தே உணரப்படுகிறது. அதனுல் மூன்றுவது 'ர்' தொடங்கி ஜாகரம் முதலிய அவஸ்தைகள் கூறப்படுகின்றன. இது முதலாவதான ஜாக்ரத்- (விழிப்பு) அவஸ்தையின் பாவனை. (37)

अन्तःकरणचतुष्कव्यवहारः स्वाप्निकावस्था ।
सा तार्तीयेकाराद्बोध्यापि गलस्थ-ले चिन्त्या ।। ३८ ।।

मनो बुद्धिरहंकारश्चित्तं चेत्यन्तःकरणानि चत्वारि । तैरेव व्यवहारः स्वप्नः । तज्जनकः प्रकाशस्तृतीयहृल्लेखास्थकामकलया बोध्यः । अथापि गलस्थ-ले द्वैतीयीकलकारे चिन्त्यः । गलस्थश्चासौ लश्चेति विग्रहः ।। ३८ ।।

மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என நான்கும் உட்புலன்கள்- அந்தஃகரணங்கள். பொறிகளால் கிட்டுகிற உணர்வுகளை ஆத்மாவிடம் கொண்டு சேர்க்கிற ஸாதனங்கள் (உபகரணங்கள்). பொறிகள் போன்று கோளமோ நிலைத்த இருப்பிடமோ தனித்த சிறப்புப்பணிகளோ இல்லாதவை. விழிப்பில் பத்துவிதப் பொறிகளைக் கொண்டு வெளிப்பொருளை உணர்வித்த இவை கனவு எனும் ஸ்வப்ன நிலையில் பொறியின்றி வெளிப்பொருளின்றி பொருளுணர்வைத் தருபவை. இவ்வுணர்வே கனவு. இது மூன்றுவது கூடத்து 'ஈ' காரத்தால் உணரக் கூடியது. கழுத்தில் இதைப் பாவனை செய்வர். கழுத்திலுள்ள விசுத்திசக்ரத்திலும் 2வது கூடத்தின் லகாரத்திலும் இருப்பதாகப்பாவனை

செய்யவேண்டும். இது இரண்டாவதான கனவு நிலையின் பாவனை.

ஸ்தூல உடல் உணர்வற்ற ஜடம். ஸூக்ஷ்ம உடலான இடைப்பட்ட பத்து இந்திரியங்கள் உள்ளத்தின் தொடர்பால் சேதனமாகத் தோன்றுபவை. அதனுள் உள்ள மனம் முதலிய நான்கும் காரணதேஹம் எனப்படுபவை. நேரிடைக் காட்சியால் பெறுகிற உணர்விற்கு பிரியம், பிரியமற்றது முதலான நிறம் தருபவை; பல்வேறுபிறப்புகளில் பெற்ற உணர்வுகளின் பதிப்பான வாஸனை-ஸம்ஸ்காரம் - விதி முதலியவற்றைக் கொண்டு இந்தப் பிறவியின் நடைமுறையை நிர்ணயிக்கிற பிராரப்தவினைக்கு இவை இருப்பிடம். இவை இப்பிறவிக்கே காரணமாகிக் காரண தேஹமாகின்றன. இந்தக் காரண தேஹத்தின் தனித்ததும் ஸ்தூல உடலின் தொடர்பற்றதுமான செயல்முறையே ஸ்வப்னம். காரணதேஹமும் உணர்விழக்கிற நிலை, தன்னை மறந்த ஆழ்ந்த தூக்கம். ஸ்தூல- ஸூக்ஷ்ம தேஹத் தொடர்பு முற்றிலும் அற்றநிலையல்ல. அவை பயன்படாத நிலை. இம்மூன்று தேஹத் தொடர்பும் அற்றவன் ஆத்மா. தேஹத் தொடர்பற்ற ஆத்மநிலை தூக்கத்தால் உணரப்பெருதபடி அஜ்ஞான இருள் குறுக்கே நிற்கிறது. ஆனல் அந்நிலையில் பெற்ற அனுபவம் துக்கக்கலப்பற்ற சுகம். இது ஆத்மநிலை உணர்வில் மட்டுமே பெறத் தக்கதெனினும் அந்நிலையில் உணரப்பெரு திருப்பதே இதிலுள்ள குறை. (38)

அந்நிலையில் பாவனை செய்வதை விளக்குகிருர்.

आन्तरवृत्तेर्लयतो लीनप्रायस्य जीवस्य ।
वेदनमेव सुषुप्तिश्चिन्त्या तार्तीयबिन्दौ सा ॥ ३९ ॥

विवरणमते आत्मसुखाज्ञानविषयिकास्तिस्रोऽविद्यावृत्तयः स्वीकृता इत्यत आह— आन्तरवृत्तेरिति । अन्तःकरणपरिणामरूप-

वृत्तेरित्यर्थः । वार्तिकमते वृत्तिसामान्याभाव एव सुषुप्तिः । तार्तीयबिन्दौ ललाटस्थाने ॥ ३९ ॥

அந்த: கரணங்களின் செயல்பாடு ஒடுங்கிவிடுகிற நிலை ஸுஷுப்தி எனும் தூக்கம், எண்ணம், அறிவு, நினைவு, தானென்ற நினைப்பு எல்லாம் மறைந்துவிடுகின்றன. தான், தனது சுகம், அதை அறிகிறேன் என்ற மூன்றும் மறந்து விழித்தபின் 'நான் சுகமாய் தூங்கினேன். ஏது மறியேன்'' என்று வருகிற நினைவால் அந்த அஜ்ஞான நிலையுணர்வும் அப்போதும் தானிருந்த உணர்வும் ஏற்படுகிறது. (கோரா, மூடா, விக்ஷிப்தா என்று இந்த சித்த நிலைகளைக் கருதுவர்.) என விவரணம் கூறுகிறது. ஒருவித அந்த: கரணச் செயல்பாடுமற்ற நிலை தான் ஸுஷுப்தி என விருத்தி கூறுகிறது. (ஸுஷுப்தி:- ஆழ்ந்த தன்னுணர்வற்ற தூக்கம்). மூன்ருவது கூடத்தின் ह्रीக்குமேலுள்ள பிந்துவில் பாவனை செய்யத்தக்கது இது. இது மூன்ருவதான ஸுஷுப்தி அவஸ்தையின் பாவனை. உட்புலன்களின் செயல்பாடுகள் அனைத்தும் ஒடுங்கிவிட்டதால், ஜீவனும் தானும் ஒடுங்கியது போன்று உணர்வதே ஸுஷுப்தி என்பது பொதுவாக விளக்கம். (39)

तुर्यावस्था चिदभिव्यञ्जकनादस्य वेदनं प्रोक्तम् ।
तद्भावनार्धचन्द्रादिकं त्रयं व्याप्य कर्तव्या ॥ ४०

अर्धचन्द्ररोधिनीनादेषु व्यास्तस्तुर्यावस्थाप्रकाशो भाव्यः ॥ ४०

விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று அவஸ்தைகளை மட்டுமே மனிதன் அறிந்திருக்கிருன். இவற்றிற்கப்பாற்பட்டும் மனிதனின் நிலை உண்டு. அதனைத் துரீய அவஸ்தை (நான்காம் நிலை) என்பர். விழிப்பு முதலிய மூன்று நிலைகளிலும் ஜீவன், தன் உடல், தன்பொறிகளும் உள்ளமும் என்ற இவற்ருல் உலகத்தை அனுபவிக்கிருன். உடலும் உள்ளமும் மறந்த நிலை-

உடல் - உள்ளத் தொடர்பற்ற நிலை உண்டு என்பதை ஆழ்ந்த தூக்கத்தில் உணர்கிறுன். இவை உடல் உள்ளக் கூட்டால் பெற்ற உணர்வு. உடல் - உள்ளத் தொடர்பற்ற ஆத்மாதான் தான் என்ற உணர்வு, ஞானிக்கு மட்டும், உடல் - உள்ளத் தொடர்பை யோகத்தால் பிரித்துத் தனித்துத் தன்னைக்காணும்போது ஏற்படுகிறது. யோகநிலையிலிருந்து விடுபட்டு உலகநோக்கு ஏற்பட்ட பின்னரும் விழிப்பும் கனவும் ஆழ்ந்த தூக்கமும் தொடர்ந்து மாறி மாறி நேரும் போதும் இடையிடையே தனித்துத் தன்னை உணர்ந்த வாஸனை தலைதூக்கி ஆத்ம உணர்வு வெளிப்படும்.

அந்நிலையில் சித்ஸ்வரூபத்தை நாதம் உணர்த்துவதை உணர்வான். பிந்துவை அடுத்த- அர்த்த சந்திரன், ரோதினீ, நாதம் என்ற நாத அவயவங்களில் நாலாம் நிலை (துரீயம்) பாவனை செய்யப்படவேண்டும். (40)

आनन्दैकघनत्वं यद्वाचामपि न गोचरो नृणाम् ।
तुर्यातीतावस्था सा नादान्तादिपञ्चके भाव्या ॥ ४९ ॥

துரீயம் என்பதற்கு மேலும் ஒரு நிலை உண்டு. அதனை ஐந்தாம் நிலை என்று குறிப்பிடாமல் துர்யாதீதம் (நான்காம் நிலைக்கு அப்பாற்பட்ட நிலை) என்றே குறிப்பிடுவர். (இது ஒரு தனித்த அவஸ்தை (நிலை) அல்ல. இது தான் இயல்பு. அதனுல் ஐந்தாம் நிலை என்று கூறுவதில்லை.) நான்காம் நிலையில் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணதேஹத் தொடர்பில்லை. இந்தத் தொடர்பற்ற நிலை என்ற உணர்வு கூட இல்லாமல் ஆத்மாவே தான், சைதன்யகனமாக, பிரஞ்ஜான கனமாக உள்ள சுத்த ஆத்மா தான் என்ற அத்வைத ஜ்ஞானம் துரீயாதீதநிலை. அதனுல் இது இப்படி எனச் சுட்டிக்காட்டவோ விவரிக்கவோ இயலாத நிலை. அதனை நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா, உன்மநீ என்ற ஐந்து நாத அவயவங்களிலும் பாவனை செய்யத்தக்கது. (41)

ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, துரீயம், துரீயாதீதம் என்ற ஐந்து நிலைகளில் பாவனை முறையை விளக்கியதும் சூன்யம் ஆறுவகைப்படுவதை விளக்குகிறார்.

अवस्थापञ्चकं निरूप्य शून्यषट्कं निरूपयति—

तार्तीयीके रेफस्थाने बिन्दौ च रोधिन्याम् ।
नादान्तव्यापिकयोश्चन्द्रकतुल्यानि पञ्च शून्यानि ॥ ४२ ॥
उन्मन्यां नीरूपं षष्ठं चिन्त्यं महाशून्यम् ।

चन्द्रको मयूरपिच्छाग्रगतं चन्द्राकारं शून्यम् । तदुक्तं स्वच्छन्दसंग्रहे— 'शिखिपक्षचित्ररूपैर्मण्डलैः शून्यपञ्चकम् । ध्यायतोऽनुत्तरे शून्यं परं व्योम तनुर्भवेत् ॥' इति । 'अग्न्यादि-द्वादशान्तेषु त्रींस्त्रींस्त्यक्त्वा वरानने । शून्यत्रयं विजानीयादेकै-कान्तरितं प्रिये । शून्यत्रयात् परे स्थाने महाशून्यं विभावयेत् ॥' इति पूजासंकेते रेफादिमहाबिन्द्वन्तेषु द्वादशसु स्थानेषु मध्ये त्रयं त्रयं त्यक्त्वा, एकैकमन्तरितं मध्यस्थितं शून्यत्रयं विजानीयात् इति । अर्थात् अर्धचन्द्रशक्तिमहाबिन्दुषु शून्यत्रयं तदूर्ध्वं चतुर्थमित्यर्थः । अथवा, आदावन्ते च त्रयं त्रयं त्यक्त्वा मध्यस्थेऽर्धचन्द्रा-दिव्यापिकान्तषट्के एकैकव्यवधानेन शून्यत्रयं तत्परे चतुर्थमित्यर्ध-चन्द्रनादशक्तिषु त्रीणि शून्यानि व्यापिकायां महाशून्यमिति वार्थः यद्यपि स्पष्टं प्रतीयते । तथापि 'शून्यषट्कं सुरेशानि अवस्थापञ्चकं पुनः । विषुवत्सप्तरूपं च भावयन्मनसा जपेत् ॥' इत्युपक्रम-विरोधादन्यथार्थः । तथा हि — अग्न्यादीति भिन्नं पदं शून्य-त्रयेऽन्वेति । अन्तशब्दश्चरमावयववाची । अर्थाच्चरमहृल्लेखासंबन्धिषु द्वादशस्ववयवेषु हकाराद्युन्मनान्तेषु, अग्न्यादि रेफमारभ्य शून्ययोस्त्रयं

शून्यषट्कं विजानीयात् । तच्च न रेफादिसान्तत्येन, किं त्वेकैकव्यवधानेनेति । अत आह— एकैकान्तरितमिति । प्रथमशून्यस्य रेफस्थानीयत्वे कथिते व्यवधानं अर्थात् हकारेकारार्ध-चन्द्रनादशक्तिसमनाभिः षड्भिरिति सिध्यति । तदेवाह— त्रींस्त्री-निति । द्विगुणितांस्त्रींस्त्यक्त्वेत्यर्थः । शून्यत्रयात् शून्ययोस्त्रयस्य, तत्षट्कस्येत्यर्थः । 'सुपां सु—' इति सुपो ङस आदादेशः । निर्धारणे षष्ठी । तेषां मध्ये परे चरम उन्मन्यां महाशून्यमिति । एतद्विभानस्य परमरहस्यत्वादित्थं क्लेशेनोक्तिरित्यन्वयितव्यम् ।। ४२,४३-।।

மூன்றுவது கூடத்தின் 'ர்'லும், பிந்துவிலும் ரோதினியிலும், நாதாந்தத்திலும், வியாபிகையிலும், மயில்தோகையிலுள்ள கண்கள் போல் 5 சூன்யங்களையும் உந்மநியில் உருவகப்படுத்த முடியாத ஆறுவது மஹா சூன்யத்தையும் உணரவேண்டும்.

சூனியம் ஒன்றுமில்லாத நிலையைக் குறிக்கிற பூஜ்யம் (0). பெரும் வெட்டவெளிபோன்றது. இலக்கு ஒன்றும் காட்ட முடியாதது. மயில் தோகையின் விரிப்பில் பார்வையில் தெரிகிற பிறைவட்டம் போன்றது. ''மயிலிறகின் சித்திரம் போன்ற மண்டலங்களின் உதவி கொண்டு ஐந்து சூன்யங்களை உணர்பவனின் தோற்றம் பராகாசம் போன்று பேரொளி கொண்டதாயிருக்கும்'' என ஸ்வச்சந்த ஸங்கிரகம் கூறுகிறது.

பூஜாஸங்கேதத்தில் உள்ள விளக்கம் பின்வருமாறு- அக்னி எனும் ர் என்ற எழுத்திலிருந்து மஹாபிந்துவரை 12 ஸ்தானங்கள் உள்ளன. இவற்றில் மூன்று ஸ்தானங்கள் தாண்டியதும் 4வதுடன் கூடுமுன் இடையே ஒரு இடைவெளி உள்ளது. அதுவே சூன்யம். இப்படி ஒவ்வொரு மூன்றுஸ்தானங்களைக் கடந்ததும் இடைவெளி உண்டு. மூன்றுவது சூன்யத்திற்குப் பின்

மூன்றுவதைத் தொடர்வது மஹாசூன்யம் என்று கூறப்படுகிறது. இதற்கு இருவிளக்கங்கள் உண்டு.

விளக்கம் (1) 'ர்' முதல் மஹாபிந்துவரை உள்ள பன்னிரண்டு ஸ்தானங்களில் அதாவது அர்த்த சந்திரன் சக்தி மஹா சூன்யம் என்ற மூன்று இடங்களில் சூன்யபாவனை செய்யவேண்டும்.

விளக்கம் (2) அடியிலும் நுனியிலும் மூன்று மூன்றை (1-2-3, 10-11-12) விட்டுவிட்டு நடுவிலுள்ள அர்த்த சந்திரன் நாதாந்தம் சக்தி இவற்றில் சூன்யங்களையும் வியாபிகாவில் மஹாசூன்யத்தையும் பாவனை செய்யவேண்டும்.

ஆனுலும், பூஜாஸங்கேதத்தில் இவ்விஷயத்தை விளக்கத் தொடங்குகையில் ''ஆறு சூன்யத்தையும் ஐந்து அவஸ்தைகளையும் ஏழு விஷுவத்தையும் பாவனை செய்து ஜபம் செய்ய வேண்டும்'' என்று கூறப்பட்டுள்ளபடியால் வேறு வகையில் விளக்கம் தேவை. அதுபின் வருமாறு- ''அக்னி எனும் ர் எழுத்திலிருந்து'' என்ற சொற்றொடர். 'ர்'ல் முதல் சூன்யம் என்பதால் ஹ்முதல் உந்மநீ வரையில் உள்ளவற்றில் 'ர்' என்ற எழுத்தில் தொடங்கி ஆறுசூன்யங்களைப் பாவனை செய்யவேண்டும். ஹ ஈ அர்த்தசந்திரன் நாதம் சக்தி ஸமநா இவற்றின் இடைவெளியில் சூன்யம். உந்மநீயில் மஹா சூன்யம் என்ருகும். ரஹஸ்யமானதால் இந்த ஸங்கேதச் சொற்களில் சுற்றிவளைத்துச் சொல்கிருர்.

சூனியம் என்பது நிர்விகல்பகமான சித்சக்தியின் உணர்வு. இரு விகல்பஜ்ஞானங்களிடையே நடுவே எதுவு மற்ற வெட்டவெளி இருப்பதாகத் தோன்றும். இது சுத்த சைதன்யம். இந்த நிர்விகல்பக சைதன்யம் தான் ஸவிகல்பக ஞானத்தின் பின் பின்புலமாக அதனை வெளிக்காட்டுவதாகும்.

| | | | சரி | தவறான விளக்கம் 1 | தவறான விளக்கம் 2 |
|---|---|---|---|---|---|
| 13 | | மஹாபிந்து | | சூன்யம் 3 | |
| 12 | | உன்மனீ | சூன்யம் 6 (மஹாசூன்யம்) | | |
| 11 | | ஸமநா | | | |
| 10 | | வ்யாபினீ | சூன்யம் 5 | | மஹாசூன்யம் |
| 9 | நாதங்கள் | சக்தி | | சூன்யம் 2 | சூன்யம் 3 |
| 8 | | நாதாந்தம் | சூன்யம் 4 | | |
| 7 | | நாதம் | | | சூன்யம் 2 |
| 6 | | ரோதினீ | சூன்யம் 3 | | |
| 5 | | அர்த்தசந்திரன் | | சூன்யம் 1 | சூன்யம் 1 |
| 4 | | பிந்து | சூன்யம் 2 | | |
| 3 | | ई | | | |
| 2 | | र् | சூன்யம் 1 | | |
| 1 | | ह् | | | |

1-12 வரை 'ஹ்ரீம்'ன் விரிவு
13 துவாதசாந்தம்

துரீயம் வரை விருத்திஜ்ஞானம் உண்டு. துரீயாதீதம் என்பது பரிபூர்ண ஆநந்தகந - அகண்டாகார வ்ருத்தி. மஹா சூன்யம். அகண்டாகார வ்ருத்தியும் ஒழிந்த ஸஹஜ நிலை என்பர். ஐந்து சூன்யங்களும் கூடஸ்தனின் ஸ்வப்ரகாசத்தால் விளங்குபவை. (42)

விஷுவங்களில் முதலாவதான பிராணவிஷுவத்தை விளக்குகிறார்.

क्रमात् प्राप्तानि सप्त विषुवन्त्याह—

प्राणात्ममानसानां संयोगः प्राणविषुवाख्यः ॥ ४३ ॥

ककारात्मकवायुः प्राणः । आत्मा प्राणा मनश्चेत्येतेषामैक्यं प्राणविषुवसंज्ञमिति केचित् । यथाश्रुतमन्ये ॥ ४३ ॥

ஸமபரிமாணமுள்ள இரண்டுடன் மாறுபட்ட மூன்றாவதொன்றை இணைத்து உணர்வது விஷுவம்.

பகலும் இரவும் சமமாக உள்ள நாட்கள் இரண்டு, சித்திரை முதல் தேதியும் ஐப்பசி முதல் தேதியும். அந்நாட்களில் காலத்தை அளக்கிற சூரியன் முறையே மேஷதுலா ராசிகளில் நுழைகிறான். இதனைச் சைத்ரவிஷுவம்(த்) துலா விஷுவம்(த்) என்பர். பஞ்சதசீ மந்திரத்தின் க முதலிய எழுத்துக்களை உச்சரிக்க முற்படும் போது பிராணவாயு மூலாதாரத்தில் கிளம்பி வைகரியான 'க' முதலிய எழுத்தாக வடிவெடுக்கிறது. ஒலிவடிவம் பெறுகிற பிராணவாயு, உச்சரிக்கத் தூண்டுகிற மனம், இவற்றுடன் ஆத்மா என்ற மூன்றும் இணைந்தே மந்திரமாகிறது. அதற்கு மூல வஸ்துக்களான பிராணன் ஆத்மா மனம் என்ற மூன்றும் இணைந்துள்ளதாக உணர்வதே பிராண விஷுவம். பிராண நாதத்தை ஒன்றியுள்ள மனத்துடன் எதனையும் பற்றாத ஆத்மாவை இணைப்பதே இது. (விஷுவம், விஷுவத் என இரண்டுவிதமாகவும் இதனைச் சொல்வர்.) (43)

மந்திரவிஷுவம் என்பது—

मन्त्रविषुवमाह—

प्राथमिककूटनादे त्वनाहताद् ब्रह्मरन्ध्रान्ते ।
व्यष्टिसमष्टिविभेदाद् बीजचतुष्कस्य च स्वस्य ॥ ४४ ॥
ऐक्येन नादमयताविभावनं मन्त्रविषुवाख्यम् ।

प्राथमिककूटनादे बीजचतुष्कस्यैक्यम्, स्वस्यात्मनस्तु आधारोत्थितनादेन सहैक्यं; न प्राथमिकेनानाहतादारब्धेन सह । 'आधारोत्थितनादे तु लीनं बुद्ध्वात्मरूपकम् । संयोगेन वियोगेन मन्त्रार्णानां महेश्वरि ॥ अनाहताद्याधारान्तं नादात्मत्वविचिन्तनम् ॥ विषुवम्...............॥'' इति कादिमतीयवचनात् । संयोगेन समष्ट्या । वियोगेन व्यष्ट्या । चतुर्विधानामिति शेषः । आधाराणामन्तो ब्रह्मरन्ध्रम् । आधारान्तान्तमिति तन्त्रेणान्तपदद्वयसत्त्वाद्

ब्रह्मरन्ध्रान्तमित्यर्थकत्वेन व्याचक्षते । आ आधारान्तादित्यर्थके आङ्प्रश्लेषे तु सर्वं सुस्थम् ।। ४४ ।।

ஒவ்வொரு கூடத்தின் இறுதியிலும் ஹ்ரீம் என்ற எழுத்தின் கடைப்பகுதியான பிந்துவிலிருந்து எழுந்த நாதம் 8 நிலைகள் பெற்றுப் பிரும்மரந்திரம் வரை செல்கிறது. முதல் கூடம், மூலாதாரஸ்வாதிஷ்டான-மணி பூரகங்களில் உருவாகி அதன் நாதம் பிரும்ம ரந்திரத்திற்குச் செல்கிறது. விசுத்தி ஆஜ்ஞைகளில் எழுகிற சக்தி கூடத்தின் நாதமும் பிரும்மரந்திரம் அடைகிறது. அநாஹதத்திலிருந்து பிரும்மரந்திரம் வரை நாதஸஞ்சாரம் உண்டு. ஒவ்வொரு கூடத்தின் தனித்தநாதம் வ்யஷ்டி. மூன்றின் கூட்டு நாதம் ஸமஷ்டி. நாதத்தின் வியஷ்டி-ஸமஷ்டி நிலைகளையும், பீஜநிலையில் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் அநாக்க்யா என்ற வியஷ்டி - ஸமஷ்டி நிலைகளையும், ஸாதகனுகிய தன்னுடன் ஐக்கியப்படுத்தி உணர்வதான - ஐக்யானு ஸந்தானமே மந்திர விஷுவமாகிறது. ஸாதகனுன தானும் அந்த நாத நிலையிலிருப்பதாக பாவனைசெய்வது பெரிதும் உதவும். *(44-45)*

நாடீ விஷுவத்தை விளக்குகிறுர்

नाडीविषुवमाह—

आधारोत्थितनादस्योच्चाराद् ब्रह्मरन्ध्रान्तम् ।। ४५ ।।

षट्चक्राणां ग्रन्थीन् द्वादश भिन्दन् सुषुम्णयैव पथा ।
नाडीनादार्णानां संयोगो नाडिकाविषुवम् ।। ४६ ।।

मूलाधारादिचक्रषट्कस्याप्यध ऊर्ध्वं चैकैको ग्रन्थिरिति द्वादश ग्रन्थयः । तद्भेदनमार्गेणैव सुषुम्णानाडी मूलाधाराद् ब्रह्मरन्ध्रं व्याप्नोति । तेनैव मार्गेण नादस्य वर्णपङ्क्तेश्च नाडीसंयुक्तत्वेन भावनयोच्चारणं नाडीविषुवमित्यर्थः ।। ४५, ४६ ।।

மூலாதாரத்தில் எழுந்த நாதம் பிரும்மரந்திரம்வரை ஸுஷும்நா நாடிவழியே செல்கிறது. நடுவே ஆறு சக்கிரங்களின் கீழும் மேலுமுள்ள பன்னிரண்டு கிரந்திகளைப் பிளந்து செல்கிறது. மந்திரத்தை நாடீ ஸஞ்சாரத்துடன் பாவனை செய்யும் போது, மூலாதாரத்தின் கீழிருந்து கிளம்புகிற நாதம், அது செல்கிற நாடி எனும் பாதை, மந்திரத்தின் அக்ஷரங்கள் இவற்றின் ஐக்கிய பாவனை நாடீ விஷுவமாகிறது. மந்திரமும் மூலாதாரம் முதல் ப்ரம்ம ரந்திரம்வரை வியஷ்டியாக, ஸமஷ்டியாக உள்ளது. ஸுஷும்நா நாடியும் அவ்வாறே. மந்திரத்தின் நாதமும் அவ்வாறே. இப்படி மந்திரம் அதன் நாதம் இவற்றை இவை செல்லும் பாதையுடன் இணைத்துச் செய்கிற பாவனை இது. (45-46)

ப்ரசாந்த விஷுவம் பற்றி விளக்குகிறார் :-

प्रशान्तविषुवमाह—

रेफे कामकलार्णे हार्द(र्ध)कलायां च बिन्द्वादौ ।
नादान्तावधि नादः सूक्ष्मतरो जायते तत्र ॥ ४७ ॥

शक्तेर्मध्ये तल्लयचिन्तनमुदितं प्रशान्तविषुवाख्यम् ।

तृतीयकूटस्थरेफादिषु सप्तसु स्थानेष्वाधारादारब्धस्य नादस्य तत्र सूक्ष्मतरतादशा, अभिघातादुत्तरोत्तरक्षणेषु कांस्यतालध्वनिवत् । तस्य शक्तौ लयो भाव्य इत्यर्थः ॥ ४७, ४८- ॥

'ஹ்ரீம்'ல் உள்ள ர், ஈ, பிந்து, அர்த்தசந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம் என்ற ஏழின் ஒலி வெங்கலத்தாளத்தின் ஒலி போல் முதலில் ஸ்பஷ்டமாகவும் பிறகு நீட்சியும் கார்வையும், கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்வும் கொண்டதாக ஸ்தூல நிலையிலிருந்து ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம் என்று மாறும். அந்த ஸூக்ஷ்மதர நிலையும் நாதாந்தத்திற்கு அடுத்த

சக்தியில் லயமடைவதை உணர்வது ப்ரசாந்த விஷுவமாகும். (47-48)

சக்தி விஷுவம் மற்றும் கால விஷுவத்தை விளக்குகிறார்.

शक्तिविषुवमाह—

शक्त्यन्तर्गतनादं समनायां भावयेल्लीनम् ॥ ४८ ॥

शक्तिस्थानादूर्ध्वं पुनरुज्जीवितस्य नादस्य सूक्ष्मतमस्य व्यापिकामुल्लङ्घ्य समनायां लयः शक्तिविषुवमित्यर्थः॥४८॥

समनोर्ध्वं पुनरुज्जीवितस्यात्यन्तं सूक्ष्मतमस्य नादस्योन्मन्यां लयः कालविषुवमित्याह—

समनागतमुन्मन्यामेते द्वे शक्तिकालविषुवाख्ये ।

நாதமானது, சக்தி எனும் இடத்தை அடைந்ததும், முழுவதும் லயமடையாமல் ஸூக்ஷ்மதமமாக உணரப் பட்டு ஸமனையில் லயமடையும். அந்நிலையின் பாவனை சக்தி விஷுவம். ஸமனையில் லயமடைந்த நாதமும் மிக ஸூக்ஷ்மதமமாக உன்மனியில் லயமடையும். கால விஷுவம் அந்நிலையின் பாவனையாகும்.

तत्त्वविषुवमाह—

श्रीविद्याकूटावयवेषु ककारादिषून्मनान्तेषु ॥ ४९ ॥

अकुलादिकोन्मनान्तप्रदेशसंस्थेषु सकलेषु ।
अध्युष्टनिमेषोत्तरसप्तदशाधिकशतत्रयत्रुटिभिः ॥ ५० ॥

उच्चरिते नादे सति तस्यान्ते तत्त्ववेदनं भवति ।
तदिदं चैतन्याभिव्यक्तिनिदानं तु तत्त्वविषुवाख्यम् ॥ ५१ ॥

उक्तेषु द्वात्रिंशत्पद्मेष्वधस्तनं चरमं चाकुलपद्मानि । शेषाणि कुलपद्मानि । तेषु यद्यपि मूलाधाराख्यात् कुलपद्मादेव विद्याक्षराणामारम्भः, तथापि चक्रराजस्य सकलाख्यभावनाया अधस्तनसहस्रदलकमलमारभ्यैव 'अकुले विषुसंज्ञे च' इत्यादिना चतुःशत्यामुक्तत्वात् कुलाकुलविद्ययोरभेदेन श्रीविद्याया अपि तत आरम्भोक्तिस्तन्त्रेषु । अध्युष्टं सार्धत्रयम् । निमेषो लोचनस्पन्दकालः । तस्य त्रिसहस्रतमोऽम्शस्त्रुटिः, 'स्वस्थे नरे समासीने यावत् स्पन्दति लोचनम् । तस्य त्रिंशत्तमो भागस्तत्परः परिकीर्तितः । तत्परस्य शतांशस्तु त्रुटिरित्यभिधीयते ॥' इति वचनात् । एवं च (१०८१७) अयुतोत्तराष्टशतोत्तर-सप्तदशत्रुटिपर्यन्तं विद्यावयवस्थान संलग्नतापूर्वकं नादोच्चारणे कृते सति, तत्त्वस्य स्वसंविदभेदस्य बोधो भवति । तदिदमुच्चारणं तत्त्वविषुवम् ॥ ४९-५१ ॥

*மூலாதாரத்தின் கீழ் அகுல ஸஹஸ்ராரம் ஷட்தள கமலம் என இரண்டு அகுல சக்ரங்கள். சிரஸில் எல்லாவற்றிற்கும் மேலுள்ள அகுல ஸஹஸ்ராரம். ஆக அகுல சக்கிரங்கள் மூன்று.*

*மூலாதாரம் முதலிய 6 சக்கிரங்கள், நாதம் முதலிய எட்டு, 15 ஸ்ரீவித்யாக்ஷரங்கள் என்ற 29 குல பத்மங்கள்.*

*மூல மந்திரத்தின் அக்ஷர உச்சாரணம் மூலாதாரத்தில் தொடங்கி உன்மனாவரை தொடர்கிறது. கீழும் மேலுமுள்ள அகுல சக்கிரங்கள் குல சக்கிரமான 29க்கும் ஆதாரமானவை. இவற்றில் 3 1/2 நிமேஷங்களும் 317 த்ருடியும் உள்ள காலத்தில் மந்திர நாதம் உச்சரிக்கப்படும். (அத்த்யுஷ்டம் மூன்றரை சுற்று). அதன்பின் அந்த மந்திர உச்சாரணத்தின் மூலம் தத்துவ ஜ்ஞானம் ஏற்படும். அந்த தத்துவ ஞானமாகிய சேதன சக்தி வெளிப்படுகிற இடம் தத்துவ விஷுவம். மந்திரத்தின் நாதம், ஆத்ம நாதம், ஸ்தானங்களில் அவற்றின் ப்ரதிபலிப்பு, இதனால்*

பெறுகிற தத்வஸ்வரூப அனுபவம், இவற்றின் ஐக்கியம் தத்துவ விஷுவத்தில் ஏற்படுகிறது.

ஒரு இமை கொட்டுகிற நேரம் நிமேஷம் எனப்படும். 30 தத்பரங்கள் கொண்டது 1 நிமேஷம். 100 த்ருடி ஒரு தத்பரம். (அத்த்யுஷ்டம் - 3 1/2) ஆக 3 1/2 நிமேஷமும் 317 த்ருடிகளும் (10817 த்ருடி நேரம்) கொண்ட நேரத்தில் மந்திராவயவமான 15 அட்சரங்கள், 17 அட்சர ஒலி வெளியாகுமிடங்கள், இவற்றை தத்வானுபவத்துடன் இணைப்பதே தத்வ விஷுவம். தன்னிடமுள்ள சித்சக்தியை உணர்வதே தத்வானுபவம். இந்த 10817 த்ருடி நேரத்தில் க-முதல் உந்மநா வரை உள்ள 23 ஒலி நிலைகளையும் 9 அகுல குல சக்ரங்களையும் அந்த நாதத்தையும் அவற்றால் பெறுகிற பர சைதன்யானுபவத்தையும் இணைப்பது தத்வ விஷுவம். (49-51)

முடிவுரையாக ஜபத்தின் இலக்கணம் கூறுகிறார்.

उपसंहारपूर्वकं जपं लक्षयति—

एवमवस्थाशून्यविषुवन्ति चक्राणि पञ्च षट् सप्त ।
नव च मनोरर्थांश्च स्मरतोऽर्णोच्चारणं तु जपः ॥ ५२ ॥

अवस्थादिचतुष्टये संख्याचतुष्टयस्य क्रमादन्वयः । नादत्रयस्य चक्र त्रयात्मकत्वभावनं प्रागुक्तम् । चक्रसंकेते त्वन्यदपि त्रयमुक्तम् — चक्रभावनं त्रिविधं सकलं निष्कलं सकलनिष्कलं चेति । अकुल-सहस्रारं मूलाधारादिपञ्चकं सूक्ष्मजिह्वा भ्रूमध्यं बिन्दुस्थानं चेति नवसु स्थानेषु त्रैलोक्यमोहनादिचक्रनवकभावनं सकलम्, बिन्द्वाद्युन्मन्यन्तं तद्भावनं द्वितीयम्, महाबिन्दावेव तद्भावनं तृतीयमिति । मनोर्मन्त्र-स्यार्थाननुसन्दधानस्य विद्याया अर्णानामक्षराणा-मष्टपञ्चाशतो मध्ये आद्यकूटद्वितयबिन्द्वादिनवकद्वयप्रहाणेनावशिष्टानां चत्वारिंशतोऽ-क्षराणामुच्चारणं जपो जपपदवाच्यमित्यर्थः ॥ ५२ ॥

இவ்வாறு அவஸ்தைகள் ஐந்து, சூன்யங்கள் ஆறு, விஷுவங்கள் ஏழு, சக்கிரங்கள் ஒன்பது அடுத்த விளக்க விருக்கிற மந்த்ரத்தின் பொருள் பதினைந்து, இவற்றை மனத்திற் கொண்டு உணர்ந்து ஸாதகன் பதினைந் தக்ஷரங்களை உச்சரிப்பதே ஜபம்.

அவஸ்தை சூன்யம் விஷுவம் என்ற மூன்றும் விளக்கப்பட்டுவிட்டன. ஒவ்வொரு கூடத்தின் இறுதியிலுள்ள நாதமும் மூன்று சக்ரங்களைக் குறிக்கும் என்பதை 36வது சுலோகம் கூறுகிறது.

சக்ரங்கள் பற்றி சக்ர ஸங்கேதத்தில் மற்றொரு விளக்கம் உண்டு. ஸகலம், நிஷ்கலம், ஸகல நிஷ்கலம், எனச் சக்ரம் மூவகைப்படும். அகுல ஸஹஸ்ராரம், மூலாதாரம் முதலிய 5 சக்ரங்கள், உள் நாக்கு, புருவத்தின் நடுப்பகுதி பிந்துஸ்தானம் என்ற ஒன்பது இடங்களில் திரைலோக்ய மோஹனம் முதலிய ஒன்பது சக்ரங்களை பாவனை செய்வது **ஸகல**மாகும். பிந்து முதல் உன்மனிவரை உள்ள ஒன்பது இடங்களில் ஒன்பது சக்ரங்களைப் பாவனை செய்வது **ஸகல நிஷ்கலம்**. உன்மனிக்கு மேலுள்ள ஸஹஸ்ராரத்தில் ஒன்பது சக்ரங்களையும் பாவனை செய்வது **நிஷ்கல**மாகும்.

மந்த்ரத்தையும், பொருளையும் அனுஸந்தானம் செய்யும் போது முதல் இரு கூடங்களில் பிந்துவிற்கு மேலுள்ள ஒன்பது நிலைகளை நீக்கி மீதமுள்ள 40 அக்ஷர அவயவங்களே ஜபிக்கப்படுகின்றன. (52)

भास्कररायेण गुरोः करुणावशतः समुन्मिषिते ।
वरिवस्यातिरहस्ये पूर्वांशः पूर्णतामगमत् ।। ५३

इति श्रीनृसिंहानन्दनाथचरणाराधकेन भास्कररायापरनाम्ना भासुरानन्दनाथेनोन्नीते वरिवस्यारहस्ये तत्प्रकाशे च प्रथमोऽम्शः ।

குருவின் கருணையால் பாஸ்கரராயரால் வெளிப்படுத்தப்பட்ட வரிவஸ்யா ரஹஸ்யத்தில் முதல்பாகம் நிறைவுற்றது.

# முதல் பாகத்தின் ஸாரம்

பிரும்மத்தை உணர்வதே அறிவைப் பெற்றதன் உயர் நோக்கம். பிரும்மத்தின் இயல்பு ப்ரகாசம். அதன் இயல்பு சக்தியாகத் தனிப்பட்டு இயங்குவது விமர்சம்.

**பிரகாசம்** - தான் தானுகவே இருப்பது. அதனை அறிபவர் இல்லை. உணர்விற்கு அது உட்படாது. பிறரால் அதனை விளக்க இயலாது. வேறொன்று அதனை விளக்காது. அதனை விளக்க அதனைத் தவிர வேறொன்றில்லை.

**விமர்சம்** - ப்ரகாசம் தானே தன்னை விளக்கிக் கொள்ளும். தன்னை உணரமுடிவதாக்கிக் கொள்ளும். வெளிப்பாடு, ஆற்றல் என்று அதன் இன்றியமையாத தன் நிலையை சக்தியை முன் நிறுத்தும். தன்னை உணரும்படி செய்யும். உணர்விற் குட்படுகிற நிலையைச் செயல்படுத்த முற்பட்டு உணர்பவரையும், உணர்த்துவதையும் உணர்த்தப்படுவதையும் பிரித்துக் தன்னிலிருந்து வேறுபடுத்திக் காட்டும். அந்த செயல் விளக்கமே உலகம். த்ரஷ்டா - உணர்பவன். த்ருச்யம் - உணரப் பெறுவது, த்ருஷ்டி - உணர்வு என்றவாறு அதன் விரிவு.

விமர்சம் இந்த வகையில் செயல்படுவதை ஸ்ருஷ்டி, ஸ்த்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்ற ஐந்து கிருத்யங்கள் (தொழில்கள்) என்பர்.

உலகின் காட்சியை நான்கு பரிணாமங்களிலும், பரிமாணங்களிலும் உணரலாம். விழிப்பு (ஜாக்ரத் - விச்வன்) கனவு (ஸ்வப்ன - தைஜஸன்) தூக்கம் (ஸுஷுப்தி - பிராஜ்ஞன்) என்றவாறு காணலாம். இம்மூன்றில் வெளி உலகமும் கரணமும் உதவும். இவை பயன்படாத உணர்வு துரீயம். நான்கின் உணர்வும் வெவ்வேறுனது. உணர்வின் வேறுபாட்டிற்கேற்ப உணர்பவனின் நிலையிலும் வேறுபாடு உண்டு. விமர்ச சக்தி தன்னை அறிய பதினான்கு வித்யா ஸ்தானங்களைத் தந்துள்ளது. அவற்றில் வேதம் முக்கியமானது. வேதத்தின்

சாரம் காயத்ரியாகும். அது மூன்று பாதங்கள் கொண்டது, நான்கு பாதங்கள் கொண்டது என ஸாதகர் நிலைக்கு ஏற்ப இருவகை. பஞ்சதசாக்ஷரீ மந்த்ரம் அதன் ரஹஸ்ய வடிவம்.

பஞ்சதசாக்ஷரிக்கு மூன்று கூடங்கள். அதில் இங்கு காதி வித்யையே விளக்கப்படுகிறது. வாக்பவம், காம ராஜம், சக்தி என்ற மூன்று கூடங்களில் முறையே 5-6-4 அக்ஷரங்கள் உள்ளன. மூன்று கூடங்களை இணைக்க ஹ்ரீம் என்ற கூட்டெழுத்து உதவுகிறது. ஹ்ரீம் என்பதில் நான்கு ஸ்தூலவ படிவங்களும், எட்டு ஸூக்ஷ்ம நாதவடிவங்களும் உண்டு.

பதினைந்து அட்சரங்களையும் உச்சரிக்க மூன்று லவம் குறைந்த 31 மாத்திரை கால அவகாசம் தேவை. உச்சரிக்கும் போது அவை தொண்டை வழியே ஸூக்ஷ்ம ஒலி நிலைவிட்டு ஸ்தூல நிலைக்கு வருகின்றன. அக்ஷரங்கள் வெளிப்படுமிடம், அண்ணம், பல் முதலியவைகளில் மோதலால் ஒலி வடிவ மாற்றங்கள், உச்சரிப்பதில் உள்ள பிரயத்னம் முதலியவை கருத்திற் கொள்ளத் தக்கவை.

ஜபம் செய்யும் போது முதல் கூடத்தின் ஹ்ரீங்காரத்தின் பின் எட்டு பகுதிகள் இரண்டாவது கூடத்தின் முதல் ஹகாரத்தில் மறைகின்றன. 2வது கூடத்தின் ஹ்ரீங்காரத்தின் எட்டு பகுதிகள் மூன்றுவது கூடத்தின் ஸகாரத்தில் மறைவதால். கால அளவில் வேறுபாடு, தனித்துக் ஒவ்வொரு கூடத்தையும் உச்சரிப்பதில் 31 மாத்திரை, சேர்த்து ஒலிக்கும் போது 29 மாத்திரை.

பஞ்சக்ருத்யங்கள், புடம் தாம முதலிய பிரிவுகள், விழிப்பு முதலிய நிலைகள், சூன்யங்கள், விஷுவங்கள், இவற்றின் பாவனை இவற்றுடன் மந்திர மனனம் செய்ய வேண்டியது.

இரண்டாம் அம்சத்தில் பஞ்சதசியின் பதினைந்து அக்ஷரங்களுக்கும், வியஷ்டியாகவும், ஸமஷ்டியாகவும் பதினைந்து பொருட்கள் தரப்படுகின்றன. அவை பின் வருமாறு—

1. **காயத்ரீ அர்த்தம்** :- காயத்ரியும், பஞ்சதசியும் பிரும்ஹத்தையே விளக்குகின்றன.

2. **பாவார்த்தம்** :- தேவி, மந்திரம், உலகம் இவற்றினிடையே வேற்றுமை இல்லை.

3. **ஸம்ப்ரதாய அர்த்தம்** :- உலகின் தாய் (மூல காரணம்) தேவி. உலகம் அவளிடமிருந்து அவளால் அவளிடம் தோன்றியது. அதனுல் இரண்டிற்கு மிடையே ஜன்ய ஜனக பாவத்தால் வேற்றுமையில்லை. பிரும்மம் - வாசகம், உலகம் வாச்யம், அதனுல் வேற்றுமை இல்லை. பஞ்சதசீ வித்யை வாசகம், உலகம் வாச்யம், அதனுல் வேற்றுமை இல்லை.

4. **நிகர்ப்பார்த்தம்** :- பரசிவன், குரு, ஸாதகன் இவர்களிடையே வேற்றுமையில்லை.

5. **கௌலிகார்த்தம்** :- தேவீ, வித்யை, சக்ரம், ஸாதகரின் குரு, ஸாதகன் இவர்களிடையே வேற்றுமையில்லை.

6. **ரஹஸ்யார்த்தம்** :- குண்டலினீ, தேவீ, வித்யை, ஸாதகன் இவர்களிடையே வேற்றுமை இல்லை.

7. **மஹா தத்வார்த்தம்** :- பரம் பொருளிடம் ஸாதகன் தன்னை இணைத்துக் கொள்வது. சொல்லும் செயலும் எண்ணமும், செயல்படத் தனித்து இயலாமல், பரம் பொருளின் ஒளியால் இயங்குவதை உணர்ந்து அந்த மிக மிக ஸூக்ஷ்மமான பெருந் தத்துவத்துடன் இணைவது.

8. **நாமார்த்தம்** :- பதினைந்து எழுத்துக்களும் பரம் பொருளைக் குறிப்பிடுபவையே.

9. **சப்த ரூபார்த்தம்** :- ஒவ்வொரு எழுத்துமே சப்த வடிவில் பரம் பொருளே.

10. **நாமைகதேசார்த்தம்** :- ஸ்ரீ லலிதா த்ரிசதியில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் முதல் எழுத்தாகக் கொண்டு 20-20 நாமங்கள் வெவ்வேறு பொருளுள்ளவையாக உள்ளன. அத்தனை நாமங்களும் பஞ்ச தசியின் பொருளைக் கூறுபவை.

11. **சாக்தார்த்தம்** :- வாக், காமம், சக்தி என்ற மூன்று கூடங்களிலும் தேவியின் முகம் உடலின் நடுபாகம், உடலின் கீழ் பாகம் என்றும், வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீ இச்சா, ஜ்ஞானா, க்ரியா, பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூன்று சக்திமிதுனங்களும் என்ற வேறுபாடின்மை.

12. **ஸாமரஸ்யார்த்தம்** :- சிவனும், சக்தியும் ஸமரஸர்களே. உணர்வு செயல் வெளிப்பாடு இவற்றில் வேற்றுமையில்லை.

13. **ஸமஸ்தார்த்தம்** :- ஒவ்வொரு அக்ஷரத்தின் சொல்லமைப்பும், மொத்த வாக்ய அமைப்பும் ஒரே பொருளையே விளக்குகின்றது.

14. **ஸகுணார்த்தம்** :- பிரும்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகள், ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் என்ற மூன்று வேதங்கள் இவை பஞ்ச தசியின் பொருள்.

15. **மஹாவாக்யார்த்தம்** :- 'க' முதலிய 12 எழுத்துக்கள் பிரும்மத்தின் தடஸ்த லக்ஷணத்தையும், ஸ்வரூப லக்ஷணத்தையும், சக்தி பீஜம் நிர்குண ஸ்வரூபத்தையும் கூறுகின்றன.

இவற்றை இரண்டாம் அம்சம் விரிவாக விளக்குகிறது.

# द्वितीयोंऽशः

## இரண்டாம் அம்சம்

जपलक्षणशरीरघटकत्वेन 'यदधीतमविज्ञातं निगदेनैव शब्द्यते । अनग्राविव शुष्कैधो न तज्ज्वलति कर्हिचित् ॥' इत्यर्थ ज्ञानरहितशब्दोच्चारणस्य निन्दया पापानुमानाच्च अर्थज्ञान-मावश्यिकमित्याह-

नार्थज्ञानविहीनं शब्दस्योच्चारणं फलति ।
भस्मनि वह्निविहीने न प्रक्षिप्तं हविर्ज्वलति ॥ ५४ ॥

अर्थमजानानां नानाविधशब्दमात्रपाठवताम् ।
उपमेयश्चक्रीवान् मलयजभारस्य वोढैव ॥ ५५ ॥

चक्रीवान् गर्दभः । यद्यपि 'यथा खरश्चन्दनभारवाही' इति श्रुतौ खरस्यैवोपमानता, तथापि सादृश्यनिरूपकगुणाधिक्यवत एवोपमानत्वात् तदाधिक्यव्यञ्जनाय प्रतीपालङ्कार इवोपमानोप-मेययोर्व्यत्यासः ॥ ५४, ५५॥

## இரண்டாம் அம்சம்

*பொருளை உணராமல் சொல்லளவில் கற்றதெதுவும் ''நெருப்பற்ற இடத்தில் காய்ந்த விறகு பற்றி எரியாததைப்போல்'' எப்போதும் பயன்படாது. என்ற நீதிப்படி ஜபிக்கவேண்டியதைப் பொருளறியாமல் சப்தத்தை மட்டும் உச்சரிப்பதை தாழ்வாகப் பேசு கின்றனர். அதனல் பாபம் ஏற்படும். பொருளுணர்ந்து சொல்வது அவசியமென்பதை வற்புறுத்துகிறுர்.*

*பொருளுணர்வின்றி சப்தத்தின் உச்சாரணம் பலன் தருவதில்லை. நெருப்பற்ற சாம்பலில் போட்ட அவிசு (நெய்முதலியவை) எரியாது.*

பொருளுணர்வின்றி பலவகைப்பட்டச் சொற்களை அப்படியே படிப்பவனுக்கு ஒப்பானது சந்தனக் கட்டையைச் சுமக்கிற கழுதையே. கழுதையைவிட இவன் தாழ்ந்தவன். இவனிடம் மூடத்தன்மை அதிகம். (54-55)

पुरुषार्थानिच्छद्भिः पुरुषैरर्थाः परिज्ञेयाः ।
अर्थानादरभाजां नैवार्थः प्रत्युतानर्थः ॥ ५६ ॥

एतेनार्थज्ञानस्य नित्यत्वमुक्तं भवति ॥ ५६ ॥

ஜீவன் தான் எடுத்த பிறவியின் பயனை நாடுபவனுயின் நாடப்படுவது எது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். நாடியதில் ஆர்வமில்லாதவருக்கு நாடியது கிடைக்காது என்பது மட்டுமல்ல, நாடத்தகாததும் கிட்டும். அதனுல் எதனை நாடுகிறேம் என்பதில் கவனம் அவசியம். பொருளறிந்து சொல் வெளிவர வேண்டும். (இங்கே) பஞ்சதசீ மந்திரம் பொருளுணர்வுடன் ஜபிப்பது அவசியம். அந்தப் பொருள் உபநிஷத்திலும், தந்திரங்களிலும் சிவபெருமானுல் உபதேசிக்கப்பட்டுள்ளது. அவற்றைத் தொகுத்துக் குறிப்பிடுகிறுர்.

ते चार्थास्तन्त्रोपनिषद्ग्रन्थभेदेन नानाविधाः शिवेनोक्ताः । तांश्च संजिघृक्षुरुद्दिशति-

अथातः पूर्णगायत्र्याः प्रतिपाद्योऽर्थ आदिमः ।
भावार्थः सम्प्रदायार्थो निगर्भार्थस्तुरीयकः ॥ ५७ ॥

कौलिकार्थो रहस्यार्थो महातत्त्वार्थ एव च ।
नामार्थः शब्दरूपार्थश्चार्थो नामैकदेशगः ॥ ५८ ॥

शाक्तार्थः सामरस्यार्थः समस्तसगुणार्थकौ ।
महावाक्यार्थ इत्यर्थाः पञ्चदश्याः स्वसंमिताः ॥ ५९ ॥

ककारादि-नाम्नामानन्त्यात् ककारस्याप्यनन्तार्थकत्वे प्राप्तेऽयं नियम एत एवार्था नान्य इति । तेषु च प्रत्यक्षरं प्रथमनाम्नां नामार्थशब्दरूपार्थाभ्यां पौनरुक्त्यादिहैकोन विंशतिरेवार्था विवक्षिताः । तथा च नामैक-देशार्थोऽप्येकोनविंशतिविधः सम्पन्नः । अत्र च पञ्चदशसंख्यासु विंशिकासु प्रथमनामानि परित्यज्य द्वितीयनामान्युट्टङ्कितानि, प्रथमनाम्नां पूर्वतनार्थवर्णनेन लब्धत्वात् ॥ १११, ११२ ॥

*லலிதா த்ரிசதீயில் கல்யாணீ, ஏகாக்ஷரீ, ஈசித்ரீ, லலிதா என்றவாறு பஞ்சதசியின் ஒவ்வொரு அக்ஷரத்தையும் முதல் எழுத்தாகக் கொண்ட முன்னூறு நாமங்கள் கூறப்படுகின்றன. ஒவ்வொரு எழுத்திற்கும் 20 நாமங்கள். இவை பஞ்சதசியின் ஒவ்வொரு எழுத்திற்கும் உள்ள பொருளேயும் விளக்க வந்தவை. ஒவ்வொரு நாமத்திற்கும் தனிப் பொருள் உண்டு. ககாரத்தில் தொடங்கிய நாமங்களின் பொருள் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்களின் பாஷ்யத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. 300 நாமங்களுக்குரிய 300 பொருட்களும் பஞ்சதசியின் 15 அக்ஷரங்களுக்குரியவை. பெயரின் ஒரு பகுதியையோ ஒரு எழுத்தையோ குறிப்பிட்டால் முழுப் பெயரின் பொருளும் அதனுல் உணரப் பெறுவதை உலகில் காணலாம். நாமத்தின் ஒரு பகுதியான நாமைகதேசமும் நாமத்தின் பொருளேக் குறிக்கும். ககாரரூபா கல்யாணீ முதலிய இருபது நாமங்கள் பஞ்சதியின் முதலக்ஷரமான ககாரத்தின் விளக்கம். அப்போது ககாரவடிவினள், மங்களமானவள் என்ற பொருளும் ககாரத்தினுடையதே. அவ்வாறு ககாரத்திற்கு நாமறிந்த கோசத்திலோ இலக்கணப்படியோ அவ்வாறு பொருள் கிடையாது.*

*பொதுவாகப் பெயர்கள் இருவகை, இடுகுறி, காரணப் பெயர் என. இடுகுறிப் பெயரைப் பகுதி விகுதியாகப் பிரித்துப் பொருள் காணமுடியாது. காரணப்*

பெயரை அவ்வாறு பிரித்துப் பொருள் காணலாம். இடு குறிப்பெயரில், இச்சொல்லுக்கு இப்பொருள் என கோசம் காண்பிக்கும். காரணப் பெயரை இலக்கணம் விளக்கும். திரிசதியின் நாமங்களின் பொருள் ககாரம் முதலிய அக்ஷரங்களின் பொருள் எனக் கொள்ள கோசமோ இலக்கணமோ உதவாது. ஆனுல் திரிசதியில் தேவியின் நாமங்களை ககாரம் முதலிய அக்ஷரத் தொடர்புள்ளதாக அமைத்ததைக் காரணம் காட்டி, கல்யாணீ முதலியதன் பொருள் 'க' முதலான பீஜாக்ஷரத்தின் பொருள் என்று கற்பிக்கிறேம். வேறு வழியில்லாமல் அர்த்தாபத்தி ந்யாயத்தால் இதனை ஏற்க நேர்கிறது. ராமன் நன்கு கொழுத்திருக்கிறுன். ஆனுல் அவன் பகலில் சாப்பிடுவதில்லை என்ருல் பட்டினிக்கும், புஷ்டிக்கும் தொடர்பின்மை காரணத்தால் இரவில் நன்கு சாப்பிடுகிறுன் எனக் கொள்வதே அர்த்தாபத்தி நியாயம்.

கல்யாணீ - மங்கள வடிவினள், இனிது பேசுபவள் என்பது நேரிடைப் பொருள். கோசமும், இலக்கணமும் அனுமதிக்கும் பொருள். அது ககாரத்தின் பொருள் எனக் கொள்வது ஒரு நாமத்தின் பகுதியைச் சொன்னுலோ முழு நாமத்தையும் உணரலாம் (नामैकदेशे नामग्रहणं) என்ற நியாயப்படி 'க' என்ருல் 'கல்யாணீ' எனக் கொண்டு மங்களமானவள். இனிது பேசுபவள் எனப் பொருள் கொள்ளலாம். क ए முதலான பீஜாக்ஷரங்களும் कल्याणी एकाक्षरी முதலான நாமங்களும் ஸ்ரீமாதாவையே குறிப்பிடு கின்றன. ஆக சப்தார்த்தம் பஞ்சதசீக்கும் திரிசதீ நாமங்களுக்கும் ஒன்றே. (நாமைகதேசே நாமக்ரஹணம் என்ற நியாயத்தின் உதாஹரணம் - பீமன் - பீமஸேனன், பாமா - ஸத்யபாமா, கிட்டு - கிருஷ்ணன், விச்சு - விச்வ நாதன்). ஆசார்ய சங்கர பகவத் பாதர்கள் ஸௌந்தர்யலஹரியில் शिव: शक्ति: काम: என்ற ச்லோகத்தில் भजन्ते वर्णास्ते तव जननि नामावयवताम् । உன் மந்திரத்திலுள்ள

ஒவ்வொரு எழுத்தும் உன் நாமத்தின் அவயவமாகும் நிலையைத் தானே அடைகின்றன என்கிறார்.

கோசத்தில் ககாரத்தை முதல் எழுத்தாகக் கொண்ட பெயர்கள் எண்ணற்றவை. பஞ்சதசியின் ககாரத்திற்கு அத்தனை பொருளையும் கொள்வது ஏற்றதல்ல. இந்த பத்தொன்பது - இருபது கொண்டதாகக் கொள்வதே ஏற்கத்தக்கது எனவும் கொள்ளலாம். ककार रूपा என்ற முதல் நாமம். ககாரவடிவினுள்ளவள் என்று தொடங்கி பத்தொன்பது நாமங்களில் ககாரத்தின் பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. (111-112)

एतेषु च विंशतिसंख्याकेष्वर्थेषु ककारस्य ककाररूपेत्यर्थवर्णनदशायामेकारस्य एकाररूपेति, ईकारस्य ईकाररूपिणीत्येवार्थो वर्णनीय इति न नियमः, ककाररूपैकाक्षरी, ईप्सितार्थप्रदायिनीत्यप्यर्थस्य सुवचत्वात् । एवं चात्र पञ्चदशाक्षराणि विलिख्य प्रत्यक्षरशिरसि विंशत्यङ्कान् दत्त्वा परस्परं हनने चरमाक्षरे या संख्या निष्पद्यते तामेवाह—

तिथिमितबिन्दुगणोत्तरगजरसगिरिदस्ररामसंख्याकाः ।
अर्था भवन्ति योगान्नाम्नो नामैकदेशस्य ॥ ११३ ॥

नाम्नो नामार्थेषु तृतीयपक्षस्यैकस्य नामैकदेशार्थस्य एकोनविंशतिविधस्य च योगादुक्तरीत्या गुणनात् तिथिभिः पञ्चदशसंख्यया मितः संमितो यो बिन्दुगणस्तस्योत्तरे ये गजादयः, गजा अष्टौ, रसाः षट्, गिरयः सप्त, दस्रौ द्वौ, रामास्त्रयः । 'अङ्कानां वामतो गतिः' इति न्यायादादौ पञ्चदश बिन्दून् विलिख्य तद्वामे गजादीन् विलिखेत्, वामगतौ वामभागस्यैवोत्तरत्वात् । अथ वा, बिन्दुगण उत्तरो येभ्यस्ते गजादय इति विग्रहः । गजादीन् वामगत्या विलिख्य जातस्याङ्कसमूहस्योत्तरत्र दक्षिणगत्यैव बिन्दवो लेख्या

इत्यर्थे फलिते न विवादः । एवं च शतत्रयोत्तरसप्तविंशति-संख्याकपरार्धानि षण्मध्यान्यष्टान्त्यानि च त्रिशत्युक्तार्थभेदा भवन्ति । अङ्कतोऽपि ३२,७६८,०००,०००,०००,०००,००० । एतदङ्कज्ञानप्रकारस्तु 'चरमाङ्कमारभ्य पूर्वपूर्वाङ्कदशदशगुणिता उत्तरोत्तराङ्काः' इति परिभाषया । तन्नियमश्च लीलावत्याम्— 'एकदशशतसहस्रायुतलक्षप्रयुतकोटयः क्रमशः । अर्बुदमब्दं खर्वनिखर्वमहापद्मशङ्कवस्तस्मात् ॥ जलधिश्चान्त्यं मध्यं परार्धमिति दशगुणोत्तरं संज्ञाः ॥' इति । एतदग्रेऽप्यङ्कविस्तरस्तु च्छन्दःकौस्तुभे अष्टमे अध्याये प्रपञ्चितो अस्माभिः ॥ ११३ ॥

*இருபது வெவ்வேறு அர்த்தம் கொண்ட நாமங்கள் பஞ்சதசியின் பதினைந்து அக்ஷரங்களில் ஒவ்வொரு எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்டுள்ளன. அக்ஷரத்தையே வடிவமாகக் கொண்டவளாக* ककार रूपा, एकार रूपा, ईकार रूपा लकार रूपा, ह्रींकार रूपा, हकार रूपा, सकार रूपा *என்ற ஏழு நாமங்கள் குறிப்பிடுகின்றன. அக்ஷரத்தின் பொருளாக, அக்ஷரத்தைத் தன் பெயராகக் கொண்டுள்ளவளாக* ककारार्था, हकारार्था, लकाराख्या, ह्रींकारिणी, सकाराख्या, ककारिणी, लकारिणी, ह्रीं कारमूर्तिः *என்ற எட்டு நாமங்கள் குறிப்பிடுகின்றன. ஒவ்வொரு எழுத்தையும் முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்களின் பொருள் கூறும் போது ககார உருவினள் என்றும் ஏகார உருவினள் என்று கூறும் போதும் அதது மட்டுமே பொருளாகக் கொள்ளாமல் ககார உருவினளான ஏகாக்ஷரீ, ககார உருவினளான ஈப்ஸிதார்த்த ப்ரதாயினீ (விரும்பிய பொருளேத் தருபவள்) என்றும் பொருள் கொள்ள முடியும். ககார ரூபையான தேவியிடம் மற்ற சிறப்புப் பெயர்களால் குறிப்பிடப் பெறும் அனைத்துப் பொருளும் பொருந்துமே. அத்தனையும் ககாரரூபையின் சிறப்பெனில் ககாரத்தின் சிறப்பு தானே. எனவே 20 நாமங்களை எழுதி ஒவ்வொன்றின் தலையில் 15*

என்று எழுதிப் பெருக்கினல் $20^{15}$ முடிவில் எந்த எண் தேறுகிறதோ அத்தனை பொருள் ஒவ்வொரு நாமத்திற்கும் உண்டெனக் கூறலாம்.

நாமத்தையும் நாமைகதேசமான क.ए.ई முதலான முதல் எழுத்தையும் இணைப்பதால் திதி (15) எண்ணுள்ள பிந்துக்களை மேலே கொண்ட கஜம் (8) ரஸம் (6) குலாசலம் (7) அச்வினீ தேவர் (2) ராமன் (3) இதனை வலத்திலிருந்து இடமாக எழுத (अङ्कानां वामतो गतिः) 32768க்கு மேல் 15 பூஜ்யங்கள் கொண்ட எண்ணிக்கையுள்ள பொருள்கள் கூறலாம். (32,768,000,000,000,000,000) எழுத்தால் எழுத, ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், அயுதம், லக்ஷம், ப்ரயுதம், கோடி என்ற 8 வரிசைக்குமேல், அர்புதம், அப்தம் கர்வம், நிகர்வம், மஹாபத்மம், சங்கம், ஜலதி, அந்தியம் மத்த்யம், பரார்த்தம் என 10 வரிசை. ஆக 327 பரார்த்தங்கள், 6 மத்த்யங்கள், 8-அந்த்யங்கள் கொண்ட எண்ணுள்ளவை திரிசதியின் நாமப் பொருள்கள். ''பரார்த்தத்திற்கு மேலுள்ள எண் வரிசைகள் எமது சந்தःகௌஸ்துபத்தில் விளக்கப்பட்டுள்ளன'' என்கிறுர் பாஸ்கரராயர். (113)

இனி சாக்தார்த்தம் பற்றிக் கூறுகிறுர்.

अथ शाक्तार्थो द्विविधः अवयवार्थः शक्तिसमूहार्थश्चेति । तत्रावयवार्थो नाम देव्या अवयवानां वर्णनम् । तदाह—

वाक्कामशक्तिकूटैरवयवशो विग्रहो मातुः ।
प्रतिपाद्योऽत्राकण्ठादा मध्यादा च पादाग्रात् ॥ ११४ ॥

अत्र विद्यायां वाक्कूटेन, आ कण्ठात् कण्ठमभिव्याप्य, अर्थात् किरीटमारभ्यावयवशो विग्रहः प्रतिपाद्यः । कामराजकूटेन कण्ठाधः कटिपर्यन्तविग्रहः । शक्तिकूटेन कट्यधः पादाग्रान्तो देहः प्रतिपाद्य इत्यर्थः । अत एव वाच्यवाचकयोरभेदविवक्षयोक्तं सहस्रनामसु—'श्रीमद्वाग्भवकूटैकस्वरूपमुखपङ्कजा । कण्ठाधःकटिपर्यन्तमध्य-

कूटस्वरूपिणी ॥ शक्तिकूटैकतापन्नकट्यधोभागधारिणी । मूलमन्त्रात्मिका मूलकूटत्रयकलेबरा ॥' इति ॥ ११४ ॥

*சாக்தார்த்தம் இருவகை, அவயவார்த்தம், சக்தி ஸமூஹார்த்தம் என. அவயவார்த்தம் என்பது பஞ்சதசி எழுத்துக்கள் தேவியின் அவயவ அமைப்பைக் குறிப்பிடுவதாகக் கொள்வது. திருமேனியின் அழகைக் குறிப்பிடுகையில் கழுத்துவரை வாக்பவ கூடமும், கழுத்திலிருந்து இடுப்புவரை காமகூடமும், இடுப்பு முதல் பாதம் வரை சக்தி கூடமும் அமைந்துள்ளன என்பர். அதையே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமமும், ஸ்ரீமத் வாக்பவ- என்று தொடங்கி இரு ச்லோகங்களில் வர்ணிக்கிறது. தேவி வாக்பவ கூடமே உருவான முகத்தாமரை கொண்டவள், கழுத்திலிருந்து இடுப்புவரை உருவான நடுக் கூடத்தைக் கொண்டவள். சக்தி கூடமாக மாறிய இடுப்பின் கீழ் பகுதியைக் கொண்டவள், மூல மந்திரமேயானவள், மூல மந்திரத்தின் மூன்று கூடங்களாக உருவானவள் என. (114)*

*தேவியே கூடவடிவினள், கூடஸமஷ்டி வடிவினளும் கூட, பஞ்சதசியின் நேரிடைப் பொருளாக வியஷ்டியும் ஸமஷ்டியுமானவள். இதுவே சாக்தத் வார்த்தம்.* சக்தி ஸமூஹார்த்தம் *பற்றி விளக்குகிறார்.*

शक्तिसमूहार्थमाह—

वेधोभारत्यौ माधवलक्ष्म्यौ रुद्रपार्वत्यौ ।
रेफान्तवर्णषट्कस्यार्थान् क्रमशो विजानीयात् ॥ ११५ ॥

अत्र हकाररेफयोर्विभज्य गणनम्, दुर्वासादिविद्याविशेषेषु तथैव पाठात् ॥ ११५ ॥

*ப்ரஹ்மாவும், ஸரஸ்வதியும்; விஷ்ணுவும், லக்ஷ்மியும், ருத்ரனும், பார்வதியும் என அறுவரும் (1)* क ए

ई ल ह् र् என்ற முதல் கூடத்தின் ஆறு எழுத்துக்களின் பொருள். துர்வாஸ வித்யை முதலிய வற்றில் இவ்வாறு பாடம் காணப் பெறுகிறது. (115)

ता एताः सकला अपि कामकला एव न ततोऽन्याः ।
सामानाधिकरण्यादीकारेणायमर्थोऽस्य ॥ ११६ ॥

एता ब्रह्मादयः षट् । यद्यपि ब्रह्मादीनां पुंस्त्वेन भारत्यादीनां स्त्रीत्वेन तद्वाचकशब्दे 'पुमान् स्त्रिया' इत्येकशेषतः 'एते' इत्येव भाव्यम्ः तथापि ब्रह्मविष्णुमहेश्वराणां स्त्रीरूपताया भावार्थप्रकरणे कथितायाः स्मरणायैवमुक्तिः । सामानाधिकरण्यादेकविभक्तिकत्वरूपात् । प्रत्यक्षरं विद्यमानानां सुपां तु लोपः । वाक्ये संहिताया अविवक्षणादीकारेण सह न सन्धिः ॥ ११६ ॥

மேலே கூறப்பட்ட பிரும்மா முதலான அறுவரும் காமகலா (ई) வானவரே. ஆண்பால், பெண்பால் என்ற வேற்றுமையில்லை. ஒரே விபக்தியிலமைந்தமையால் ஒத்த நிலையிலுள்ளவரே. ஒவ்வொரு எழுத்தின் இடையே விபக்தி வசன ப்ரத்யயங்கள் மறைந்துள்ளனவாதலால் क ए ई என்பவற்றிற்கிடையே ஸந்தியமைப்புமில்லை. (116)

अयमेव कूटयोरपि परयोरर्थः परं तु तार्तीये ।
द्वैतीयीकद्वैतीयीकहकारः सकारतः पूर्वः ॥ ११७ ॥

अन्वयितव्योऽक्षरशः शक्तेः शाक्तैर्विभाव्यत्वात् ।
वामेच्छादिकशक्तिमयत्वोक्तेरेष शाक्तनार्थः ॥ ११८ ॥

प्रथमकूटस्य यावानर्थस्तावानेव द्वितीयतृतीयकूटयोः । द्वितीयकूटे मध्यमहकारः परं तृतीयकूटस्य प्रथमभागेऽन्वययोग्यः । तस्य तत्र चतुर्थत्वेऽपि सजातीययोर्मध्ये द्वितीयत्वात्तथोक्तिः । तेन तयोरपि कूटयोः प्रातिस्विकं रेफान्ता वर्णाः षडेव संपद्यन्त इति

तेषामुक्तरीत्यैवार्थवर्णनम् । अत्र प्रत्यक्षरमेकैकत्र शक्तिः । तेन शक्तानामक्षराणामर्थः शाक्तार्थः । स्वार्थे अण् । अथवा शाक्ताना-मुपासकानामर्थः प्रयोजनम्, अथ वा शक्तिसमूहः प्रतिपाद्यत इति त्रेधा निर्वचनम् । भावार्थेन सह पौनरुक्त्यपरिहारस्तु पूर्वमेव कृतः ॥ ११७, ११८ ॥

*பிரும்மா முதலிய அறுவரும் இரண்டாவது - மூன்றுவது கூடங்களிலுள்ள ஆறு எழுத்துக்களின் பொருளாவர். இரண்டாவது கூடத்திலுள்ள இரண்டாவது ஹகாரம் மூன்றுவது கூடத்தின் முதல் எழுத்தாகி ஸகாரம் முதலியவை இதனைத் தொடர ஆறு எழுத்துக்களாகும். (2. ह स क (ह) ल ह्र् (3) (ह) स क ल ह्र् என) இந்த அக்ஷரங்களுக்கு நேரிடையாக பிரும்மா ஸரஸ்வதி என்றவாறு பொருள். (சக்தியால் அர்த்தம் - சாக்தார்த்தம்). சக்தி உபாஸகர்கள் சாக்தர்கள். அவர்கள் கொள்ளும் பொருள் என்பதாலும் சாக்தார்த்தம். அல்லது பிரும்மா முதலியவை ஒவ்வொன்றும் சக்திகள். அவற்றின் தொகுப்பு - சக்தி ஸமூஹம் - என்ற பொருளும் கூறலாம். பாவார்த்தமும் சாக்தார்த்தமும் வேறுபடுவது முன்னரே கூறப் பட்டுள்ளது. (117-118)*

*இனி ஸாமரஸ்யார்த்தம் பற்றி விளக்குகிறுர் —*

अथ सामरस्यार्थमाह—

कहयोर्लसयोरर्थौ शिवशक्ती शुद्धयोरचोः शक्तिः ।
उभयोः समरसभावो हृल्लेखायाः परं ब्रह्म ॥ ११९ ॥

ब्रह्मैव शिवः शक्तिश्चेति प्रत्येककूटार्थः ।
शिवशक्तिसामरस्याद्विद्याया एष सामरस्यार्थः ॥ १२० ॥

कादिविद्यायां हि ककारास्त्रयो हकारौ द्वौ । तेषां शिव एवार्थः । एवं लकारास्त्रयः सकारौ द्वौ, तेषां शक्तिः । अत एव मन्मथबीजे

ककारलकारयोर्योगः, पराप्रासादे हकारसकारयोः । शुद्धयोर-चोर्द्वितीयतृतीययोः शक्तिः । लज्जाबीजस्योभयसामरस्यात्मकं परं ब्रह्मार्थः । व्योमाग्नितुरीयस्वरबिन्दुभिः क्रमेण प्रकाशग्रास-सामरस्य-तादात्म्यापन्नेत्यर्थस्य परब्रह्मैक्यरूपस्य षट्चत्वारिंशदुत्तरशततम-श्लोकव्याख्यायां स्पष्टीकरिष्यमाणत्वात् । शिवः शक्तिश्चेत्येतदुभयं ब्रह्मैवेति प्रतिकूटमर्थः । तदुक्तं त्रिशत्याम्— 'कत्रयं हद्वयं चैव शैवो भागः प्रकीर्तितः । शेषाणि शक्त्यक्षराणि ह्रींकार उभयात्मकः ॥ इति ॥ ११९, १२० ॥

*உடலால் பிரிந்திருந்தாலும் உள்ளத்தால் ஒன்றியிருப்பது ஸமரஸம். ஒரே சுவை கொண்ட நிலை. எவ்வகையிலும் ஏற்றத்தாழ்வற்ற நிலை, அதனையே தன் சிறந்த இயல்பாகக் கொண்ட நிலை, இருப்பிடத்தில், பெயரில், நிறத்தில், தொழிலில், செயல் முறையில் என ஐந்திலும் ஒற்றுமை கொண்ட சிவ சக்தி ஸாமரஸ்யம். அதனை இந்த பஞ்சதசி காட்டுகிறது. காதிவித்யையில் ககாரம் மூன்று, ஹகாரம் இரண்டு. க-ஹ எழுத்துக்கள் சிவனைக் குறிக்கும். லகாரம் மூன்றும், ஸகாரம் இரண்டும் சக்தியைக் குறிப்பவை. மன்மதபீஜமான 'க்லீம்'ல் இரண்டும் கூடுகின்றன. பராப்ராஸாத மந்திரமான ஹ்ஸௌ:வும் இரண்டும் கூடுகின்றன. 'ஹ்ரீம்'வும் இந்த சிவ சக்தி ஸமரஸ முண்டு. பரம்பொருள் பரப்ரஹ்மம் என்பதே இந்த ஸமரஸநிலை.*

*ஹ் ர் ஈ பிந்து என்ற நான்கிற்கும் ப்ரகாசம் (ஒளிர்வது) அக்னி (விழுங்குவது) ஸாமரஸ்யம் (இரண்டறக் கலப்பது) இரண்டாக நில்லாமல் ஒன்றி ஒன்றேயாதல் என்று பொருள் என 146வது சுலோக உரையில் விளக்க உள்ளது. ஆக சிவன் சக்தி என இரண்டும் ஒன்றே. அதுவே பரம் பொருள் எனக் கொள்ள வேண்டும். திரிசதியிலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளது. ''ககாரம் மூன்றும், ஹகாரம் இரண்டும் சிவனின் அம்சம். ஹ்ரீம் தவிர மற்றவை*

*சக்தியின் அம்சம். ஹ்ரீங்காரம் இரண்டும் இணைந்தது.''* *(119-120)*

*இனி* ஸமஸ்தார்த்தம் *பற்றி விளக்குகிறார்.*

अथ समस्तार्थमाह—

कन दीप्ताविति धातोः प्रकाशकत्वं ककारार्थः ।
अध्ययनार्थकतेङः स्यादेकारस्तदीयकरणार्थः ॥ १२१ ॥

वर्णद्वयमेलनतः प्रकाशिका बुद्धिरित्यर्थः ।
ई व्याप्ताविति धातोस्तस्या व्याप्तिस्तृतीयवर्णार्थः ॥ १२२ ॥

तस्य लहर्याधिक्यं तन्निर्माणं मकारार्थः ।

कन्यते प्रकाश्यते ऽनेनेति कं प्रकाशकम् । बाहुलको नलोपः । औणादिकः 'अमन्ताड्डः' इति डप्रत्ययो वा । 'इङ् अध्ययने' इति धातुरधिपूर्वोऽपि प्रकृत आर्षत्वात्तद्विमोकः । अत एवेङः क्विपि कृते, कित्त्वेऽपि गुणः । विज्वा कार्यः । अधीयते अनेनेत्यध्ययनकरणं बुद्धिः । अनयोः कर्मवारयः । असन्धिरार्षः । तत ईकारेण षष्ठीतत्पुरुषः । लहरीत्यत्राकारलोपः । 'माङ् माने' इति धातोः क्विपि तल्लोपे 'प्रातिपदिकाद्धात्वर्थे बहुलमिष्ठवच्च' इति णिचि 'णेरनिटि' इति टिलोपे च म् इति सिद्ध्यति । प्रकाशकत्वं सूक्ष्मत्वम् । तथा च सूक्ष्ममतिव्यापनाधिक्यं प्रथमकूटार्थः ॥ १२१, १२२ ॥

कन *என்ற வினைச் சொல் விளக்குவது - ஒளியால் துலக்குவது எனப் பொருள்படும்.* अधि इ *என்ற உபஸர்கத்துடனுள்ள வினைச் சொல்லிற்கு கற்க உதவுகிற அறிவு - புத்தி என்று பொருள். இரண்டையும்* (क ए) *இணைக்க, துலக்குகிற அறிவு என்றாகும்.* ई *என்ற வினைச் சொல் பரவி நிற்க என்று பொருளுள்ளது. ஷஷ்டீ தத்புருஷ ஸமாஸத்தால் துலக்குகின்ற அறிவின் பரவுதல் என* क ए ई*க்குப் பொருள்.* लह्री*யில் ஹகாரத்தின் மீதுள்ள அகாரம்*

மறைந்துள்ளது. लहरी மிகுதி (அதிக நிலே) என்று பொருள்படும். பிந்து माङ् என்ற வினைச் சொல்லின் திரிபு. தன்னுள் அடக்கிக் கொண்டது என்று பொருள்படும். ஆக முதல் கூடத்தின் மொத்தப் பொருள். நன்கு துலக்குகிற ஸூக்ஷ்ம அறிவின் பரவலின் ஆதிக்கம் என்று தேறும்.

(121-122)

हन हिंसायामिति हं शौर्यं प्रत्यर्थिहननकरणत्वात् ॥ १२३ ॥

सं भोगसाधनं धनमुपभोगार्थात् स्यतेः सुनोतेर्वा ।
कमु कान्ताविति धातोरिच्छाविषयोऽङ्गनादिः कम् ॥ १२४ ॥

एषां गमनं प्रापणमोहाङ्-गत्यर्थधातुजन्यं हम् ।
तस्यातिशयो लहरी तत्र श्लिष्टः सवर्णदीर्घेण ॥ १२५ ॥

ईकारस्तस्यार्थः कीर्तिः सर्वासु दिक्षु दीप्तत्वात् ।
ई दीप्ताविति धातोर्निर्मितिरनयोर्मकारार्थः ॥ १२६ ॥

हन्यते अनेनेति हं शौर्यम् । 'अनुदात्तोपदेश-वनतितनोत्यादीनामनुनासिकलोपो झलिक्ङिति' इति नलोपः । 'षो अन्तकर्मणि' इति 'षुञ् अभिषवे' इति वा धातोः करणार्थे ङप्रत्यये सम् इति रूपम् । सीयत इति सूयत इति वा सं द्रव्यम् । काम्यत इति कं स्रक्चन्दनवनितादिकम् । हसकानां द्वन्द्वः । ततो हकारेण प्राप्त्यर्थकेन षष्ठीतत्पुरुषः । ततो लहरीपदेन तत्पुरुषः । तत ईकारेण कीर्त्यर्थकेन द्वन्द्वः । ततो मकारेण तत्पुरुषः । तथा च शौर्यधनस्त्रीप्राप्त्यतिशयस्य कीर्तेश्च निर्माणं द्वितीयकूटार्थः ॥ १२३-१२६ ॥

हन என்ற வினைச் சொல்லில் வந்த हकारம் துன்புறுத்தி அடக்குகின்ற சூரத் தன்மையைக் குறிக்கும். सो सूञ् என்ற வினைச் சொற்களிலிருந்து வந்த स காரம், போகத்திற்கு உதவுகிற செல்வத்தைக் குறிக்கும். कमु என்ற வினைச்

சொல்லிலிருந்து வந்த क காரம் விரும்புதற்குரிய போகப் பொருட்களைக் குறிக்கும். हा என்ற வினைச் சொல்லிலிருந்து வந்த ह காரம் அடைவது என்ற பொருளைக் குறிக்கும். ஆக சூரத்தன்மை, செல்வம், போகப் பொருள் இவற்றின் लहरी சிறப்பு ई என்பது புகழ். பிந்து இத்தனையையும் படைப்பது. ஆக சூரத்தன்மை, செல்வம், போகப் பொருள் இவற்றின் சிறப்பையம் புகழையும் படைப்பது என்பது இரண்டாவது கூடத்தின் பொருளாகும். *(123-126)*

तदेव तावद्वदति—

वाग्भवकूटस्यार्थः सूक्ष्ममतिव्यापनाधिक्यम् ।
शौर्यधनस्त्रीयशसामाधिक्यं कामराजार्थः ॥ १२७ ॥

स्पष्टम् ॥ १२७ ॥

வாக்பவ கூடத்தின் பொருள் நுண்ணிய அறிவின் பரவுதலால் சிறப்பு பெறுவது. காமராஜ கூடத்தின் பொருள் சௌர்யமும், செல்வமும் போகப் பொருளும், புகழும் சிறப்பாகப் பெறுவது. *(127)*

एते सम्यक् कलयति सकला हरतेर्हकारः स्यात् ।
निखिलजगत्संहर्त्रीत्यर्थस्तस्यापि वर्णस्य ॥ १२८ ॥

ईकारः प्रश्लिष्टः सृष्टिस्थितिरूपदीप्तिकर्त्रर्थः ।
यद्वा हृदि खे दहरे प्रकाशते तेन माता ह्रीः ॥ १२९

सकलान्तेन पदेन ह्रीकारे कर्मधारयः कार्यः ।
तस्य विशेष्यो मः स्यान्नादार्थः संविदर्थो वा ॥ १३० ॥

कूटद्वयस्य द्वन्द्वः । एते निर्माणे सम्यक् कलयतीति सकला । मकारलोपः । हरतीति हृ । 'ई दीप्तौ' इति धातोः ई दीप्तिः ।

दीप्तिर्नाम सृष्टिः स्थितिश्च। हकारेकारयोः कर्मधारये यणि कृते ह्रीः सृष्ट्यादिपञ्चकृत्यकर्त्रीत्युपलक्षणविधयार्थः । यद्वा, हरति सर्वं विषयीकरोतीति हृ। क्विप्। आगमशास्त्रस्यानित्यत्वात् प्रकृते न तुक् । तच्च दहराकाशम् । तत्र प्रकाशत इति ह्रीः । ह्रीकारान्तपदस्य मकारेण कर्मधारयः । यद्यपि कूटत्रयेऽपि मकारो नास्त्येव, अनुस्वारस्यैव तन्त्रेषूद्धृतत्वात्; तथापि मकारस्यैव लक्षणवशादनुस्वार इति कूटद्वये सुवचम्। चरमकूटे त्वनुस्वार एव विशेष्योऽस्तु । ततश्च, बुद्धिशौर्यधनस्त्रीयशसामाधिक्यकर्तृ निखिलजगत्सृष्ट्यादिकर्तृ दहराकाशवर्ति नादरूपं चिद्रूपं ब्रह्मेति मन्त्रार्थः सिद्धः । अयं चार्थो ब्रह्मसूत्राणां शक्तिपरत्वेन योजनां प्रदर्शयद्भिस्तत्रभवद्भिः भाष्यकारैर्विस्तरेण निरूपित इह संक्षिप्योक्तः। तत्र कचित् कचित् व्याकरणविरोधः प्रतीयते। स च मन्त्रस्य मन्त्रार्थस्य चर्षिप्रोक्तत्वेन प्रामाणिकत्वे सिद्धे 'प्रयोगशरणा वैयाकरणाः' इत्युक्तेरेतदनुसारेणैव व्याकरणलक्षणानां कल्प्यत्वात् परिहार्यः ॥ १२८ - १३० ॥

முதல் இரு கூடத்தின் பொருளான, உண்மை துலக்குகிற நுட்ப அறிவு சிறப்புறப் பெறுவதும், சூரத்தன்மை, செல்வம், போகப் பொருள் புகழ் இவற்றைச் சிறப்புறப் பெறுவதும் स क ल ஆகும். हृ என்ற வினைச் சொல் அழித்தல் என்ற பொருள் பெறும். ह् र् படைத்த உலகை அழிக்கின்ற ஆற்றல். இவற்றின் ई- ஒளிரச் செய்கிற சக்தி. ह्रीं என்று ஸ்ரீமாதாவின் பெயர். 'ஹ்ரு' என்ற இதய வெளியில் துலங்குபவளானதாலும் அவள் ह्रीं. ஸ்ருஷ்டி ஸ்திதி, ஸம்ஹாரம், என்ற மூன்றையும் செய்பவளும் இதயத்தில் துலங்குபவளுமான தேவி. மேலுள்ள பிந்து சுத்த சைதன்ய நிலை. ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் திரோதானம் அனுக்ரஹம் என்ற ஐந்தையும் செய்கிற பரம் பொருள்.

மூன்று கூடங்களிலும் மகாரம் அனுஸ்வாரமாகவே ஒலிக்கிறது. மகாரத்தின் முழு உருவமல்ல.

இதனுல் புத்தி சூரத்தன்மை, செல்வம், போகப் பொருள், புகழ் இவற்றைச் சிறந்ததாக அருள்வதும், உலகைப் படைத்து மறைத்து அருள்வதும், இதய குகையில் ஒளிர்வதும், நாதரூபமாகவும், சித்ரூபமாகவும் உணரப் பெறுகிற பரம் பொருள் என்பதே பஞ்சதசியின் மொத்தப் பொருள். இலக்கண சுத்தமாக இங்கு சொல்லமைப்பு இல்லை. எனினும் மந்திரத்திற்குப் பொருள் இது என ருஷிகளை ஒட்டிப் பொருள் கொள்வதே இங்கு உசிதமானது. இங்கு இலக்கண முரண்பாடுகளை நேராக்குகிற முறை பற்றி விளக்குகிறுர். *(128-130)*

तत्प्रकारमेव प्रदर्शयति—

धातोर्बह्वर्थत्वाद् बहुलग्रहणात् पृषोदरादित्वात् ।
आकृतिगणपाठेन स्वेच्छानुगुणादुणादिकल्पनतः ॥ १३१ ॥

छन्दसि सर्वविधीनां वैकल्पिकतावशादमुष्य मनोः ।
सिद्धैः कथितेऽर्थेऽस्मिन् वैयाकरणानुशासनानुमतिः॥१३२॥

'कुर्दखुर्दगुर्दगुद क्रीडायामेव' इत्येवकारेण 'तनूकरणे तक्षः' इत्यत्रार्थनिर्देशबलाच्च सत्ताद्यर्थनिर्देशस्योपलक्षणमात्रत्वेन धातवः अनेकार्थाः । तेन स्यतेरन्तकर्मवाचकत्वेऽप्युपभोगार्थकत्वमविरुद्धम् । अत एव चेङोऽधिपूर्वत्वात् केवलप्रयोगासंभवेऽपि 'इटकिटकटी गतौ' इत्यत्र प्रश्लिष्ट ईकार एवैतदर्थको भविष्यति, गत्यर्थानां सर्वेषामपि ज्ञानार्थकत्वात् । बहुलेति । 'क्वचित् प्रवृत्तिः क्वचिदप्रवृत्तिः क्वचिद् विभाषा क्वचिदन्य एव । विधेर्विधानं बहुधा समीक्ष्य चतुर्विधं बाहुलकं वदन्ति ॥' इति बहुलपदार्थः । तेन लह्वीत्यत्राकारलोपः सिद्धः । ('रण्डः' इत्यादि सिद्ध्यर्थमडितोऽपि ञमन्तात्डस्य डित्त्वमपि

सिद्धम् । गत्यन्तरमप्याह — पृषोदरादित्वादिति । 'पृषोदरादीनि यथोपदिष्टम्' पृषोदरादयः शब्दा यथैव शिष्टैः प्रयुज्यन्ते तथैव साधवः, न तत्र लक्षणान्तरं मृग्यमित्यर्थः । न चैवं सति स्थलान्तरेऽपि लह्वीति प्रयोगापत्तिः पृषोदरशब्दवदिति वाच्यम्, अत्रैव साधुरिति नियमस्वीकारात् । अत एव 'गूढोऽऽत्मा' इति न स्थलान्तरे प्रयुज्यते । अत एव च विष्णुसहस्रनामभाष्ये 'न्यग्रोधोदुम्बरोऽश्वत्थः' इत्यत्र पृषोदरादित्वात् सन्धिरित्युक्तं शङ्कर भगवत्पादैः । गणपाठाभावे त्वाह — आकृतीति । षुन्धातोर्डप्रत्ययादर्शनादाह — स्वेच्छेति । 'संज्ञासु धातुरूपाणि प्रत्ययाश्च ततः परे । कार्याद्विद्यादनूबन्धमेतच्छास्त्रमुपादिषु ॥' इति वचनाट्टिलोपार्थं डित्त्वकल्पनेत्यर्थः । छान्दसत्वसमाधानं तु निरङ्कुशमित्याह—छन्दसीति ॥ १३१, १३२ ॥

இலக்கண முரண்பாட்டைப் பெரிதுபடுத்துவதற் கில்லை. (1) ஒரே வினைச் சொல்லிற்குப் பல பொருள்கள் வழக்கிலுள்ளன. வழக்கு என்பது பொதுக் கட்டுப்பாட்டை மீறக் கூடும். (2) வியாகரண ஸூத்திரங்களில் பெருவாரியாக வழக்கிலுள்ளதை ஏற்பதை बहुलं என்ற சொல்லால் குறிப்பிடுவர். வேத வழக்கில் இது அதிகம் காணப்படும். இலக்கண முறையை மீறியதும் வழக்கில் உள்ளதென்ற நியதியில் ஏற்றுக் கொள்ளப் படுகின்றன. முழுச் சொல்லில் உருவச் சிதைவை ஏற்பதைப் ப்ருஷோதராதி கண அமைப்பு நிரூபிக்கிறது. पृषदुदर என்ற சொல் पृषोदर என வழக்கில் உள்ளது. அது ஏற்கப்படுகிறது. गूढोत्मा (गूढ आत्मा) न्यग्रोधोदुम्बरः (न्यग्रोध उदुम्बरः) என்று உபநிஷத்திலும் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திலுமுள்ளதை ஏற்கின்றனர். கணபாடத்திலில்லாததை ஆக்ருதி கணமாக ஏற்பர். வேத மொழியில் எல்லா நியமங்களும் அனுசரிக்கப்படவும்

அனுசரிக்கப் படாமலுமிருக்கவும், மாறுபடவும் கூடும் என ஏற்கப்பட்டிருக்கிறது. மந்திரம் என்பதும் அதன் பொருளும் அந்த அந்த மந்திரத்தில் ஸித்திபெற்ற பெரியோர்களால் தெய்வ அருளால் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. அவர்கள் கண்ட வழியிலேயே இலக்கண நியமங்களைப் பொருத்திப் பார்ப்பதே ஏற்றது. *(131-132)*

समस्तार्थपदनिरुक्तिपूर्वकमुपसंहरति—

बहुतरसमासयोगात् समस्तपुरुषार्थसाधनत्वोक्तेः ।
संक्षेपात् सारोक्तेः श्रीविद्यायाः समस्तार्थः ॥ १३३ ॥

समस्तपदस्यार्थ इति वा, समस्ताः सकला अर्थाः पुरुषार्था यस्मिन्निति वा, समस्तः संक्षिप्तोऽर्थ इति वा निरुक्तिः ॥ १३३ ॥

பல வகையில் இணைத்துப் பார்த்துப் பொருள் கூறப்படுவதால் இது ஸமஸ்தார்த்தம். எல்லா புருஷார்த்தங்களையும் பெற உதவுவதாலும் ஸமஸ்தார்த்தம். சுருக்கமாகப் பொருளனைத்தையும் கூறுவதாலும் இது ஸமஸ்தார்த்தம். *(133)*

ஸகுணார்த்தம் பற்றி விளக்குகிறார்.

अथ सगुणार्थमाह—

को विधिरेकारो हरिरकार ईशः स्तवार्थमीडपदम् ।
द्विस्वरमध्यगतस्य डकारस्य ळकार आदेशः ॥ १३४ ॥

तेनर्ग्वेदात्मत्वं सूचितमाद्यस्य कूटस्य ।
क्रमशोऽग्रिमकूटयुगे तेन यजुःसामता सिद्धा ॥ १३५ ॥

ह्रीमिति नाम विशेष्यं नपुंसकं ब्रह्मलक्षकत्वेन ।
विधिहरिगिरिशैरीड्यं ब्रह्मेति प्रथमकूटार्थः ॥ १३६ ॥

एकारोत्तरं पूर्वरूपेणाकारः प्रश्लिष्यते । स च शिववाचकः, 'अकारो ब्रह्मविष्णवीशकमठेषु' इति कोशात् । 'कः प्रजापतिरुद्दिष्टः' इति 'एकार उच्यते विष्णुः' इति चैकाक्षरनिघण्टूक्तब्रह्मविष्णुपरौ ककारैकारौ । 'ईड स्तुतौ' इति धातोरचि स्तुत्य इत्यर्थः; एतस्यर्ग्वेदात्मकत्वादज्द्वयमध्यगतस्य डकारस्य स्थाने ळकार आदेशः 'अग्निमीळे पुरोहितम्' इत्यादिवत् । तदुक्तं बह्वृचप्रातिशाख्ये—'द्वयोश्चास्य स्वरयोर्मध्यमेत्य संपद्यते स डकारो ळकारः' इति । इदमेव च ज्ञापकमाद्यकूटस्यर्ग्वेदात्मकत्वे द्वितीयतृतीयकूटयोर्यजुर्वेदसाम-वेदात्मकत्वे च । यद्यपि 'कामो योनिः कमला वज्रपाणिः' इत्यत्र वज्रपाणिशब्देन लकार एवोद्धृतो न ळकारः तथापि लळयोरभेदाभिप्रायेणेदम् । अत एव क्वचित्तन्त्रे त्रिखण्डीगतास्त्रयोऽपि मोहार्णपदेन ळकारा एवोद्धृताः । नपुंसकमिति । अव्ययमित्येव युक्तम्, स्वरादेराकृतिगणत्वात् । अत एव त्रिशत्यामेकोनशततमस्य नाम्नो नमोयोगे चतुर्थ्यां प्राप्तायामपि 'ह्रीं नमः' इत्येव साम्प्रदायिकानां प्रयोगः सङ्गच्छते ॥ १३४ - १३६ ॥

*பிரும்மத்தை ஸகுணம் நிர்குணம் என இரண்டு நிலைகளில் கண்டு உணரலாம். ஸகுண நிலையில் மும்மூர்த்திகள் முதலிய இறக்கங்கள் உண்டு. பஞ்சதசி அந்த ஸகுண நிலையையும் குறிப்பிடுகின்றது. அப்படி விளக்குகையில் क ए (अ) ई ल ह्रीं என்று காணப்படுகிறது. ககாரம் பிரும்மா, ஏகாரம் விஷ்ணு, ஏகாரத்தில் பூர்வரூப ஸந்திமுறையில் மறைந்த அகாரம் சிவன், ஈல - ईड துதிக்க என்ற பொருளுள்ள வினைச் சொல்லாலானது. துதிக்கத் தக்கவர் எனப் பொருள். ईड என்பதில் உள்ள ड காரம் 'ள' என ருக்வேதத்தில் ஒலியமைப்பைப் பெறும். வாக்பவ கூடம் ருக்வேதமே உரு எனக் கூற இதுவும் பிரமாணம். அதனால் இதனை அடுத்து வருகிற காம-சக்தி கூடங்கள். யஜுர்வேதமும் ஸாமவேதமுமாக உருவானவை என்று தேறும். ஹ்ரீம் என்பது பரப்பிரும்மத்தின் லக்ஷகமான*

நபும்ஸக லிங்கத்திலுள்ள விசேஷ்யமான பெயர். இதனுல் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவரால் துதிக்கப் பெற்ற பரப் பிரும்மம் என்று முதல் கூடத்தின் பொருள் தேறும்.

காமோ யோநி: கமலா வஜ்ரபாணி: என்ற த்ரிபுரோபநிஷத்தின் வாக்யப்படி இந்திரனைக் குறிக்கின்ற லகாரமே மந்திராவயவமாகக் கொண்டு பொருள் கூறப்பட்டது. 'ள'காரத்தைக் கொண்டல்ல என்ற ஐயம் எழும். ல-ள விடையே வேற்றுமையில்லை என்பதும், சில தந்திரங்களில் லகாரத்தின் இடத்தில் 'ள'காரம் கொள்ளப்படுகிறது என்பதும் இதற்குக் காரணம். ஹ்ரீம் என்பது நபும்ஸகம் என்பதை விட அவ்யயச் சொல் என்று சொல்வது அதிகம் ஏற்புடையது. திரிசதியில் ह्रीं என்ற நாமத்தை நம: என்பதோடு சேர்க்கும்போது ह्रीं नमः என்றே கூறுவர். நபும்ஸகச் சொல்லானுல் ह्रीमे नमः என்று கூற நேரும். வழக்கில் ह्रीं नमः என்றே கூறுகின்றனர். (134-136)

हसकं तु हसद्वदनं मतं ककारस्य वदनवाचित्वात् ।
यद्वा हस आनन्दः कः सूर्यो हस्तु चन्द्रः स्यात् ॥ १३७ ॥
एतौ लौ नयने यस्य तत्तु कहलं रवीन्दुनेत्रमिति ।
तेन प्रकाशकत्वाच्चिद्रूपत्वं च निगदितं भवति ॥ १३८ ॥
विधिहरिगिरिशेड्यत्वे हेतू एते हसत्वकहलत्वे ।
तेनात्यमितानन्दं चिद्ब्रह्मेति द्वितीयकूटार्थः ॥ १३९ ॥

हसो हास्यम् । अर्शआदित्वान्मत्वर्थीयोऽच् । ततः ककारेण मुखवाचकेन बहुव्रीहिः । हसः को यस्य तदिति विग्रहः । यद्वा हासस्यानन्दजन्यत्वादानन्दे हसपदस्य लक्षणा । कश्च हश्च कहौ, कहौ लौ यस्य तत् कहलम् । 'मुखे सूर्येऽपि कः स्मृतः' 'हः कोपे वरुणे चन्द्रे' 'इन्द्रेऽपि लोचने लः स्यात्' इत्येकाक्षरनिघण्टुः । हसपदकहलपदयोः कर्मधारयः । एतदर्थप्रतिपादकं मूलमाह—हेतू

इति । यतो ह्रीं हसकलहं ततो ह्रीं कएईलमित्यन्वयः ॥ १३७-१३९ ॥

हस क - *சிரிக்கின்ற முகமுள்ள என்று பொருள்.* क- *முகம்.* हस *மலர்கின்ற. ஆனந்த மிகுதியால் மலர்ந்த* क- *ஸூர்யன். அதன் மேலுள்ள* ह- *சந்திரன்.* ल *கண்.* क ह ल *ஸூரியனையும், சந்திரனையும் கண்களாகக் கொண்ட. ஒளியால் துலக்குகின்றதும் பேரறிவுமான* ह्रीं *பரப்பிரும்மம். மும்மூர்த்திகளால் துதிக்கப் பெறுவதற்குக் காரணம் சிரிக்கின்ற முகமும் ஸூர்ய சந்திரர்களாகிய கண்களைக் கொண்டு உலகைத்துலக்குவதும் பேரறிவு வடிவுமானதே* यतः हसकलहं ह्रीं ततः ह्रीं क एईलं *என்று அன்வயம் கொள்ளலாம். (137-139)*

सकलकलाभिः सहितं सकलं ब्रह्म तु तृतीयकूटार्थः ।
इत्थं गुणगणकथनाद्विद्याया एष सगुणार्थः ॥ १४० ॥

अत्र सर्वत्र सुलोपः । स्पष्टमन्यत् ॥ १४० ॥

*மூன்றாவது கூடத்திலுள்ள* सकल- *எல்லா கலைகளுடன் கூடிய* ह्रीं- *பரப்பிரும்மம். என்று பொருள் பெறும். இவ்வாறு அறிவிற்கு உட்படக்கூடிய சிறப்பைக் கூறுவதால் இது ஸகுணார்த்தமாகும். இங்கும் வேற்றுமை விகுதிகள் புலப்படுவதில்லை. (140)*

*இனி* மஹாவாக்யார்த்தம் *பற்றிக் கூறுகிறார். இதுவே கடைசிப் பொருள்.*

चरमोद्दिष्टं महावाक्यार्थमाह—

विधिहरिशिववचना अपि ककार एकारकोऽकारः ।
सृष्टिस्थितिभङ्गात्मकतत्तज्जनकत्वलाक्षणिकाः ॥ १४१ ॥

ईश्वरवाचीकारो वक्ति डकारः सदाशिवं ताभ्याम् ।
लक्षणया तत्र तिरोधानानुग्रहणकृत्यता गदिता ॥ १४२ ॥

ईकारस्य नामैकदेशन्यायेनेश्वरबोधकत्वम् । 'डो महेशः समाख्यातः' इति वचनेऽपि प्रकृते सदाशिव एवानुग्रहकर्ता विवक्षितः । एतेन 'यतो वा इमानि भूतानि जायन्ते' इत्यादिश्रुतावुक्तं ब्रह्मणस्तटस्थलक्षणमुक्तं भवति ॥ १४१, १४२ ॥

*பஞ்சதசியின் முதல் கூடத்திலுள்ள क- பிரும்மா, ए- விஷ்ணு. மறைந்துள்ள अ சிவன். படைப்பு, காப்பு, லயம் என்ற மூன்றையும் தனித் தனியே தம் செயல் முறையாகக் கொண்டதால் அந்த மூன்று பிரும்மப் பணிகளையும் லக்ஷணையால் உணர்த்துபவர்கள். ई- ஈச்வரன். ड- ஸதாசிவன். லக்ஷணையால் திரோதானம் அனுக்ரஹம் என்ற பிரும்மப் பணிகளை உணர்த்துபவர்கள். இதனல் இந்த உயிரினமனைத்தும் தோன்றவும் வாழவும் மறையவும் காரணமானது என்ற பிரும்மத்தின் தடஸ்த நிலை கூறப்பட்டதாகிறது.* (यतो वा इमानि भूतानि जायन्ते। येन जातानि जीवन्ति । यत्प्रयन्त्यभिसंविशन्ति । तद्ब्रह्म *என்று தைத்திரீய உபநிஷத்து பிரும்மத்தின் தூரப் பார்வையில் காணப் பெறுகிற லக்ஷணத்தைக் கூறுகிறது. (141-142)*

*ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் ப்ரம்ஹ என்ற தைத்திரீய உபநிஷத்தின் வாக்யம் ஸ்வரூபலக்ஷணத்தை விளக்குவதை இரண்டாவது கூடம் கூறுகிறது.*

अथ 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' इत्युक्तं स्वरूपलक्षणं द्वितीयकूटेनाह—

हस आनन्दः सत्यं कं हमनन्तं च लं ज्ञानम् ।

'सखा कश्च बुधैः प्रोक्तः' इति कोशात् ककारः सखिवाचकः । सखित्वमाप्तत्वम् । तच्च यथार्थवक्तृत्वमिति शक्य-सम्बन्धेन प्रकृते सत्यमेव विवक्षितम् । एवं हकारस्य व्योमबीजत्वेन व्योम्नोऽनन्तत्वादनन्तमित्यर्थः । प्रत्यक्षज्ञानजनकलोचनवाचिल-कारस्य ज्ञानमर्थः ॥ १४२ ॥

*இரண்டாவது கூடத்திலுள்ள ह स - ஆனந்தம், क- ஸத்யம், ह- அநந்தம், ल- ஜ்ஞானம், ह्रीं பரம் பொருள் மலர்வதற்கான ஆனந்தம். क என்றால் நண்பன். இருப்பதை இருக்கிறபடி கூறுபவன். அதனால் क- ஸத்யம். எல்லையற்ற வானத்தைக் குறிப்பிடுகிற ह- அநந்தம். நேரிடைக் காட்சியால் நல்லறிவைப் பெறுகிற கண் ल- ஜ்ஞானம். ஸத்யமும் ஜ்ஞானமும் ஆனந்தமுமாக இருக்கிற பரப்பிரும்மம் என்பது ஸ்வரூப லக்ஷணம் - தன்னிலையை விளக்குவது. (143)*

इत्थं ब्रह्म तटस्थस्वरूपलक्षणयुगेन निर्णीय ॥ १४३ ॥

तदभेदं जीवगणे वक्ति तृतीयेन कूटेन ।
जाग्रत्स्वप्नसुषुप्त्याख्यकलात्रितयेन साहित्यात् ॥ १४४ ॥

सकलपदं जीवपरं ब्रह्मपरं शक्तिबीजं स्यात् ।
सामानाधिकरण्यात् तल्लक्षितशुद्धयोरभेदार्थः ॥ १४५ ॥

अत्यल्पमिदं कथितं यत् सर्वं खल्विदं ब्रह्म ।
इत्येवं बोधयितुं सकलपदं वा तृतीयकूटगतम् ॥ १४६ ॥

एवमवान्तरवाक्यैर्जीवब्रह्मस्वरूपमभिधाय ।
तदभेदो वर्णित इत्येष महापूर्ववाक्यार्थः ॥ १४७ ॥

''तत्त्वमसि' इति महावाक्ये तत्पदार्थत्वंपदार्थयोरेकविभक्तिमत्त्वरूपसामानाधिकरण्यादभेदो बोध्यते । स च वाच्यार्थयोरसंभवाज्जहदजहल्लक्षणया लक्ष्यपदार्थयोरिति स्थितिः । तत्र तत्पदस्य वाच्यार्थः सृष्ट्यादिकृत्यपञ्चकजनकः । स च 'यतो वा इमानि भूतानि जायन्ते' इत्यादिना श्रुतावुक्तः । लक्ष्यार्थस्तु कृत्यातीतं निर्विशेषं ब्रह्म । तदपि 'सत्यं ज्ञानम्' इत्यादिना प्रतिपादितम् । एवं त्वंपदस्य

वाच्यार्थो जाग्रदाद्यवस्थापञ्चकविशिष्टः । स च 'तद्यथाऽस्मिन्नाकाशे श्येनो वा सुपर्णो वा विपरिपत्य श्रान्तः संहत्य पक्षौ संलयायैव ध्रियते, एवमेवायं पुरुष एतस्मा अन्ताय धावति । तद्यथा महामत्स्यः' इत्यादिश्रुतिभिरुक्तः । लक्ष्यार्थस्त्ववस्थाद्यतीतं ब्रह्म । तदपि 'योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः, न दृष्टेर्द्रष्टारं पश्येः' इत्यादिभिः प्रतिपादितम् । एवमवान्तरवाक्यैर्वाच्यार्थलक्ष्यार्थयोर्निर्णये सति, तथा महावाक्ये लक्ष्यार्थयोरभेदबोधः ।

இவ்வாறு பரப்ரும்மத்தின் தடஸ்தலக்ஷணத்தையும், ஸ்வரூப லக்ஷணத்தையும் விளக்கிய பின், அந்தப் பிரும்மத்திற்கும் ஜீவர் கூட்டத்திற்கும் இடையே வேற்றுமையின்மையை மூன்றுவது கூடம் விளக்குகிறது. விழிப்பு கனவு தூக்கம் என்ற மூன்று நிலைகளில் ஜீவாத்மா மூன்று விதமாகக் காட்சியளிக்கிறது. இந்த மூன்று நிலைகளும் ஜீவனின் மூன்று கலைகள். இந்த கலைகளுடன் கூடிய ஜீவாத்மா सकल ஆகிறான். அவனும் பிரும்மமும் ஒன்று எனसकल - ह्रीं என்ற மூன்றுவது கூடம் விளக்குகிறது. ஒரு வீட்டை அடையாளத்தால் குறிப்பிட காக்கை அமர்ந்துள்ள வீடு என்போம். காக்கை அங்கிருந்து அகன்று விட்டாலும் காக்கையில்லாத வீடும் அந்த வீடே. அதுபோல் விழிப்பு முதலிய நிலைகளில் வெவ்வேறாக உணர்த்தப் பெற்ற ஜீவன் அவ்வாறு உணர்த்துகிற நிலைகள் அகன்றாலும் தொடர்வதால் அவை பாகத்யாக லக்ஷணையாக ஒரு பகுதி நீங்கின பிறகும் அதையே குறிப்பிடுவதாக ஏற்கப்படும். இங்கு ஸகலமான ஜீவனிடம் நிஷ்கலமான பிரும்ம நிலை தொடர்வதால் ஜீவனும் பிரும்மமே எனக் கொள்ளத்தகும். இந்த ஜீவன் கடலில் ஒரு துளிபோல. எல்லாம் இந்தப் பரம்பொருளே. सर्वं खलु इदं ब्रह्म என 'எல்லாம்' என்பதையும் सकल என்ற பகுதி குறிப்பிடும். இவ்வாறு இடையிடையே கூறப்படுகிற விளக்கங்களாலும் ஜீவன் பிரும்மம் என்ற

இரு நிலைகளை விளக்கி இரண்டும் ஒன்றே என்பதை விளக்குவதே மஹாவாக்யத்தின் பொருள்.

'தத் த்வம் அஸி' என்பது ஒரு மஹாவாக்யம். ''அது நீ'' என்பதால் அதற்கும், உனக்கும் இடையே வேற்றுமையில்லை. இது இரண்டும் ஒரே விபக்தியில் அமைந்திருப்பதால் விளங்கும். 'அது' வேறு, அது படைப்பு முதலிய ஐந்து பணிகளைக் கொண்டது. 'நீ' வேறு. 'நீ' மிக மிகக் குறுகிய ஆற்றல் பெற்றது. விழிப்பும், கனவும், தூக்கமும் பெற்று தன் இயல்பின் குறுகிய வட்டத்தை 'நீ' அடிக்கடி உணர்கிறது. ஒரு கழுகோ, கருடனோ வானளாவப் பறப்பதாக மனக் கோட்டை கட்டிப் பறந்து வானின் எல்லை காணுமல் சோர்ந்து தன் கூட்டிற்குள் நுழைவது போல் நீ என்ற ஜீவனும் தானும் அந்த பரம ஆத்மாவே என மனக் கோட்டை கட்டிப் பயனில்லையே ! ஆனல் ஜீவனுக அதனைக் குறுகிய வட்டத்தில் கட்டிப் போட்டுள்ள நிலைகளைக் கடந்து தான் யார் என்பதை உணர்ந்தால் இந்நிலைகளைக் கடந்ததும் விஜ்ஞானமே உருவானதும் இதயத்துப் பெருவெளியில் உணரத்தக்க பேரொளியும் காட்சிப் பொருளாக ஆகாமல் காண்பவனுகவும் உள்ள ஒரு தத்துவத்தை உணர முடியும். அந்த தத்வமே 'அது' எனப்படுவது. மூன்று நிலைகளுக்குட்பட்டது 'நீ'. மூன்று நிலைகளைக் கடந்தது 'அது'. நிலைகள் தவிர்க்கத் தக்கவை. காக்கையுள்ள வீடு என்ற லக்ஷணத்தில் 'காக்கையுள்ள' என்ற விசேஷணம் பாகத்யாக லக்ஷணையால் நீக்கத் தக்கதே. நீக்கினுலும் பொருள் சிதையாமல் முழுப் பொருளாகவே காணப் பெறும். அதுபோல் விழிப்பு முதலிய நிலைகளற்ற 'நீ'யை உருவகப் படுத்தமுடியும். கனவில் விழிப்பு நிலை நீங்கிய 'நீ'யை உணர முடிகிறதல்லவா ? இவ்வாறு மூன்று நிலைகளுக்குள் குறுகிச் சிறியதாக ஆகாத அநந்தமான ஜீவனும் பிரும்மமும் ஒன்றே என்பது மஹாவாக்யத்தின் பொருள். இவ்வாறே பிரும்மத்திற்கும் படைப்பும் காப்பும். லயமும் திரோதானமும் அனுக்ரஹமும்

பணியாகக் கொண்டதென்ற லக்ஷணமும் பிரும்மத்தை உலகத்திற்கு அப்பாலுள்ளதும் உலகிற்கு மூலகாரணமுமானது என்ற அளவில் விளக்க வந்ததாகக் கொண்டு பாகத்யாகலக்ஷணையால் அதற்கும் அப்பாற்பட்ட ஸத்யமும் ஜ்ஞானமும் அனந்தமுமாக எந்த குறிப்பீடுமற்றது எனக் கொள்வதும் 'தத்' என்ற சொல்லின் பொருளே.

यद्यपि श्रुतिषु कृत्यत्रयमवस्थात्रयमेव वर्ण्यते, तथापि तन्त्रानुसारात् तत्पञ्चकोपलक्षणपरत्वेन व्याख्येयं त्रिवृत्करणस्य पञ्चीकरणपरत्वमिव । एवं च प्रकृते तृतीयकूटस्थसकलपदेन कलाभिरवस्थाभिः सहित इत्यर्थकेन वाच्यार्थस्योक्तावपि लक्ष्यार्थानुक्तेर्न्यूनता । तदर्थं च कूटद्वयमेवावृत्त्या त्वंपदस्य वाच्यार्थलक्ष्यार्थयोः समर्पकत्वेन व्याख्येयम् । अथ वा, तान्त्रिकाणां मते वाच्यार्थयोरप्यत्यन्ताभेदस्य शाम्भवानन्दकल्पलताकारादिभि-रुपपादनात् कूटद्वयेन सृष्टिकर्तृत्वादिविशिष्टस्यावस्थादिविशिष्टस्यैव वाच्यार्थस्य समर्पणं; तृतीयकूटे तु तयोरभेदो जगतो वा सम्पूर्णस्याभेदो बोध्यते । इह यावान् वक्तव्योऽम्शस्तावतः सर्वस्याप्युक्तौ वेदान्तशास्त्रस्यैव कृत्स्नस्यारम्भणीयतापत्त्योपरम्यते । महापूर्वेति । महांश्चासौ पूर्वश्च वाक्यार्थ इति, महाशब्दः पूर्वो यस्मिन् वाक्ये शब्दे तस्य महावाक्यस्यार्थ इति वा निरुक्तिः । एते चार्था उपलक्षणभूताः तेन तन्त्रेषु तत्र तत्रोक्तानामन्येषामप्यर्थानां संग्रहः ।

வேதத்தில் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் என்ற மூன்று பணிகள் மட்டுமே விளக்கப்பட்டுள்ளன. திரோதானமும், அனுக்ரஹமும் லயத்திற்கும் ஸ்ருஷ்டிக்கும் இடையே உள்ள லோகாதீத நிலைப்பணிகள். அவையும் தந்திரத்தை ஒட்டி தடஸ்தலக்ஷணமே. 'ஸகல' என்ற சொல்லிற்கு உலக நிலையில் கலைகளுடன் கூடிய என்ற பொருளும், பிரும்ம நிலையில் ஸர்வம் - எல்லாம் என்ற பொருளும் -

முறையே வாச்யார்த்தமும் லக்ஷணார்த்தமுமாகக் கொள்ளலாம். மஹா என்ற சொல்லே முன்னே கொண்ட- மஹாபூர்வமான வாக்யத்தின் பொருள். தத்த்வமஸி முதலியவற்றை மஹாவாக்யங்கள் என வேதாந்தம் கூறும். இவை பொதுவாகக் கொண்ட பொருள். மற்ற தந்திரங்கள் கூறிய பொருள்களேயும் இவற்றுடன் ஒத்துப் பார்க்கலாம்.

तथा हि—योगिनीहृदये तावत् 'आत्मनः स्फुरणं पश्येद् यदा सा परमा कला' इत्यारभ्य कांश्चिच्चतुरश्चतुरः पदार्थानुक्त्वा तद्वाचकत्वं कूटत्रयं तुरीयविद्या चेति चतुर्णां शब्दानां प्रतिपादितम्— 'कूटत्रितययुक्तस्य सकलस्य मनोः पुनः । एतानि वाच्यरूपाणि कुलकौलमयानि तु ॥' इति । एवं च यावन्ति चतुष्काणि तावन्तो मन्त्रार्थाः । तानि च प्रथमेऽंशे 'पुटधाम—' इत्यादिश्लोकोक्तानि । तत्र हि यद्यपि कूटानां पुटाद्यभेद एवोक्तः, तथापि स वाच्यवाचकभाव एव पर्यवस्यति, शब्दार्थयोस्तादात्म्यस्यैव शक्तिरूपत्वेन पातञ्जले मञ्जूषायां च स्फुटतरमुपपादनात् । एवं कादिमते पञ्चत्रिंशे पटले चतुर्विंशादिभिस्त्रिभिर्व्याकुलाक्षरैः श्लोकैरर्थो वर्णितः— 'र्णैः याभिलिर्वतास्त्रिल तेर्थोधीकयलाऽभिस । णदेरूपेपेणवीशे तम् दिमीनरिस्यादते ॥ १ ॥ त्स्त्रन्तोगशेत्कृषजअ तम्त्ममील्लेरिवाकह्र । तःर्थकस्याथिश्चास्तुत तःन्त्रेगोर्वपितषुस ॥ २ ॥ त्वं कामाम्नानप्रशव्यो नानमसग्निमात्वग्र । रोमईयोकाविंशित नम् तभान्दुलनाभ्भिबि ॥ ३ ॥ इति । एतेषां वाचनक्रमो यथा— 'देवतारथगोमूक (८४६२७३५१) इति यो वेत्ति न क्रमम् । स व्याकुलाक्षरे मूको देवतारथगोऽपि सन् ॥' इति ।

(ललितायास्त्रिभिर्वर्णैः सकलार्थोऽभिधीयते ।
शेषेण देवीरूपेण तेन स्यादिदमीरितम् ॥ १ ॥

अशेषतो जगत् कृत्स्नं हृल्लेखात्मकमीरितम्।
तस्याश्चार्थस्तु कथितः सर्वतन्त्रेषु गोपितः ॥ २ ॥

व्योम्ना प्रकाशमनत्वं ग्रसमानत्वमग्निना।
तयोर्विमर्श ईकारो बिन्दुना तन्निभालनम्॥ ३ ॥ इति तत्स्पष्टम्।)

तृतीयकूटे वर्णत्रयं सर्वार्थकं; तुर्यमक्षरं देव्यर्थकं; तेनायमर्थः संपन्न इति प्रथमश्लोकस्यार्थः। सर्वं जगद्देवीरूपमेवेत्यर्थस्तन्त्रान्तरेषु गोपित इति द्वितीयश्लोकस्य। लज्जाबीजस्थैश्चतुर्भिरक्षरैर्यत् प्रकाशकं यच्च ग्रसिष्णु, तयोर्यत् सामरस्यं तत्तादात्म्यं द्वितीये प्रतिपाद्यत इति तृतीयस्य। प्रकाशग्रासशब्दौ तूत्पत्तिसंहारयोर्विद्याविद्ययोर्वा वाचकाविति। अयमप्यर्थः 'अत्यल्पमिदं कथितम्' इति श्लोके सूचितः। एवं चात्र 'पुटधाम—' इति श्लोके त्रयोदशार्थाः; गायत्र्यादिपञ्चदशार्थेषु भावार्थाश्चत्वारः, नामार्थास्त्रयः, शाक्तार्थौ द्वौ, कौलिकार्थेऽपि गणेशादिरूपत्वस्य देवीविद्याचक्रभेदेन त्रैविध्यम्, महावाक्यार्थेऽपि द्वैविध्यमिति चतुर्दश; शेषा दश; इति मिलित्वा सप्तत्रिंशदर्थाः। नामैकदेशार्थे त्वनन्ता भेदा उक्ताः। एवं बहुतन्त्रद्रष्टृभिरन्येऽप्यर्थाः सङ्ग्राह्याः॥ १४३ - १४७॥

*மூன்றாவது கூடத்தின் மஹாவாக்யார்த்தத்தை மறுபடி தந்த்ர நூல்களையொட்டி விளக்குகிறார். புடம், தாம, தத்வம், பீடம், அன்வயம், லிங்கம், மாத்ருகா என (30-53 ச்லோ.) முன் விளக்கியவற்றுடன் மூன்று கூடங்களுக்கு வேற்றுமையின்மை நினைவிற் கொள்ளத்தக்கது.*

*காதிமதம் என்ற நூலின் 35வது படலத்தில் எழுத்துக்களை ரஹஸ்யம் காப்பதற்காக மாற்றி அமைத்து அதற்கு* देवतारथगोमूक *(84627351) என்ற எண் குறிப்பு தந்து. இந்தத் திறவு கோல் கொண்டு அந்தப் புதிரை விளக்கிக்கொள்ள* ललितायाः त्रिभिर्वर्णैः *என்றவாறு 3*

ச்லோகங்கள் அமைகின்றன. (णैः याभिर्लिर्वताखिल என்பதை ललितायाखिभिर्वर्णैः என்று வாசிக்க வேண்டும்) அதன்படி 'லலிதா' என்ற பஞ்சதசியின் மூன்றுவது கூடத்தின் 'ஸகல' என்ற அக்ஷர வரிசைக்கு எல்லாம் உலகமனைத்தும் என்று பொருள். அது ஹ்ரீம் என்றதன் ஸ்வரூபம். ஹ்ரீம் என்பதில் ह् ஆகாசம், र् அக்னி, ई சிவசக்தி விமர்சம், கடைசியிலுள்ள பிந்து அதன் ஜ்ஞானம். வெட்ட வெளியான ஒளியில் துலங்குவதும் அக்னியால் விழுங்கப் பெறுவதும். சிவ சக்தி ஸமரஸ உருக்கொண்டதுமான பிரும்மமாக உணர்கிற பேரறிவு எனப் பொருள். ஒளியால் துலங்குவது படைப்பையும் அக்னியால் விழுங்கப் பெறுவது லயத்தையும் குறிப்பிடும். வித்யை அவித்யை என்ற இரண்டைக் குறிப்பதாயும் கொள்ளலாம்.

பஞ்சதசிக்கு, புடம் தாமம் முதலிய விளக்கங்களால் 13 வகை அர்த்தங்கள் கூறப்பட்டன. பாவார்த்தம் 4, நாமார்த்தம் 3, சாக்தார்த்தம் 2, கௌலிகார்த்தம் 3, மஹாவாக்யார்த்தம் 2, மற்றவை ஒவ்வொன்றுக 10, ஆக 37 அர்த்தங்கள் கூறப்பட்டன. நாமைக தேசார்த்தத்தில் கோடிக் கணக்கான அர்த்தங்கள் காண முடிந்தன. பல தந்திரங்களைக் காணும் போது இத்தனையும் பஞ்சதசியில் பொருந்தக் கூடியவையே என்று தேறும். (143-147)

**शक्त्या लक्षणया वा ये येऽर्था दर्शिता मनोरस्य ।**
**तेषु न कोऽपि विवादः प्रत्यक्षेणैव सिद्धत्वात् ॥ १४८ ॥**

मनोर्मन्त्रस्य । प्रत्यक्षेणेति । शक्तिग्राहकव्याकरणकोशादेः शक्यसम्बन्धस्य च स्फुटं प्रदर्शनादिति भावः ॥ १४८ ॥

இவ்வாறு பல அர்த்தங்கள் கூறு மிடத்தில் பல ஐயங்கள் எழலாம். அவற்றிற்கு ஸமாதானம் காணுதல் உசிதம். மந்திரத்திலுள்ள பதினைந்து அக்ஷரங்களுக்கும் சக்தியாலும் லக்ஷணையாலும் பலபொருள்கள் காட்டப்பட்டன. அவை கோசம் முதலியவற்றால்

கண்கூடாக சிலவற்றையும் சற்று விலகி நின்று பார்த்து சிலவற்றையும் உணரமுடிகின்றன. இவற்றில் விவாதத்திற்கு இடமில்லை.( 148)

ये पुनरिह भावार्थादयः षडर्था मनोरुक्ताः ।
तेषु यदि शक्तिभक्ती न हि संभवतस्तदापि का हानिः॥१४९

शक्तिग्राहकव्याकरणाद्यभावान्न शक्तिः; अत एव च न शक्यसम्बन्धरूपा भक्तिरपि । व्यक्तिरूपा तृतीया वृत्तिर्भविष्यति, 'वक्तृबोद्धव्यकाकूनामन्यसंनिधिवाच्ययोः । प्रस्तावदेशकालादेर्वैशिष्ट्यात् प्रतिभाजुषाम्' इत्यत्रादिपदेनोपासनापि ग्रहीष्यत इत्याशयेन समाधत्ते — का हानिरिति ॥ १४९ ॥

பாவார்த்தம் முதலிய ஆறு பொருள்கள் கூறப்பட்டன. அவற்றில் சக்தியாலோ லக்ஷணையாலோ அர்த்தம் கூற முடியவில்லையே எனில் என்ன நஷ்டம் ? அறிவாளியான சொல்பவனது சொல்லிற்கு சூழ்நிலை தேசம் காலம் முதலியவற்றின் தனிநிலை காரணமாக சக்தியாலோ லக்ஷணையாலோ விளக்க இயலாத பொருளை உணர்த்துவதான வேறுபொருளைக் கொள்வது இயல்பு தானே ! அப்படிப் புதுப்பொருள் காண்பது தானே அறிவாளியின் சிறப்பு ! சக்தி லக்ஷணை என்று இரண்டு மட்டுமே பொருளை விளக்கப் போதுமானவையல்லவே ! உபாஸனையால், அதே சொல்லிற்கு வியக்கத்தக்கப் புதுப்பொருள் காண்பதும் உண்டு. இந்த சொல்லிற்கு இந்தப் பொருள் பொருந்தலாம் என வியங்க்யமான பொருளும் உண்டு. வியங்க்யத்தை சாஸ்திரத்தில் ஏற்க முடியாதெனில் வேறு வழியுமுள்ளது. (149)

व्यञ्जनाया बहुभिरनङ्गीकारादाह-

आस्तामन्या वृत्तिर्विलक्षणा तद्ग्रहस्तु मनोः ।
शिववचनेन भविष्यति यद्वैषा शक्तिरेवास्तु ॥ १५० ॥

एतस्मादयमर्थो बोद्धव्य इतीश्वरेच्छात्वात् ।

अन्या शक्तिभक्तिव्यक्तिभ्यो विलक्षणा शक्त्यादित्रितय-प्रक्रियातो विलक्षणप्रक्रियाशालिनी । उच्छृङ्खलस्य पन्थानं परित्यज्याह - यद्वेति । शिवेनैवास्यायमर्थ इति स्पष्टमुक्तत्वादिति भावः ॥ १५० ॥

மந்திரத்திற்கே சக்தியாலோ லக்ஷணையாலோ விளக்கப் பெறுத பொருள் அதனது தனி இயல்பால் அமையலாம். ஒரு சொல்லிற்கு இது தான் பொருள் என்ற ஈசுவரனின் விருப்பமே சக்தி என்பர். अस्मात् शब्दात् अयमर्थो बोद्धव्य इति ईश्वरेच्छा शक्तिः என்ற சாஸ்திரங்களனைத்தும் ஒத்துக் கொண்ட கொள்கை. அதன்படி இந்த எழுத்திற்கு இந்தப் பொருள் என தந்திரத்தைத் தோற்றுவித்த சிவனே கூறுகிறுர். அதை ஏற்பதில் தடையேது!

சக்தி - வாச்யார்த்தத்தைத் தருவது. பக்தி - லக்ஷணார்த்தத்தைத் தருவது. வ்யக்தி வியஞ்ஜனையால் உணர்வது. இம்மூன்றிற்கும் அப்பாற்பட்டதொன்று சிவவசனம் (உக்தி) என்பது. மற்றதைவிட வேறுபட்டது இது. (150)

प्रतिपदमर्थविशेषाज्ञानेऽप्यास्तामखण्डवाक्यस्य ॥ १५१ ॥

अर्थोऽप्यखण्डरूपो विशिष्टमतिरिक्तमिति हि सिद्धान्तः ।
आसेचनकव्याघ्यादिपदवदास्तां पदत्वमपि ॥ १५२ ॥

इदं पदमिममर्थं बोधयत्वितीच्छायां अर्थबोधजनकत्वनिष्ठ-प्रकारता -निरूपित-विशेष्यताशालित्वेन पदस्यापि विषयत्वात्, प्रकृते प्रतिपदमर्थानुक्तेः, कथं शक्तिरिति चेन्न । इदं वाक्यं इमं अखण्डार्थं बोधयतु इत्याकारिकायाः एवेच्छायाः कल्पनात् । वाक्यस्याखण्डत्वं वैयाकरणानामिष्टमेव । अर्थस्याखण्डत्वम्

'प्रकृष्ट-प्रकाशश्चन्द्रः' इत्यादिवाक्यार्थं वर्णयतामौपनिषदानामिष्टमेव। तच्च विचार्यमाणे विशिष्टस्यातिरिक्तत्व एव पर्यवस्यति। तथा च यत्र प्रतिपदमर्थविवेकस्तत्रेयं रीतिः; यत्र यत्र न स तत्र संपूर्णस्यैकपदत्वमेवास्तु। नचैकस्य पदस्य विशिष्टबह्वर्थवाचकत्वं अदृष्टमिति वाच्यम्। घटत्व घटसमवायानां घटपदवाच्यत्वात्। 'तदासेचनकं तृप्तेर्नास्त्यन्तो यस्य दर्शनात्' इति कोशात्, हेतुसमानाधिकरणात्यन्ताभावाप्रतियोगिसाध्यसामानाधिकरण्यस्य व्याप्ति-पदार्थत्वाच्चेत्याह - आसेचनकेति। आदिनोपाधिपरिग्रहः। तेनेश्वरेच्छायां पदस्यैव विशेष्यत्वेऽपि न प्रकृतनिर्वाहाय विलक्षणेच्छाकल्पनापत्तिः ॥ १५१-१५२

*இந்த பதம் இந்தப்பொருளைக் கொண்டது என்ற சக்தியால் ஒரு சூழ்நிலையில் அந்தப்பதத்திற்குப் பொருந்துகிற பொருள் காண முடியாதபோது, அந்தப்பதம் அமைந்த வாக்யம் முழுவதற்குமே (கண்டம் கண்டமாக, பதம்பதமாக, பொருள் காணுமல்) பொருள் காணமுடியலாமே ! பதத்தால் விளக்க முடியாததை வாக்யம் தனித்து விளக்கலாமே !*

*ஆஸேசனகம் என்றொருபதம். எல்லையற்ற திருப்தி தருவது என்று அதற்குப் பொருள். அந்தச் சொல்லில் சுற்றிலும் நனைக்கக்கூடியது என்று பொருள் காணமுடியும். ஆனுல் எல்லையற்ற திருப்தி தருவது என்று நிகண்டு பொருள் தருகிறது. போதும் என்ற எண்ணம் தோன்றுத மனநிறைவு அது. பதத்தின் பொருளே வாக்யத்தில் பிரதிபலிக்கும் என்று நியதி இல்லை. முழுவாக்கியம் வேறொரு பொருளைத் தரக்கூடும். அந்நிலையில் அந்த முழுவாக்யமே தனிப் பதமாகிவிடும். இந்த அகண்டார்த்த நிலையில் பஞ்சதசிக்குப் பல பொருள்கள் பொருந்துவதில் சிக்கல் ஏது ? அப்படியாயின் சிவவசனம் என்ற நான்காம் முறையும் தனித்துக் கொள்ள வேண்டியதில்லை (151-152)*

नन्वस्य पदत्वेऽनेकार्थत्वं दोष इत्यत आह -

एकस्यानेकार्था दृष्टा हरिसैन्धवादिषु पदेषु ।
अन्यतमैकावगतौ प्रकरणतात्पर्ययोर्विशेषकता ।। १५३ ।।

प्रकृते तु सर्वबोधस्येष्टत्वान्नो विशेषकाकाङ्क्षा ।
अथ वा सकलार्थेष्वपि शक्त्यैक्यं पुष्पवन्तपदवदिह ।।१५४।।

अनेकार्थतायाः प्रमाणबलायातत्वाददोषत्वम् । सर्वत्रानेकार्थ-स्थलेऽन्यतमस्यैकस्यैव बोधनार्थं प्रकरणादिज्ञानस्य कारणत्वादि-कल्पनदोषः, प्रकृते तु तदभाव इत्याह - अन्यतमेत्यादिना । अथ वा, ईश्वरेच्छाविषयीभूतबोधीयविशेष्यता यथा सूर्याचन्द्रमसोः पर्याप्तैकैव स्वीक्रियत इति न तत्र पुष्पवन्तपदे शक्त्यनेकत्वम्, तद्वदिहाप्य-स्त्वित्याह - अथ वेति ।। १५३,१५४ ।।

பஞ்சதசியின் ஒவ்வொரு எழுத்தும் பதம். ஒவ்வொரு கூடமும் பதம். முழுமந்திரமும் பதம் என்ற நிலையில் இதற்கு இதுதான் பொருள் என்ற நிலைப்பாடின்றிப் பலபொருட்களைக் கூறுவது தகுமா என்ற ஐயம் எழும். நிகண்டுவில் ஹரி என்ற சொல்லிற்கு விஷ்ணு, குரங்கு, சிங்கம், இந்திரன் என ஏற்றத்தாழ்வு மிக்க பல பொருட்கள் கூறப்படுகின்றன. ஸைந்தவம் என்ற சொல்லுக்கு ஸிந்து தேசத்து உப்பு, கடலுப்பு, குதிரை என்றவாறு பல பொருட்கள் கூறப்படுகின்றன. விஷ்ணுவின் ஸன்னிதியில் நின்று ஹரயே நம: எனும் போது தேசகால சூழ்நிலைகள் பொருந்துவதற்கேற்ப விஷ்ணுவிற்கு நமஸ்காரம் என்று தான் கொள்வர். குரங்குக்கு நமஸ்காரம் என்றல்ல. உணவேற்கும் போது ஸைந்தவம் கொண்டுவா என்றால் உப்பைத் தான் கொணர்வர். குதிரையை அல்ல. சொல்லுக்குப் பொருள் காண்பதில் கூறுமிடம், நேரம்,

சூழ்நிலை, சொல்பவனின் விருப்பம், அவனது இங்கிதம் என்று பலவும் கருத்திற்கொள்ள வேண்டும். ஆனால் இங்கு ஒரு பதத்திற்கு எத்தனை பொருள்களுண்டோ அவை அனைத்தும் 'எல்லாம்' ஆன தேவியிடம் பொருந்தும்.

ஸூரியனையும் சந்திரனையும் இனம் பிரிக்காமல் ஒரே சொல்லால் குறிப்பிட पुष्पवन्तौ என்ற பதமுண்டு. (पुष्पदन्तौ என்பர் சிலர்) ஸூரியனையோ சந்திரனையோ இவைதனித்துக் குறிப்பிடமாட்டா. அதனால் पुष्पवान् என்று ஸூர்யனுக்குப் பெயரில்லை. அதே போல் अश्विनौ என இரு அச்வினீ தேவர்களைக் குறிப்பிடுகிற சொல். தனித்து அவர்களைக் குறிப்பிட नासत्यः दस्रः என்ற இரு பெயர்ச் சொற்கள் உண்டு. ''புஷ்பவந்தௌ'' போல் கூடங்களும் மொத்தப் பொருளையும் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். புஷ்பம் உள்ளவர்கள் என்ற சொல்லின் நேரிடைப்பொருள் சூரிய சந்திரர்களை இணைத்துக் கூறப்போதாது. அதனால் சொல்லின் வியஷ்டிப் பொருளைவிட ஸமஷ்டிப்பொருள் தனித்திருப்பதும் இயல்பானதே. (153-154)

**यत्र प्रतिपदमर्थस्तान् प्रत्यस्यास्तु वाक्यत्वम् ।**
**क्वचनावान्तरवाक्यं समासवाक्यं महावाक्यम् ॥ १५५ ॥**

यत्र गायत्र्यर्थनामार्थादिषु । अवान्तरवाक्यं सगुणार्थावयवार्थादौ । अवान्तरवाक्यत्वं नाम वाक्यसमूहभिन्नत्वे सति पदसमूहत्वमेव, न पुनर्महावाक्यौपाधिकत्वरूपं प्रकृते । समासवाक्यं समस्तार्थे । महावाक्यं चरमेऽर्थे ॥ १५५ ॥

எங்கு ஒவ்வொரு பதத்தின் பொருளும் இணைந்து ஒரே பொருளைச் சொல்கிறதோ அங்கு இது வாக்யமாக இருக்கட்டும். காயத்ரியர்த்தம் நாமார்த்தம் முதலியதில் அவ்வாறு பொருள் பொருந்துகிறது. எங்கு வாக்யமாக பொருந்தவில்லையோ அங்கு இடையில் வந்த

வேறுவாக்யமாகக் கொண்டு இணைத்துப் பொருள் கூறலாம். ஸமஸ்தார்த்தத்தில் ஸமாஸவாக்யமாகிறது. முடிவு காண முற்படும்போது மஹா வாக்யமாக அது அமைகிறது. (155)

एकस्यानेकार्थे विनियोगादर्थबाहुल्यम् ।
वेदे बहुशः स्वीकृतमत्र त्वेकत्र विनियोगात् ॥ १५६ ॥

अखिलार्थबोधनियमो नियमाद्दृष्टं प्रकल्पयति ।
सिद्धे प्रमाणदार्ढ्ये सकलं कल्प्यं हि तदविरोधाय ॥ १५७

पदपक्षेऽनेकार्थतादोषपरिहारवद्वाक्यपक्षेऽपि संभवति, पुरुषसूक्तस्य तत्तद्देवतापूजायां विनियोगेनानेकार्थत्वस्येष्टत्वात् । इयांस्तु विशेषः- तत्तत्पूजायां तस्य तस्यैवार्थस्य स्मरणं पुरुषसूक्ते; प्रकृते तु सर्वेषामर्थानां स्मरणेनैवाद्दृष्टोत्पत्तिरिति भावः ॥ १५६,१५७ ॥

வேதத்தில் ஒரே மந்திரம் பல இடங்களில் வேறுபட்ட சூழ்நிலையில் வெவ்வேறு பலனைக் குறித்துப்பயன்படுத்துகிற முறை உள்ளது. அதற்கேற்ப மந்திரத்தின் பொருள் பலவாறு வேறுபடுகிறது.

புருஷஸூக்தத்தைக் கொண்டு விநாயகரையும் சிவனையும் விஷ்ணுவையும் வழிபடலாம். அந்த மந்திரம் எல்லோரிடமும் பொருந்தும். அந்தந்த தெய்வத்தை வழிபடுகிறபோது புருஷ சப்தத்தால் அன்று அப்போது வழிபடப்பெறுபவரைக் கொள்கிறோம். இங்கேயோ பயன்படுகிற மந்திரமும் தெய்வமும் ஒன்று. மந்திரத்திற்கு வெவ்வேறு பொருட்கள் வெவ்வேறு கோணத்தில் தரப்படுகிறது. அத்தனை பொருட்களையும் தனித்தும் ஒருமித்தும் காண்பது தான் இங்குள்ள நியமம். அந்த நியமமே பஞ்சதசி வழிபாட்டால் கிடைக்கப்பெறுகிற அத்ருஷ்ட பலனைத் தருகிறது. ஒன்றுக்கொன்று முரண்படாதவாறு, குழப்பமின்றி ஆழ்ந்த கருத்துடன்

*இணைத்து வழிபடுவதே பஞ்சதசீ ஜபத்தின் தனிச்சிறப்பு. (156-157)*

*வேதம் கூறிய வேள்விகளிலும் இத்தகைய அத்ருஷ்டபலன் உண்டு. இதனை விளக்குகிறுர்.*

**सिद्धे प्रमाणदार्ढ्ये इत्यत्र दृष्टान्तमाह -**

**यागस्य स्वर्गं प्रति संसिद्धे हेतुहेतुमद्भावे ।
तदनुपपत्तिं निरसितुमलौकिकापूर्वमपि क्लृप्तम् ॥ १५८ ॥**

**'ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत' इत्यत्र तृतीयाश्रुत्या यागस्य जनकत्वे काम्यमानतया स्वर्गस्य जन्यत्वे च बोधितेऽपि भिन्न-कालीनयोस्तदयोगाद्देवताप्रसादयागध्वंसादिनाऽत्र निर्वाहाभावाद-पूर्वेणैवानुपपत्तिनिरास इत्यादि तन्त्रान्तरेषु विस्तरः ॥ १५८ ॥**

*ஸ்வர்கம் என்பது பயன். அதற்கு வேள்வி காரணம். வேள்வி நேரிடையாக நடைபெறுகிற செயல். அதன் பயனை ஸ்வர்கம் இம்மையில் உணரப்பெருது, என்ருே பெறப்போவது. இவற்றின் இடையே உள்ள காரிய காரணபாவத்தை உணர்வதிலுள்ள குறையைப் போக்க, வேள்வியிலிருந்து உலகியலுக்கு அப்பாற்பட்ட அபூர்வம் ஒன்று கற்பிக்கப் பெறுகிறது. அதுவே காலம் தேசம் சூழ்நிலை இவற்றில் முற்றிலும் மாறுபட்ட ஸ்வர்கவாஸம் என்ற பலனைத் தருகிறது. ஸ்வர்கத்தை அடைய விரும்புபவன் ஜ்யோதிஷ்டோம வேள்வி புரியவேண்டுமென்று வேதம் வகுத்த விதி. ஸ்வர்கவாஸம் வேள்வியின் பின் விளைவு. பலன் உடன் பெற இயலாதது. அதனுல் காரண காரிய நிலையை உடன் பொருத்திப்பார்க்க இயலாதநிலை தோன்றியதும் காரணத்தையும் காரியத்தையும் இணைக்கிற பாலமாக ''அபூர்வம்'' - வினையின் பின் விளைவான அத்ருஷ்டம் - கற்பிக்கப்படுகிறது. வேள்வி என்ற செயல் அழிந்த பின்னர் அபூர்வம் பயனுகமாறும் வரை தொடர்கிறது. பயன்*

*உருவானதும் அந்த அபூர்வம் மறைகிறது. (158)*

*இவ்வாறு 60-147 (88) செய்யுட்கள் பஞ்சதசியின் பொருளை விளக்குகின்றன. 148-158 செய்யுட்கள் விளக்கத்தில் தோன்றுகிற குறைகளுக்கு சமாதானம் கூறிப்பொருள் கூறியது பொருந்துவதை விளக்கின. இனி முன் விளக்கப் பெற்றதை சுருக்கித் தொகுத்துக் கூறுகிறுர்.*

अस्मिन् प्रकरणे पूर्वं वर्णितान् पञ्चदशार्थान् संगृह्यानुवदति-

विद्यावर्णयत्तोद्धारः कालस्तदुच्चारः ।
उत्पत्तिस्थानं तद्यत्नो रूपं स्थितिस्थानम् ।। १५९ ।।

आकारः स्वं रूपं विभाव्यमर्थो ऽन्तरङ्गाणि ।

विद्यायां वर्णयत्ता अष्टपञ्चाशद्रूपा वर्णसंख्या । उद्धारः 'क्रोधीशः श्रीकण्ठारूढः' इत्यादिनोक्तः । कालस्त्रिलवोनैकत्रिंशन्मात्रात्मको विद्यायाः, एकलवोना ऊनत्रिंशन्मात्रा उच्चारणस्य। उच्चारणम् 'इत्येवं वर्णानाम्' इत्यादिसार्धश्लोकत्रयेणोक्तम् । उत्पत्तिस्थानम् 'कण्ठे च कण्ठतालुनि' इत्यत्रोक्तम्। यत्नो बाह्यश्चान्तरश्च। रूपादित्रयम् 'प्रलयाग्निनिभम्' इत्यादिनोक्तम्। स्वं रूपम् 'व्यष्टिसमष्टिविभेदात्' इत्यादिनोक्तम्। विभाव्यमवस्थापञ्चकादि । अर्थो गायत्र्यर्थादिरूपः । इमान्यन्तरङ्गत्वादुपासका-नामत्यावश्यिकानि ।। १५९ ।।

*பஞ்சதசீ என்ற பதினைந்து அக்ஷரங்கள் கொண்ட ஸ்ரீவித்யை 58 வர்ணங்கள் கொண்டதென்ற அளவு, மந்திர சாஸ்திரஸங்கேதப்படி ஸங்கேதச் சொற்களால் ஒவ்வொரு எழுத்தின் அமைப்பு, அதை உச்சரிக்கிற காலவரை, (3லவங்கள் குறைந்த 31 மாத்திரை வித்யையின் அளவு. அதை உச்சரிக்க ஒரு லவம் குறைந்த 29 மாத்திரை அளவு) அந்த அக்ஷரங்கள் வைகரியாக வெளியாகுமிடம், அதை உச்சரிப்பதில் யத்தினத்தின் அளவு. யத்தினத்தின்*

வெளியத்னம் உள்யத்னம் என்ற பாகுபாடு, ஒவ்வொரு கூடத்தின் நிறம் உருவம் முதலியவை, அவை அமைகிற இடம், ஒவ்வொரு கூடத்திற்கும் ஸமஷ்டிக்கும் உருவகம், தனி நிலை, அதன் அவஸ்தைகள். காயத்ரி முதலிய பதினைந்து அர்த்தங்கள் என இவை அனைத்தும் உபாஸகனுக்கு மிக அவசியமான விஷயங்கள். இவற்றை நன்கு உணர்ந்து மனனம் செய்வதே மந்திர ஜபத்தின் இலக்கு. இவை அந்தரங்க ஸாதனங்கள். உள்ளத்தின் செயற்பாட்டில் மட்டும் அடங்கியவை. (159)

ऋषयश्छन्दोदैवतविनियोगा बीजशक्तिकीलानि ॥ १६० ॥
न्यासा ध्यानं नियमाः पूजादीनि बहिरङ्गाणि ।
बाह्यान्यङ्गानि पुनः प्रायो लोके प्रसिद्धकल्पानि ॥ १६१ ॥

ऋषयो हयग्रीवादयः । छन्दांसि पङ्क्त्यादीनि । दैवतं त्रिपुरसुन्दरी । विनियोग इष्टार्थजनकत्वे । बीजं वाग्भवादि । शक्तिः परादिः । कीलकं कामराजादि । न्यासा ऋष्यादिन्यासजालम् । ध्यानम् 'अरुणां करुणातरङ्गिताक्षीम्' इत्यादिना कथितम् । नियमाः पुण्ड्रेक्षुदण्डभक्षणवर्जनसंकल्पादयः । पूजाः पात्रासादनादिशान्तिस्तवान्ता नित्यादिभेदेन त्रिविधाः, परादिभेदादपि त्रिविधाः, केवलादिभेदात् पञ्चविधा अपि । आदिना होमतर्पणादिपरिग्रहः । एतानि बहिरङ्गत्वेनावश्यिकानि । प्रसिद्धकल्पानि, ईषन्न्यूनप्रसिद्धिमन्ति । प्रायः प्रसिद्धानीत्यर्थः । कल्पप्प्रत्ययः । तानि च प्रकाशवरिवस्याविधौ प्रपञ्चितान्यस्माभिः । अतोऽत्र ग्रन्थे नोक्तानीति भावः ॥ -१६०, १६१ ॥

மந்திரத்தைக் கண்டறிந்த ருஷிகள்- ஹயக்ரீவர் முதலானோர், பங்க்தி முதலியச் சந்த அமைப்புகள், திரிபுர ஸுந்தரீ என்ற தேவதை, எதிர்பார்க்கிற பலனைப்பற்றிக் குறிப்பிடுகிற விநியோகம், மந்திரத்தின் பீஜம் (வாக்பவ

*பீஜம்) சக்தி (சக்தி பீஜம்) கீலகம் (காம பீஜம்) நியாஸம் (ருஷி நியாஸம் தொடங்கி லமித்யாதி நியாஸம் வரை உள்ளவை) தியானம், மந்திர ஜபம் செய்பவர் கடைபிடிக்கிற நியமங்கள், (கரும்பு சாப்பிடாதிருத்தல் முதலியவை) பாத்திர அமைப்பிலிருந்து பூஜாஸமர்பணம் வரை உள்ள வழிபாட்டு முறைகள். முதலியவை வெளிப்படையான அங்கங்கள். உலகில் இவை பலரறியச் செய்து வருபவையே. ஸ்ரீவித்யாஸபர்யாக்கிரமம் கூறும் நூல்களில் காணப்படுபவை. (160-161)*

दुर्लभमान्तरमङ्गं प्रायोऽन्तर्मुखजनैस्तदादृत्यम् ।
तोषायैषा तेषामतः प्रदिष्टा रहस्यवरिवस्या ॥ १६२ ॥

अन्तर्मुखैर्विषयेष्वनासक्तचित्तैर्जनैः । प्रदिष्टोपदिष्टा, 'विद्ययोः पथि मुनिप्रदिष्टयोः' इति कालिदासप्रयोगात् ॥ १६२ ॥

*159வது சுலோகத்தில் சொல்லப்பட்டவை. வரிவஸ்யை எனும் வழிபாட்டில் அந்தரங்கமானவை. உள்நோக்குள்ளவர்களால் மட்டும் உணர்ந்து பாவனையால் செய்யக்கூடிய வழிபாடு. யோகியும் ஜ்ஞானியுமான அந்த உபாஸகன் பொருட்டே இந்த வரிவஸ்யா ரஹஸ்யம் என்ற ரஹஸ்ய வழிபாட்டு முறை கூறப்பெற்றது. குருவால் கையில் ஏந்தி ஸாதகனை சிஷ்யனின் கையில் ஒப்படைக்கப்பட்டது. ஸம்பிரதாயம் இது. ஸம்-ப்ர-தாயம், மனம் ஒப்பி நல்ல முறையில் உரிமைப் பொருளாக வழங்கப்பட்டது.*

एतामुत्सृज्य जडैः क्रियमाणा बाह्यडम्बरोपास्तिः ।
प्राणविहीनेव तनुर्विगलितसूत्रेव पुत्तलिका ॥ १६३ ॥

बाह्यो डम्बरो ऽङ्गविस्तारो यस्यां सा । प्राणसूत्रयोरन्तरङ्गत्वात् तदभावेन यथा तयोर्न कार्यक्षमता तथेति भावः ॥ १६३ ॥

இந்த ரஹஸ்ய வழிபாட்டு முறையை விட்டுவிட்டு வெளி ஆடம்பரத்துடன் செய்யப்படுகிற உபாஸனை உயிரற்ற உடல் போலாகும். பொம்மலாட்டக்காரன் கயிற்றிலிருந்து நழுவிய பொம்மையைக் கொண்டு ஆட்டம் காட்டுவது போலாகும். நிறைவு பெறாத செயல். வீணானது.

बीजान्मूलं मूलात् क्षेत्रस्यान्तःस्थबाह्यविस्तारौ ।
यद्यप्यनयोः साम्यं प्राधान्यमथापि चान्तरङ्गस्य ॥ १६४ ॥

बीजात् कामकलारूपाद्धान्यादिरूपाच्च । मूलं वृक्षपादो मन्त्रश्च । क्षेत्रस्य शरीरस्य केदारस्य च । यद्यप्यनयोः साम्यं बीजजन्यत्वाविशेषात्; तथापि 'अन्तरङ्गनाशे बाह्याङ्गसहितवृक्षनाशः, बाह्याङ्ग-मात्रनाशेऽपि न वृक्षस्य न वान्तरङ्गस्य नाशः' इत्यस्य प्रसिद्धत्वादिति भावः ॥ १६४ ॥

விதையிலிருந்து வேர் வேரிலிருந்து வயலினுள்ளேயும் வெளியிலும் விளைந்து பரவுதல் என்பதே முறை. இங்கு விதை காமகலை. அதன்வேர் மந்திரம். மந்திரத்தின் மனனத்தால் உள்ளத்திலும் உடலிலும் தேவதாசக்தி பரவுதல் பலனுகும். விதை அழிந்தால் வேர் முதல் கிளை இலைகாய்வரை விரிவு அழியும். கிளையும் இலையும் காயும் பழமும் அழிந்தாலும் விதையும் வேரும் உள்ள வரை மரம் வாழும். பீஜமும் மந்திரமும் முழுவீர்யத்துடன் உள்ள வரை தான் வெளி உபாஸனை முறை உயிருடன் நிற்கும். வெளி உபாஸனை முறை குறைந்தாலும் பீஜமும் மந்திரமும் காக்கப்பெறின் மந்திர சக்தியான தேவதாசக்தி குன்றுது. அதனுல் பீஜ மந்திர ரஹஸ்யம் உணர்ந்த வெளிப்படையான வழிபாடே உயிருள்ளது. பீஜ மந்திர ரஹஸ்யமறியாது. வெளி வழிபாட்டின் ஆடம்பரம் சவத்தின் அலங்காரமே. (164)

यद्यपीमान्यावश्यिकतरत्वादत्र ग्रन्थे निबद्धानि, तथापि पाण्डित्यबलादेतद्ग्रन्थावलोकनादेव गुरुमनपेक्ष्य स्वीकारः पापायेत्याह -

सद्गुरुकुलतः कृपया लब्धा कामानियं सूते ।
निजबुद्धिमात्रजन्या पापं कन्या यथा स्वीया ।। १६५ ।।

पापं सूत इत्यन्वयः । सद्गुरोः 'सुन्दरः सुमुखः स्वस्थः' इत्यादितन्त्रराजोक्तलक्षणविशिष्टस्य । कृपया सेवाजनितप्रसादेन,

'पारंपर्यविहीना ये ज्ञानमात्रेण गर्विताः । तेषां समयलोपेन विकुर्वन्ति मरीचयः ।।' इति वचनात् । मरीचयो डाकिन्यादयः । विकुर्वन्ति धातुविकारप्रापणेन मारयन्तीत्यर्थः । कन्यापक्षे सद्गुरुः श्वशुरः ।। १६५ ।।

*மிக மிக அவசியமாக பீஜ மந்திர தத்துவத்தை உணர்ந்த பிறகே வழிபாட்டில் இறங்குவது ஏற்றது என்ற கருத்துடன் இங்கு ரஹஸ்யத்தை விண்டு கூறியிருந்தாலும் தன் கூரிய அறிவைமட்டும் பயன்படுத்தி இந்த நூலை ஆராய்ந்து தானே கற்றுணர்ந்து விடலாம் என்ற எண்ணம் தவறானது. வழிபாடு என்பது தன் ஜீவ சக்தியால் தெய்வசக்தியை உணர்வது. அவ்வாறு தெய்வ சக்தி உணர்ந்து தெய்வ வாழ்வு வாழ்கிற குருவிடமிருந்து தீக்ஷைமுறையில் தெய்விக உணர்வுடன் பெற்ற மந்திரமே பலன் தரும். பெண்ணெனக் கண்டதனைத்தையும் மனைவியாக்கிக் கொள்ளமுடியாது. இவள் இனி உன்னைச் சார்ந்தவள் என மனமொப்பிப் பெண்ணின் தந்தையால் வழங்கப்பட்ட பெண்ணே மனைவியாகிறாள். பரம்பரையாக வந்த தெய்வஉணர்வு குருவிடம் தேங்கியுள்ளது. அந்த உணர்வு சிஷ்யனிடம் தானமாகத் தரப் பெறுகிறது. அந்த தெய்வ உணர்வின் உரிமையே தெய்வ வழிபாட்டிற்குத் துணை நிற்கிறது. குருவால் தீக்ஷைமுறையால் தரப்பெறாத மந்திரத்தைப்*

பயன்படுத்துவது கேட்டை விளைவிக்கும். தான் பெற்ற பெண்ணிடமே உறவு கொள்வது போன்றது அது. அவரிடமிருந்து மந்திர தீக்ஷை பெற அவரிடம் நன்மதிப்பும் தன்னடக்கமும் கொண்டு அவர் மனம் நெகிழச் செய்து அவர் தானே மனமுவந்து உள்ளன்புடன் தருகிற மந்திர தீக்ஷையே பலன் தரவல்லது. குருவருளின்றி தேவியை வழிபடும் போது நம் உடலிலுள்ள டாகினி முதலான தெய்வசக்திகளே நம்மைக் கெடுத்து விடும். அதனுல் குருவருள் ஒன்றே தேவி உபாஸனையில் முதலிடம் பெறுகிறது. பின் எதற்கு இந்த நூல் எழுதப்பட்டது ? குருவிடமிருந்து பெற்ற ரஹஸ்யத்தை மறந்து விடாமலும் வேறொரு சிற்றறிவால் குழம்பாமலும் உணர்ந்ததைச் சீர்தூக்கிப்பார்த்துச் செம்மைபெறச் செய்ய இது உதவுமென்றே இந்நூல் எழுதப்பட்டது. ஸம்பிரதாய அறிவு துண்டித்துவிடாமலிருக்க இது பெரிதும் பயன்படும். (165)

'मङ्गलादीनि मङ्गलमध्यानि मङ्गलान्तानि हि शास्त्राणि प्रथन्ते' इति वचनादन्ते मङ्गलमारचयति -

अकथासनं ह-लक्षान्तरं समासाद्य मामकं ज्ञानम् ।
मामकमेवानन्दं मह्यं ददतो जयन्ति गुरुचरणाः ।। १६६ ।।

कथानां वाचामनासनमविषयम् । वाच्यकक्ष्यामतिक्रान्तमिति यावत् । हेति निश्चये । लक्षस्य लक्षणाया अन्तरमवकाशो यस्मिंस्तत् । पक्षे, सहस्रारपद्मकर्णिकामध्यगतत्रिकोणरेखा आदिकादिथादिषोड-शार्णत्रयरूपाः, तन्मध्ये कोणेषु हकारादित्रयम्, तत्र तन्त्रेषु गुरुध्यानं कथितम् । तादृशमासनमित्यर्थः । मामकमात्माभिन्नम् ।। १६६ ।।

மங்களமான எண்ணமும் வாக்கும் செயலும் கொண்டு தொடங்கி மங்களமான அவற்றையே வாழ் நிலையாகக் கடைபிடித்து மங்களமாக முடிப்பதே நல்லது. அவ்வாறே இயற்றிய சாஸ்திர நூல்களே பலரறியப் புகழ்ப்பெறுகின்றன. அதனுல் மங்களமாக

குருவந்தனத்துடன் தொடங்கிய இந்நூலை, மங்களமான தேவிபற்றிய விளக்கத்துடன் விரித்து மங்களமான குரு சரண ஸ்மரணத்துடன் முடிக்கிறார்.

ஹலக்ஷ என்ற இடைவெளியைக் கொண்ட 'अ,क,थ' என்ற மூன்று ரேகைகளில் அமர்ந்தவரும், என் அறிவில் உறைந்தவரும் எனக்கு என்னுடையதேயான ஆத்மானந்தத்தை வழங்குபவருமான என் குருநாதர் ஒளியுடன் விளங்குகிறார்.

அவர் अकथासनः வாக்கிற்கு விஷயமாகாதவர். வாக்கிற்கு எட்டாதவர். ह கட்டாயமாக लक्षावकाशः லக்ஷணையால் உணரப் பெறுபவர்.

அவர். अकथासनं - ஆஜ்ஞா சக்ரத்திற்கு மேல் மஹாபிந்து ஸ்தானத்திலுள்ள ஸஹஸ்ராரகமலத்தில் நடுவே மூன்று கோடுகளாக அமைந்த முக்கோணம் உள்ளது. அதில் முதல் ரேகையில் अ முதல் अः வரை இரண்டாவது ரேகையில் क முதல் त வரை. மூன்றாவதுரேகையில் थ முதல் स வரை உள்ள மாத்ருகாக்ஷரங்கள் இடம்பெறுகின்றன. அவற்றில் அமர்ந்த என் பேரறிவு. हलक्षान्तरं. முக்கோணத்தின் நடுவில் மீதமுள்ள 'ह,ळ,क्ष' என்ற மூன்றும் மூன்று கோணத்தில் உள்ளன. இவற்றில் உள்ளது எனது உள்ளறிவு. அதன் மீதமர்ந்த என் குரு சரணர்கள் எனக்கே உரியபேரானந்தத்தை எனக்கு வழங்குபவர்களாக ஒளியுடன் விளங்குகிறார்கள். (166)

**गुरुचरणैकसहायो भास्कररायो जगन्मातुः ।**
**वरिवस्यातिरहस्यं वीरनमस्यं प्रजग्रन्थ ॥ १६७ ॥**

वीरैः, अहमि रणाङ्गण इदमो वैरिणो नाशं कुर्वाणैः परापञ्चाशिकादौ प्रसिद्धैः । इति सर्वमनवद्यम् ॥ १६७ ॥

அந்த குருவின் திருவடிகளை மட்டும் துணைகொண்டு பாஸ்கரராயர் உலகின் அன்னையின் வழிபாட்டிலுள்ள ரஹஸ்யத்தைத் அழகாக தொகுத்துள்ளார். அது நான் என்ற போர்க்களத்தில் இது என்ற எதிரியை அழிக்கின்ற உபாஸக வீரர்களால் வணக்கத்துடன் ஏற்கப்படுகிறது.

கோசங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் அஹம் என்பதைப் பிரிக்க, காமம் கோபம் முதலிய எதிர்ப்பெண்ணங்கள் கூடிய 'இதம்' 'இது' என்ற உலகால் ஏற்பட்டகட்டை உடைக்கப் போரிட்டு வென்று அஹமாகிற பரமாத்மாவாக தேவியாக தன்னை உணர்பவர்களே வீரர்கள். வழிபாட்டின் ரஹஸ்ய மடங்கிய இந்நூல் அவர்களது ஸாதனையில் பெரிதும் உதவக்கூடியது. அதனுல் இதை அவர்கள் வணக்கத்துடன் ஏற்பர். (167)

वस्तु प्रस्तुतमस्तु निस्तुलमहः स्तोमास्तितावास्तु नो
हस्तन्यस्तसमस्तपुस्तकभरध्वस्तासदेनस्तति ।
शस्तस्वस्तिकृदस्तदुस्तरतमः स्वस्तोकसौवस्तिकं
गीस्तोयस्तनयित्नुसुस्तनयुगं वास्तोष्पतिप्रस्तुतम् ॥ १६८

இணையற்ற ஒளிக்குவியலுக்கு இருப்பிடம், கையில் ஏந்திய அனைத்து புஸ்தகக் குவியலால் அறிவிலிகளின் பாப இருளை நீக்குவது. நல்ல ஒழுக்கமுள்ளவர்களுக்கு எல்லா நன்மைகளும் வழங்குவது, கடக்க இயலாத அறியாமைப் பேரிருளை உதைத்து நீக்குவது, தேவருக்கு நன்மை தருவது, பேச்சாற்றல் பெருக்கை இடியோசையுடன் பாலாகப் பொழிகிற இரு மார்பகங்களுள்ளது, இந்திரனுல் கண்டறியப்பெற்றது, அந்த மாபெரும் தத்துவம் நமக்குப் புலப்படுவதாக நம்மால் உணரப்பெறுவதாக ஆகட்டும். (168)

इति श्रीमत्पदवाक्यप्रमाणपारावारपारीणसर्वतन्त्रस्वतन्त्र-श्रीनृसिंहानन्दनाथचरणारविन्दमिलिन्देन श्रीमद्गम्भीररायभारती-दीक्षितात्मजेन भास्कररायापरनाम्ना भासुरानन्दनाथेन प्रणीतं सव्याख्यानं वरिवस्यारहस्यं संपूर्णम् ।

*பதம் வாக்யம் பிரமாணம் என்ற மூன்றுசாஸ்திரங் களிலும் இருகரைகளையும் எட்டி முழுதும் ஆராய்ந்தவரும் எல்லா செயல் முறைகளிலும் தன்னிச்சை யாகச் செயல்படுபவருமான ஸ்ரீ ந்ருஸிம்ஹாநந்த நாதரின் திருவடித் தாமரைகளைச் சுற்றிவருகிற தேனீயும், சீர்மிக்க கம்பீரராயபாரதீ தீக்ஷிதரின் புதல்வரும் பாஸ்கரராயர் என்ற மாற்றுப் பெயர் கொண்டவருமான பாஸுராநந்த நாதரால் இயற்றப்பட்ட உரையுடன் கூடிய*

வரிவஸ்யாரஹஸ்யம் நிறைவுற்றது.

<table>
<tr><td></td><td>गुदोपरि<br>द्व्यङ्गुलोर्ध्वे</td><td>भारती<br>ब्रह्मा</td><td>लिङ्गे<br>स्वाधिष्ठानम्</td><td>भूमिः<br>विष्णुः</td><td>नाभौ<br>मणिपूरकम्</td><td>ई-मिथुनम्<br>र्-रुद्राणी<br>ह् - रुद्रः</td><td>हृदि<br>अनाहतम्</td><td>विष्णुः<br>भारती<br>ब्रह्मा</td><td>कण्ठे विशुद्धिः</td><td>भूमिः<br>ब्रह्मा</td><td>भ्रूमध्ये<br>आज्ञा</td><td>भूमिः<br>विष्णुः<br>भारती</td><td>ललाटमध्ये<br>सहस्रारम्<br>स्वप्नः<br>जागरः</td><td>सुपुप्तिः तुर्यावस्था तुर्यातीतावस्था</td></tr>
<tr><td></td><td>·~——</td><td>— अ/व —</td><td>——————</td><td>— ~अ —</td><td>—————</td><td>——— ॐ ——</td><td>——————</td><td>— ~ अ अ —</td><td>————</td><td>—— ~ अ —</td><td>—— ॐ —</td><td>अ अ अ —</td><td>— ~ ~ ~ —</td><td>-|· C ◁ ○ ○ ○— ○◁ ○—○ ○— ○</td></tr>
<tr><td>दलानि<br>अक्षराणि<br>परिवारः<br>योगिन्यः<br>धातवः</td><td>४<br>व-स<br>वरदादिः<br>साकिनी<br>अस्थि</td><td></td><td>६<br>ब - ल<br>बन्धिन्यादिः<br>काकिनी<br>मेदः</td><td></td><td>१०<br>ड-फ<br>डामर्यादिः<br>लाकिनी<br>मांसम्</td><td></td><td>१२<br>क-ठ<br>कालरात्र्यादिः<br>राकिनी<br>असृक्</td><td></td><td>१६<br>अ - अः<br>अमृतादिः<br>डाकिनी<br>त्वक्</td><td>स्वप्नः</td><td>२<br>ह, क्ष<br>हंसवत्यादिः<br>हाकिनी<br>मज्जा</td><td></td><td>१०००<br>अमृतादिः<br>याकिनी<br>शुक्लम्</td><td>बिन्दुः<br>अर्धचन्द्रः<br>रोधिनी<br>नादः<br>नादान्तः<br>शक्तिः<br>व्यापिका<br>समना<br>उन्मनी<br>महाबिन्दुः</td></tr>
<tr><td>कृत्यानि<br>त्रिपुटी<br>चक्राणि<br>नाथाः<br>अवस्थाः<br>शक्तयः<br>आत्मानः<br>तत्त्वानि<br>पीठानि<br>अन्वयाः<br>लिङ्गानि</td><td></td><td></td><td></td><td>सृष्टिः<br>ज्ञाता<br>अग्नि-<br>मित्रेश-<br>जागरः<br>वामा<br>इच्छा<br>कामेश्वरी<br>आत्मा<br>आत्म-<br>कामगिरिः<br>प्राक्-<br>स्वयंभू</td><td></td><td></td><td></td><td>स्थितिः<br>ज्ञानम्<br>सूर्य-<br>षष्ठीश-<br>स्वप्नः<br>ज्येष्ठा<br>ज्ञाना<br>वज्रेश्वरी<br>अन्तरात्मा<br>विद्या-<br>पूर्णगिरिः<br>दक्षिण-<br>बाण-</td><td></td><td></td><td></td><td>संहारः<br>ज्ञेयम्<br>सोम-<br>उड्डीश-<br>सुपुप्तिः<br>रौद्री<br>क्रिया<br>भगमालिनी<br>परमात्मा<br>शिव-<br>जालन्धरः<br>पश्चिम-<br>इतर-</td><td>अनाख्या<br>सामरस्यम्<br>ब्रह्म-<br>चर्यानन्द-<br>तुर्या<br>शान्ता<br>अम्बिका<br>महात्रिपुरसुन्दरी<br>ज्ञानात्मा<br>सर्व-<br>ओड्याणम्<br>उत्तर-<br>पर-</td><td>शब्दार्थप्रकाशक - वेदादिशास्त्राध्यापन - स्मरण प्रयोजक-<br>बुद्धिव्यापन लहरीगुणकथा स्वप्रकाशसंविद्रा अनिष्टनिवारण-<br>भोगमोगादि प्राप्याधिक्य कीर्तिजालप्रयोजक गुणसन्ततिरचयित्री<br>सर्वतत्त्व-सर्वकलाधिष्ठात्री विश्वोत्पत्ति-स्थिति-संहृतिजनक-सर्वैश्वर्यापत<br>निरतिशयानन्दानुभवप्रकाशिका निरतिशयानन्दात्मक-दहराकाशस्थ-<br>परमात्मस्वरूपिणी स्वप्रकाशा चिच्छक्तिः</td></tr>
<tr><td>मातृकाः</td><td>परा</td><td></td><td></td><td></td><td>पश्यन्ती</td><td>वह्निकुण्डलिनी</td><td>मध्यमा,</td><td>सूर्यकुण्डलिनी</td><td>वैखरी</td><td></td><td></td><td colspan="2">सोमकुण्डलिनी</td><td></td></tr>
</table>

१. वा ग्भ व कू ट म्

त्रैलोक्यमोहनम्, सर्वाशापरिपूरकम्, सर्वसंक्षोभणम् .

(९) भूपुरम्, (८) षोडशदलम्. (७) अष्टदलम्.

२. का म रा ज कू ट म्

सर्वसौभाग्यदायकम्, सर्वार्थसाधकम्, सर्वरक्षाकरम्.

(६) चतुर्दशारम्, (५) बहिर्दशारम्, (४) अन्तर्दशारम्

३. श क्ति कू ट म्

सर्वरोगहरम्, सर्वसिद्धिप्रदम्, सर्वानन्दमयम्

(३) अष्टारम्, (२) त्र्यश्रम्, (१) बिन्दुः

# பொருளகராதி

॥ ஸ்ரீ குருநாதாய நம: ॥ ॥

ஸ்ரீ வித்யா கணேசாய நம: ॥

# ஸ்ரீ வாஞ்சா கல்பலதா

# ஸ்ரீ வித்யா கணபதி உபாஸநாபீடம்,

*தஞ்சாவூர்*

***பீடத்தைப் பற்றி சிறு விளக்கம்***

1. *ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனா யோகபீடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவித்யாகணேச ஸ்வாமிகளின் பூர்வாச்ரம சரித்ரச் சுருக்கம்*
2. *ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ குருநாதரால் ஆட்கொள்ளப்பட்ட விதம்*
3. *பாமர மக்களுக்காக ஸ்ரீ குருநாதர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் உபதேசித்து அருளிய ஸ்ரீ மஹாகணபதி ப்ரார்த்தனா மஹாமந்த்ரம்.*
4. *உபாஸனா யோகபீட குறிக்கோள். தினசரி நடக்கும் பூஜைகள் - வருட உத்ஸவங்கள்.*
5. *ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனா தத்வம் - ஸ்வரூப விளக்கங்கள்.*
6. *ஸ்ரீ ஸ்வாமிகளிடம் ஸ்ரீ குருநாதர் செய்யும் யோக க்ரியைகள் - தீக்ஷைகள் - யோக பீடத்தில் நடக்கும் உபாஸனா யோகங்கள்.*
7. *குரு தத்வம் - ஸ்ரீ மஹாமேரு ச்ருங்கத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளின் ப்ரத்யக்ஷ அனுபவம் - அம்பாள் ஆக்ஞையின்படி ஸ்ரீ ஸ்வாமிகள் பாடிய குருகீதம்.*

*இவை இங்கு விளக்கப் பெறுகின்றன. விளக்கம் தருபவர் ஸ்ரீபாலஹம்ஸாநந்த நாதர்.*

## ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யா கணபதி உபாஸனா யோகபீடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ வித்யாகணேச ஸ்வாமிகளின் பூர்வாச்ரம சரித்ரச் சுருக்கம்

*தற்போது தஞ்சையில் ''ஸ்ரீ வித்யாகணேச நிகேதம்'' என்கிற ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனா யோகபீடத்தை நிர்மாணம் செய்து அதன் பீடாதிபதியாய், தசமஹா ஸித்திகளையும் வென்ற மஹாஸித்த புருஷராய், குஹ்யாவதாரமாய் மறைந்து போன ஸித்தயோக க்ரமத்தில் உள்ள ஸ்ரீ வித்யா கணபதி உபாஸனையில் பிலத்வார தீக்ஷை முதல் அதிவர்ணாச்ரம அந்தர்முக தீக்ஷை, துரீயாதீத பரமஹம்ஸதீக்ஷை முடிய பூர்ண யோக தீக்ஷைகளை அடைந்தவராய், ஸ்ரீ குருநாதரின் ஆணைப்படி தனது உலகியல் வாழ்க்கை, குடும்பம், உடமைகள், சரீரம் அனைத்தையும் அவரிடம் அர்ப்பணம் செய்தவராய் அகில உலகிலுள்ள எல்லா உயிர்களின் நலனுக்காக யோகோபாசனை செய்து கொண்டு அருள்பாலிப்பவரே ''ஸ்ரீ கணேச பரமஹம்ஸானந்தநாத ஸ்ரீ வித்யாகணேச:'' என்ற தீக்ஷாநாமம் பெற்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவித்யா கணேச ஸ்வாமிகள். (ஸ்ரீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரம நாமதேயம் 'கணேசா' என்கிற வேங்கடராம சர்மா).*

*நான் (தற்போது 'பாலஹம்ஸானந்தநாத ஸ்ரீ வித்யா கணேச:' என்ற தீக்ஷாநாமம் பெற்ற துரீயாதீத ஹம்ஸாச்ரமீ) ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பூர்வாச்ரமத்தில் மாதாமகராய் இருந்து அபிமான புத்ரராக அவரை வளர்த்து, என் பத்னியின் (25-4-1978) மறைவிற்குப் பிறகு 1979-ல் ஸ்வீகார புத்ரராக ஏற்றுக் கொண்டு பின்னர், காலத்தின் நிர்பந்தத்தால் லோகோபகாரத்திற்காக ஸெப்டம்பர் 1997ல் ஸ்ரீ குருநாதருக்குத் தானமாக தாரை வார்த்துக் கொடுத்தேன். ஸ்ரீ ஸ்வாமிகளும், குருநாதரின் ஆணைப்படி தன்னுடைய சரீரம் உட்பட அனைத்தையும் ஸ்ரீ குருநாதரிடம் பூர்ணமாக அர்ப்பணித்தார். ஸ்ரீ குருநாதர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அதிவர்ணாச்ரம அந்தர்முக தீக்ஷை முதல், துரீயாதீத பரமஹம்ஸ தீக்ஷை முடிய பூர்ண யோக தீக்ஷைகளைத் தந்தார். ஸ்ரீ குருநாதருக்கு புத்ரனை தானம் கொடுத்த* ''दाता''

என்ற ஸ்தான மஹிமையால் நானும் ஸ்ரீ குருநாதரின் அனுக்ரஹத்தால், ஸ்ரீ ஸ்வாமிகளிடம் இருந்து ஹம்ஸாச்ரம தீக்ஷை பெற்று, தற்போது அவரது ப்ரதம சிஷ்யனாக இருப்பதை பரமபாக்யமாகக் கருதுகிறேன். ஸ்ரீ மஹாகணபதியே ஸ்ரீ குருநாதராய், குஹ்யாவதாரமான ஸ்ரீ ஸ்வாமிகளாய் உறவுமுறையில் என்னிடம் பேரனாய் வளர்ந்து, என்னை ஆட்கொண்ட விதம் அலாதியானது. அவரது பூர்வாச்ரம சரிதத்தை அவரது பூர்வாச்ரம 'மாதாமஹர்' என்ற முறையில் ஜ்ஞாபகம் வந்தவரைச் சொல்ல விழைகிறேன்.

***ஸ்ரீ ஸ்வாமிகளின் குடும்பம் :-***

ப்ரஸித்தமான ராமாயண, பாகவத உபந்யாஸகரான சிமிழி ஸ்ரீ வெங்கட்ராம சாஸ்த்ரிகள் சிமிழியிலும், தஞ்சையிலும் வாழ்ந்தார்கள். அவரது மூத்த குமாரனான பால க்ருஷ்ணசாஸ்த்ரி என்கிற நான் 23 - 3 - 1912ல் பிறந்தேன். ஸம்ஸ்க்ருத ஆசிரியராகப் பணிபுரிந்து ஓய்வுபெற்றேன். என்னுடைய ஒரே ஒரு பெண்ணான 'மைதிலி' என்பவளுக்கு 1956ல் ஸ்ரீ ஓ.எஸ். ஸந்தானம் என்பவருடன் விவாஹம் நடந்தது.

குஹ்யாவதாரமான ஸ்ரீ ஸ்வாமிகள் மைதிலி ஸந்தானம் தம்பதிகளுக்கு மூத்த குமாரனாக, ஹேமலம்ப வருஷம் சித்திரை மாதம், சித்ரா பௌர்ணமி அன்று (12 - 5 - 1957) சித்திரை நக்ஷத்ரம் 3-ம் பாதத்தில் தஞ்சையில் அவதரித்தார். கணேசா என்கிற வேங்கடராம சர்மா என்ற பெயர் வைக்கப் பெற்றார்.

மாதாமஹரான என்னிடம் குடவாயிலில் அபிமான புத்ரராக வளர்ந்தார். ''விளையும் பயிர் முளையிலே தெரியும்'' என்பதுபோல சிறுவயது முதற்கொண்டே, மற்ற குழந்தைகளுடன் அதிகம் பழகாதவராய், தனிமையை விரும்பியவராய் தெய்வ வழிபாட்டில் ஈடுபாடு உடையவராய் இருந்தார்.

1957 - 1967 - குடவாசல் வாஸம்
11 - 6 - 1967 - தஞ்சையில் உபநயனம்

*1968 - 1970 - தஞ்சை வாஸம்*

*1970 - 1978 - திருச்சி வாஸம்*

*படிப்பு* - B.Sc., Typewriting, Shorthand - Higher, Dec 1978 - Dec 1983 - Hosur*க்கு அருகிலுள்ள* Bagalur Premier Mills-*ல்* Senior Steno-*வாகப் பணிபுரிந்தார்.*

Dec 1983 - April 1993 - *மதுரை* T.V.S. Srichakra Tyres*ல்* Executive Secretary to Vice Chairman*ஆக பணிபுரிந்தார்.*

April 1993 - *தற்போதுவரை - தஞ்சை வாஸம்*

*சிறு வயதிலேயே என்னிடமிருந்து பரம்பராகதமான மந்த்ரங்கள், ஸம்ஸ்க்ருதம், ஹிந்தி, ராமாயண - பாகவத - பாராயணம், முக்யமான வேதமந்த்ரங்கள் ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார். திருச்சியில் வஸித்தபோது என்னுடைய பூர்வாச்ரம ஸஹோதரனான ஆயுர்வேத வைத்யர் ஸ்ரீ* S.V. *ராதாகிருஷ்ண சாஸ்த்ரியிடமிருந்து வாக்வாதினீ ஸரஸ்வதி மற்றும் நகுலீ மந்த்ரங்களை உபதேசம் பெற்றார்.*

*25 - 4- 1978ல் ஸ்ரீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரம மாதாமஹீ (என்னுடைய பத்னீ) காலமானாள். ஸ்ரீ ஸ்வாமிகள் அபிமான புத்ரராகக் கார்யங்களைச்செய்தார். மாதாமஹி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் அளவற்ற ப்ரியமுடன் இருந்ததால் அவளின் மறைவு ஸ்ரீ ஸ்வாமிகளை மிகவும் பாதித்தது. வாழ்க்கையில் விரக்தி அடைந்தார். சில மாதங்கள் திருச்சி மலைவாசல் மாணிக்க விநாயகரை 'கணேச வித்யா' மந்த்ரத்தை மனனம் செய்தவராய் பல முறை வலம் வந்தார். ஸ்ரீ மஹாகணபதியின் அருளால் டிஸம்பர் 1978-ல் கோயம்புத்தூர் ப்ரீமியர் மில்ஸில் வேலை கிடைக்கப் பெற்று ஆறு மாதங்கள் அங்கிருந்து பின் பகளூர் சென்றார். ஏப்ரல் 1979-ல் மாதாமஹீயின் ஆப்திகத்திற்கு முன் எனது ஸ்வீகார குமாரரானார்.*

*31 - 5 - 1982ல், நன்னிலம் நித்யாக்னி ஹோத்ரி ஸ்ரீ சேதுராம தீக்ஷிதரின் புத்ரி, ஸௌ.கீதா என்கிற மீனாக்ஷியை விவாஹம் புரிந்தார்.*

*13 - 3 - 1985ல் - மூத்த குமாரன், க்ருஷ்ணன் என்கிற சிவராம க்ருஷ்ணசர்மா, கேட்டை நக்ஷத்ரத்தில் ஜனனம்*

*12 - 9 - 1988ல் - இளைய குமாரன், ஸ்ரீவத்ஸன் என்கிற சேதுராம சர்மா ஹஸ்த நக்ஷத்ரத்தில் ஜனனம்*

மதுரையில் வஸிக்கும்போது 6 - 8- 1990ல் சந்த்ர க்ரஹண புண்ய காலத்தில் என்னிடமிருந்து ஸ்ரீ வல்லப கணபதி, ஸ்ரீ பாலாத்ரிபுரசுந்தரீ, ஸ்ரீ மூலவித்யா பஞ்சதசீ, ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷரீ மந்த்ரங்களை உபதேசம் பெற்றார். அன்று முதல் ஸ்ரீ மஹாகணபதியிடமும், ஸ்ரீ மஹாத்ரிபுர ஸுந்தரியிடமும் மிகுந்த ஈடுபாடு ஏற்பட்டு ஸ்ரீ சக்ர பூஜையும் செய்து வந்தார்.

அலுவலகத்தில் கடின உழைப்பின் காரணமாய் "Executive Secretary to Vice Chairman' என்ற உயர்பதவியையும் அடைந்தார். மிகவும் பொறுப்பான பதவியை நிர்வஹித்துக் கொண்டே கடின உழைப்புடன் நவராத்ரி காலங்களில் ஸ்ரீ சக்ரத்திற்கு லக்ஷார்ச்சனையும் செய்து வந்தார். அடிக்கடி (குஹ்யாவதார ஸூக்ஷ்மத்தாலோ என்னவோ) கோச்சடையில் உள்ள ஸ்ரீ குழந்தையானந்த ஸ்வாமிகள் அதிஷ்டானத்திற்குச்சென்று வருவார். இப்படி இருக்கும் போது 1990-ம் வருடம் ஸெப்டம்பர்மாத பௌர்ணமி பூஜையின்போது, ஸ்ரீ குழந்தையானந்த ஸ்வாமிகள் அதிஷ்டானத்தில் ஸூக்ஷ்மத்தில் ஸ்ரீ குழந்தையானந்த ஸ்வாமிகள் வந்தபோது, ஸ்ரீ ஸ்வாமிகள் அவரை வந்தனம் செய்தார். ஸ்ரீ குழந்தையானந்தர் ஸ்ரீ ஸ்வாமிகளைப் பார்த்து, ''என்ன வேண்டும்? கேள்!'' என்றார். உடனே ஸ்வாமிகள் அதற்கு உலக விஷயமாக எதையும் கேட்காமல் ''அம்பாளின் மந்த்ரத்திலும் அம்பாளிடமும் சஞ்சலமில்லாத ஸ்திரமான பக்தி வேண்டும்'' என்று ப்ரார்த்தித்தார். அதற்கு குழந்தையானந்தர், ''குழந்தாய் ! உன் குஹ்யாவதாரம் உனக்குத் தெரியாதா ? எனக்கு நீ வந்தனம் செய்வது கூடாது. எனக்கு நீ குருமுறை. என் அம்மா மீனாக்ஷி உன்னிடம் எப்போதும் உள்ளாள். நீ இப்போது இருப்பதுபோல்

இருக்கமாட்டாய். உன்னுடைய ஸூக்ஷ்மத்தை மஹாஸித்த புருஷர்களைத் தவிர யாராலும் புரிந்து கொள்ள முடியாது. உன்மூலம் அம்பாள் பல லீலைகளை இவ்வுலகிற்கு நடத்த இருக்கிறாள். உன்னுடைய குஹ்யாவதார கார்யம் இன்னும் சில வருடங்களில் ஆரம்பிக்கப் போகிறது'' என்று சொல்லி மாதுளம்பழத்தைத் தந்தார். ஸ்ரீ ஸ்வாமிகள் தன் குஹ்யாவதார ஸூக்ஷ்மத்தால் நடந்த இந்த நிகழ்ச்சியை யாரிடமும் வெளிக்காட்டாமலே இருந்துவிட்டார்.

மதுரையிலேயே வஸிக்கப் போகிறோம் என்ற நினைப்பில் ஆகஸ்ட் 1991-ல் 'ஜெயநகர்' என்ற இடத்தில் வீடுகட்டி க்ருஹப்ரவேசம் செய்தார். உயர்ந்த பொறுப்பான பதவியில் நல்ல பெயருடனும், ஸ்ரீ வித்யோபாஸனையையும் விடாமலும், தினமும் காலை நான்கு மணி முதல் இரவு 11 மணி வரை கடுமையாக உழைத்து வந்தார்.

இந்நிலையில் ஸ்ரீ ஸ்வாமிகளின் குஹ்யாவதார கார்யத்தை நிறைவேற்றுவதற்காக, அம்பாள் ஒரு பெரிய லீலையைச் செய்ய ஆரம்பித்தாள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் திடீரென செப்டம்பர் 1992-ல் இருந்து மிகவும் கடுமையான தீராத வயிற்று வலிக்கும், வயிற்றுப் போக்குக்கும் உள்ளானார். (இந்த வயிற்றுவலி பிறகு ஸ்ரீ குருநாதர் அனுக்ரஹத்தால் 30 - 1 - 1994 இரவுதான் நீங்கியது. அதுவரை ஸ்வாமிகள் சொல்லமுடியாத துயரத்திற்கு ஆளானார்.) மருத்துவர்களும், வ்யாதியைச் சரியாக புரிந்துகொள்ள முடியாதபடி வ்யாதி வளர்ந்தது. கடுமையான "Peptic Ulcer' என்ற நிலையில், செய்துவரும் பொறுப்பான பணியைச் சரியாக செய்யமுடியாததால் உடல் நலனைக் கருதி வேலையை ராஜினாமா செய்துவிட்டு மே 1993-ல் குடும்பத்துடன் தஞ்சை வந்தார். தஞ்சையில் மேற்கொண்ட ஆயுர்வேத, ஹோமியோபதி மருத்துவங்களும் எந்த முன்னேற்றத்தையும் அளிக்கவில்லை. நெருங்கிய உறவினர்கள்பலரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் உண்மை நிலையைப் புரிந்து கொள்ளாமல் அவரை ஏளனம் செய்தும் மனத்தைப்

புண்படுத்தியும் வந்தார்கள். ஸ்வாமிகள் எதையும் பொருட்படுத்தாமல், தன்னுடைய குஹ்யாவதார நிலையையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல், பொறுமையாக மூலமந்த்ரத்தை மனனம் செய்து வந்தார்.

**2. ஸ்வாமிகள் ஸ்ரீ குருநாதரால் ஆட்கொள்ளப்பட்ட விதம் :-**

ஸ்ரீ ஸ்வாமிகளுக்குச் சிறுவயது முதல், ஸ்ரீ அகஸ்த்யரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு, திருவையாறு - கும்பகோணம் சாலையில் 'கணபதி அக்ரஹாரம்' என்ற க்ராமத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மஹாகணபதியிடம் ஈடுபாடு இருந்ததால், அவரது ஆலயத்திற்குச் சென்று, அவரே கதியென உறுதியான நம்பிக்கையுடன் தீராத வயிற்று வலியையும் பொருட்படுத்தாமல், பட்டினியுடன் வல்லபகணபதி மந்த்ரத்தையும், அதர்வ வேதத்திலுள்ள 'ஸ்ரீ கணபத்யதர்வசீர்ஷ உபநிஷத்தையும்', மவுனமாக ஜபம் செய்து கொண்டு ஏறக் குறைய 8000 ப்ரதக்ஷிணங்களைச் செய்தார். ஸ்ரீ மஹாகணபதியைத் தவிர வேறு வழியில்லை என்ற தீவ்ரமான குற்றமில்லாத, குழந்தைத்தனமான நம்பிக்கையுடன் வாழ்க்கைக்கும், உடல்நலத்திற்கும் நல்வழிகாட்ட மனமுருகி வேண்டினார். ஏறக்குறைய -7 மாதங்கள் பொறுக்க முடியாத உபாதையுடனும், பொருளாதார ச்ரமத்துடனும் இந்த வேண்டுதல் தொடர்ந்தும் எந்த பலனும் இல்லை. இந்நிலையில் தான் **(26-11-1993) ஸ்ரீமுக வருஷம் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷ த்ரயோதசி** அன்று மனமுடைந்து தற்கொலை செய்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்ற நிலைக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் தள்ளப்பட்டார். அன்று இரவு தஞ்சையில் ''ஆண்டாள்'' நகரில் குடியிருந்த வீட்டில், நாங்கள் எல்லோரும் உறங்கிய பின்பு 11 மணியளவில் ஸ்ரீ மஹாகணபதியையும், அம்பாளையும் ப்ரார்த்தனை செய்து கொண்டு, மறுநாள் காலைக்குள் நல்வழிக் காட்டாவிட்டால், வாழ்வது முடியாத செயல் என்ற தீர்மானத்துடன், வல்லப கணபதி பஞ்சதசீ மந்த்ரங்களை, செய்யவிருக்கிற தவறான கார்யத்திற்குப் ப்ராயச்சித்தமாக

ஜபம் செய்துவிட்டு அவரை அறியாமலேயே உறங்கிவிட்டார். அன்றிரவு ஸ்வப்னத்தில் ஸ்வாமிகளை ஸித்தபுருஷ உருவில் ஆட்கொள்ள வந்தவரே, இன்று ஸ்ரீ மஹாகணேச பரமஹம்ஸானந்தநாத, ஸ்ரீ குருநாதராக இருந்து கொண்டு இவ்வளவு உபாஸனைகளையும் நடத்தி வருபவர். பின்னர்தான் ஸ்ரீமஹாகணபதியே அந்த ஸித்த புருஷராய் வந்தார் என்பதை ஸ்ரீ ஸ்வாமிகள் அறிந்தார்.

அன்றைய கனவின் விபரம் :-

கனவில் வந்த அந்த வயதான ஸித்த புருஷர் ஸ்ரீ ஸ்வாமிகளின் கையைப்பிடித்து இழுத்துக்கொண்டு வேகமாக எங்கெங்கோ காடு மலைகளெல்லாம் சென்றார். அவர் சென்ற வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியாமல் ஸ்ரீ ஸ்வாமிகள் மயக்கமடைந்தார். ஸித்தர் ஸ்ரீ ஸ்வாமிகளின் முகத்தில் தண்ணீர் தெளித்து எழுப்பினார். ஸ்ரீ ஸ்வாமிகளுக்குக் கண்ணைப் பறிக்கும் பேரொளியைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை. ஸித்தர் ஸ்வாமிகளைப் பார்த்து, ''ஏய் ! குழந்தாய் ! ஸ்ரீ ராஜராஜேஸ்வரி தெரிகிறாளா ?'' என்று கேட்டார். ஸ்ரீ ஸ்வாமிகள், ''பேரொளியைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை, பார்க்க முடியாமல் கண்கள் கூசுகின்றன'' என்றார். உடனே ஸித்தர், ''உனக்கு ஜ்ஞானதிருஷ்டி தருகிறேன், பார்'' என்றார். ஸ்ரீ ஸ்வாமிகள் தான் உபாஸித்துவந்த ஸ்ரீ மூலவித்யா பஞ்சதசியின் அதிஷ்டான தேவதையான ஸ்ரீ ராஜராஜேச்வரி தங்க ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து இருப்பதைக் கண்டு மனம் பூரித்துப் போனார்.

ஸித்த புருஷர் உடனே ''குழந்தாய் ! என்னை நன்றாகப் பார் !'' என்று சொல்லிவிட்டு வேகமாக ராஜராஜேஸ்வரியிடம் சென்று மறைந்துவிட்டார். பின்னர் ராஜராஜேஸ்வரி கம்பீரமான குரலில் பேச ஆரம்பித்தாள் :

''குழந்தாய் ! நாளை என் பிள்ளையிடம் (ஸ்ரீ மஹாகணபதியிடம்) சென்று என் ஹோரையில் (சுக்ர ஹோரை) ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி மந்த்ரத்தை

உபதேசம் பெறு'' ''தெற்கே கோமதி என்ற பெயரில் நான் இருக்கிறேன். முடிந்தபோது அங்கு வந்து என்னைப் பார்'' என்று சொல்லி உடன் மறைந்து விட்டாள்.

ஸ்வாமிகள் விழித்துக் கொண்டு பார்த்ததில் சனிக்கிழமை விடியற்காலை மணி 4 ஆகியிருந்தது. தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்தைக் கைவிட்டு, அம்பாளின் ஆணைப்படி ஞாயிறு காலை கணபதி அக்ரஹாரம் சென்று சுக்ரஹோரையில் ஸ்ரீ மஹாகணபதி ஸந்நிதியில் கனவில் வந்த ஸித்தரான ஸ்ரீ குருநாதராலேயே ஸ்ரீ வித்யாகணபதி மந்த்ரத்தை உபதேசம் பெறும் பாக்யத்தை ஸ்ரீ ஸ்வாமிகள் பெற்றார்.

ஸ்ரீ குருநாதர் மந்த்ரத்தை உபதேசித்து விட்டு ஸ்வாமிகளின் வலதுகாதில் 'இஹலோகத்தைப் பற்றியும், மந்த்ர ஸூக்ஷ்மங்களைப் பற்றியும் பல விஷயங்களைச் சொன்னார். ஸ்ரீ ஸ்வாமிகளையும் அவரது குடும்பத்தையும் தான் பரிபூர்ணமாக ஆட்கொள்வதாகவும், சிறந்த வழியைக் காட்டுவதாகவும் வாக்குக் கொடுத்தார். ''நீ குஹ்யாவதாரமாய் இந்த உலகிற்கு வந்துள்ளாய். உன்னால் பல ஜீவன்களுக்கு ஆத்மோபகாரம் செய்ய வேண்டியுள்ளது. எவ்வளவு எதிர்ப்புகள், மனக்குறைகள், கஷ்டங்கள் வந்தாலும் தைர்யமாக இரு. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றார். அம்பாள் ஆணையிட்ட கோமதி அம்பாளைப் பற்றிக் கேட்டதற்கு, ''நேரம் வரும்போது நானே அழைத்துச் செல்கிறேன். அதுவரை பொறுமையாக இரு'' என்றார்.

ஸ்வாமிகள் உபதேசத்தைப் பெற்று மனத்திருப்தியுடன் ஸ்ரீ மஹாகணபதியை வலம்வந்து ''ஸ்கூட்டரில்' தஞ்சை திரும்பினார். திரும்பும் வழியில் எதிர்பாராதபடி பலத்த மழை பெய்தது. பசுபதி கோயில் தாண்டி, சாலையின் ஓரத்தில் வழுக்க அருகில் இருந்த சேற்றில் ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்கூட்டருடன் புதைந்து காயமடைந்தார். மரணாவஸ்தையில் இருந்தார். ஒரு நொடியில் அனைத்தும் நடந்து முடிந்தது. அப்போது ஸ்ரீ குருநாதர் யானை உருவத்தில்

ஸ்கூட்டரையும், ஸ்வாமிகளையும் தூக்கி நிறுத்தி தன்னுடைய ஸித்த புருஷ தர்சனத்தை முதல் முறையாக நேரில் கொடுத்தார். உடனே ஸ்வாமிகள் குருநாதரிடம் வருத்தத்துடன் ''என்னை இப்படி செய்து விட்டீர்களே. தங்கள் வாக்குக்கு இதுவா பலன்? என்னை நம்பி என் வயதான மாதாமஹர், பத்னி மற்றும் குழந்தைகள் உள்ளனர்'' என்று புலம்பினார். உடனே ஸ்ரீ குருநாதர் ஸ்வாமிகளையும் ஸ்கூட்டரையும் தன்னுடைய கரஸ்பர்சத்தால் ஒன்றும் நடக்காதது போல் சில நொடிகளிலேயே பழைய நிலைக்குக் கொண்டு வந்தார். பிறகு ஸித்த புருஷர் ஸ்ரீ ஸ்வாமிகளை குஹ்யாவதாரத்தின் பொருட்டு 11 சரீரங்களாக மாற்றினார். அவற்றில் முதலாவதான பாஞ்சபௌதிக ஸ்தூல சரீரத்தை, பழைய சரீரம் போலவே யாருக்கும் எந்த வேறுபாடும் தெரியாமல் தஞ்சைக்கு அனுப்பினார். மற்ற 10 திவ்ய சரீரங்களை திருவண்ணாமலையிலுள்ள ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம், யோகாக்னி என்ற ஆறு அக்னிகளுக்கும் ப்ரஹ்மமானஸ ஸரோவர தபோவனம், மஹாகைலாசம், மஹாமேரு ச்ருங்கம், காஷ்மீர யோகாக்னி என்ற 4 இடங்களுக்கும் அனுப்பிவைத்தார். ஸ்வாமிகளிடம், ஸ்ரீ குருநாதர் இந்த நிகழ்ச்சியைப் பற்றி தற்போது யாரிடமும் எதுவும் சொல்ல வேண்டாம் என்றும், நேரம் வரும்போது தானே தெரிய வைக்கிறேன் என்றும் கூறிவிட்டார். அந்த ஆணையின்படி ஸ்வாமிகளும் நடந்த விஷயம் எதையும் யாருக்கும் சொல்லவில்லை. பின்னர் 7 வருடங்களுக்குப் பிறகுதான் ஒருநாள் பூஜையின் போது குருநாதர் பீடத்தில் இந்த விஷயத்தை தெரிவித்தார்.

பின்னர் பலநாட்கள் ஸ்வாமிகள் ஜபம் செய்யும்போது ஸ்ரீ குருநாதர் வலது காதில் பல மந்த்ர ஸூக்ஷ்மங்களை உபதேசித்தார். இதற்கிடையில் 4 - 1 - 1994 வெள்ளியன்று ஸ்ரீ ஸ்வாமிகள் பூஜை செய்யும்போது தற்செயலாக தினசரி காலண்டரைப் பார்த்ததில், ''சங்கரன் கோவில் கோமதியம்மன் புஷ்பப்பாவாடை'' என்ற வாசகத்தைக் கவனித்தார். உடனே பூஜையை முடித்துக் கொண்டு கணபதி

அக்ரஹாரம் சென்று மஹாகணபதி ஸந்நிதியில் ஜபம் செய்தார். குருநாதர் ஸ்வாமிகளின் வலது காதில், ''சங்கரன் கோயிலில்தான் ஸ்ரீ கோமதி அம்பாள் இருக்கிறாள். அதற்கு நீ நாளை காலையே கிளம்ப வேண்டும். போகும்போது தீராத வயிற்று வலியும் ச்ரமங்களும் இருக்கும். வைராக்யத்துடனும் தன்னம்பிக்கையுடனும் மந்த்ரத்தை மனனம் செய்து கொண்டே செல். கோமதி அம்பாள் கோயிலை அஸ்தமனத்திற்குள் அடைந்து விடவேண்டும் என்பதே நியதி. நான் கோயிலில் வந்து நீ செய்ய வேண்டிய முறையைத் தெரிவிக்கிறேன்'' என்றார்.

ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ குருநாதரின் ஆணைப்படி சனிக்கிழமை காலை (8-1-1994) தஞ்சையில் இருந்து கிளம்பி மிகவும் ச்ரமத்துடன், அஸ்தமனத்திற்குள் ஸ்நாநம் செய்துவிட்டு மடியாக கோயிலை அடைந்தார். கோயில் வாயிலில் உள்ள ஸௌபாக்ய விநாயகர் ஸந்நிதியில் ஒரு வயதான கிழவர் நின்று கொண்டிருந்தார். (கனவில் வந்த ஸித்தபுருஷ உருவத்தில் அவர் இல்லாததால் ஸ்வாமிகள், அவர் வேறு யாரோ ஸாதாரண மனிதர் என்ற நினைப்பில் இருந்தார்). அந்தக் கிழவர் ஸ்ரீ ஸ்வாமிகளைப் பார்த்து, ''குழந்தாய் ! உன்னைப் பார்த்தால் நல்ல குழந்தை போல் தோன்றுகிறது. எனக்கு ஒரு உதவி செய்வாயா ?'' என்று கேட்டார். ஸ்வாமிகள் செய்கிறேன் என்றார். ''எனக்கு நடக்க முடியவில்லை. நான் அம்பாள் பக்தன். மெதுவாக என்னைப் பிடித்து அம்பாள் ஸந்நிதிக்குக் கொண்டு விடு'' என்றார். (கிழவரது உருவம் மிகவும் மெலிந்ததாய், எலும்பும், தோலுமாய், தோல்கள் எல்லாம் செதில் செதிலாக உரிந்தும் இரண்டு முழங்கால்களும் பின்னிக் கொண்டும் நடப்பதற்கே மிகவும் ச்ரமத்துடன் இருந்தன) கிழவர் தனது இடகையில் ஸ்வாமிகளின் வலது கையைப் பிடித்துக் கொண்டும், தன் வலது கையிலுள்ள தடியால் தரையில் ஊன்றிக் கொண்டும் மிகவும் மெதுவாக கோயிலை நோக்கி நடக்க ஆரம்பித்தார். போகும்போது ஸ்ரீ கோமதி அம்பாளின் பெருமை பற்றியும், கிழவரது பக்தியைப் பற்றியும் உபவாஸ நியமங்கள்,

பிலத்வார ஸூக்ஷ்மங்கள் ஆகியவற்றையும் கூறினார். பக்திச்ரத்தையுடன் ஸ்ரீ கோமதி அம்பாளைத் தரிசித்தால் பாக்யப்பட்டவர்களுக்குக் கனவில் வந்து பேசுவாள் என்றும் கூறினார். த்வஜஸ்தம்பத்தை அடைந்ததும் அந்தக் கிழவர் தன்னை ஒரு ஓரமாக உட்காரவைத்துவிட்டு, ஸ்ரீ ஸ்வாமிகளை மூன்று கோயில்களையும் ஒரு முறை வலம்வந்து, திரும்பி வரும்போது தன்னையும் கோமதி அம்பாள் ஸந்நிதிக்கு அழைத்துச் செல்லப் பணித்தார். அதன்படி ஸ்வாமிகள் திரும்பி வந்ததும் அந்தக் கிழவரைக் காணாமல் திகைத்துப் போனார். பக்கத்தில் உட்கார்ந்திருந்த சிறுவனைக் கேட்டதற்கு, 'அது போன்ற கிழவரைப் பார்க்கவே யில்லை'' என்று சொல்லிவிட்டான். ஸ்வாமிகள் வெலவெலத்துப் போய், அந்தக் கிழவர் சொன்ன முறைப்படி எல்லாவற்றையும் செய்தார். ஆச்சர்யத்திலும் ஆச்சர்யமாய், ஸ்ரீ ஸ்வாமிகளிடம் ஸ்ரீ கோமதி அம்பாள் அன்றிரவு கனவில் வந்து கீழ்க்கண்டவற்றைக் கூறினாள்.

''குழந்தாய் ! மாலை உன்னை பிடித்துக் கொண்டு கிழவர் போல் வந்தது நானே ! குஹ்யாவதாரமான நீ பிலத்வாரத்தில் உன் குருநாதர் சொன்னதுபோல் ஜபங்களைச் செய். நானே நேரடியாக பிலத்வார தீக்ஷை தருகிறேன். ''குஹ்யாவதாரத்தின் பொருட்டு உன் குருநாதருக்கு குருதட்க்ஷிணையாக நீ பல ஜீவன்களுக்கு (ஆத்ம ச்ரேயஸ்ஸிற்காக ஆன்ம முன்னேற்றத்திற்கான உயர்விற்காக) பரோபகாரம் செய்ய வேண்டும். கணபதி அக்ரஹாரத்தில் ஸ்ரீ மஹாகணபதி ஸந்நிதியில் நான் சொல்லும்வரை ஒவ்வொரு ஸங்கடஹரசதுர்த்தியிலும் கடம் ஆவாஹனம் செய்து 8 ப்ராஹ்மணர்களை வைத்து 1008 தடவை கணபத்யதர்வசீர்ஷ உபநிஷத்தை அகில உலக நலனுக்காக ஜபம் செய்து, இரவில் ஸ்ரீ மஹாகணபதிக்கு மஹாபிஷேகம் செய்ய வேண்டும்.''

உன்னுடைய குஹ்யாவதார நிலையை கொஞ்சமும் வெளியில் காட்டிக் கொள்ளாமல் அசடுபோல் எல்லோரிடமும் பழகு. உன் ஸூக்ஷ்மங்களை யாரும் புரிந்துகொள்ள இயலாது. பல இன்னல்களையும் அவமானங்களையும் நீ தாங்க வேண்டி

வரும். எதற்கும் தயங்காது பொறுமையாக இரு. உன் குருநாதர் எல்லாவற்றையும் நேரம் வரும்போது சரிப்படுத்துவார். அவர் ஆணைப்படி நட. உன் ஜாதகத்தைப் பார்த்தும் எவரும் உன்னுடைய உண்மை நிலையைப் புரிந்து கொள்ளமுடியாது. எனவே குருநாதரைத் தவிர வேறு எவருடைய ஆலோசனையையும் கேட்காதே. பௌர்ணமி, சங்கடஹரசதுர்த்தி தினங்களில் நீ உப்பில்லாது, த்ரவ ஆஹாரம் உட்கொண்டு உபவாஸம் இருக்க வேண்டும்.''

ஸ்ரீ ஸ்வாமிகள் அம்பாள் சொன்னது போல் எல்லாவற்றையும் செய்து 9 - 1 - 1994 விடியற்காலை 5 மணிக்கு அம்பாளிடமிருந்து பிலத்வார தீக்ஷையும் பெற்று, அன்றிரவு தஞ்சை வந்து சேர்ந்தார்.

ஸங்கடஹர சதுர்த்திக்கு அம்பாள் ஆணைப்படி ப்ராஹ்மணர்களைத் தேடியதில் எந்த விதத்திலும் கிடைக்கவில்லை. கடைசியாக ஸ்ரீ ஸ்வாமிகள் குருநாதரைச் சரணடைந்து 24 - 1 - 1994 திங்கள் மாலை திருவையாறு அருகிலுள்ள அம்பாள் அக்ரஹார வேதபாடசாலை சென்றார். அங்கிருந்த பாடசாலை முதல்வரிடம் அம்பாளின் ஆணையைக் கூறி கேட்டுக் கொண்டதில் அவர் அதைச் சரியாக எடுத்துக் கொள்ளாமல் ப்ரதி மாதம் 8 பாடசாலை ப்ரஹ்மசாரிகளை அனுப்புவது இயலாத கார்யம் என்றும், ஸ்ரீரங்கம் வேதபாடசாலையில் முயற்சி செய்யுமாறும் கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகள் தன்னுடைய பொருளாதார நிலையை விளக்கியும், கோமதி அம்பாளின் உத்தரவைச் சொல்லியும் பாடசாலை முதல்வர் ப்ரஹ்மசாரிகளை அனுப்புவதற்கு ஒப்பவில்லை. அன்றிரவு மிகுந்த வருத்தத்துடன் ஸ்ரீ ஸ்வாமிகள் தஞ்சை திரும்பி வந்து குருநாதரிடமும், அம்பாளிடமும் விவரத்தைச் சொல்லி அழுதார். ஸ்ரீ குருநாதர் புதன் (26-1-1994) விடியற்காலை ஐந்து மணிக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ வித்யாகணபதி ஜபம் செய்யும்போது அவரது வலதுகாதில் ''குழந்தாய் ! வருத்தப்படாதே. இன்று மதியம் மறுபடி அதே பாடசாலைக்குச் செல். மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி போய்விட்டார். அதன்படி ஸ்ரீ ஸ்வாமிகள்

பூஜையை முடித்துக் கொண்டு மதியம் பாடசாலைக்குச் சென்றார். அங்கு ஒரு பெரிய ஆச்சர்யம் காத்திருந்தது.

இதனிடையில் அன்று விடியற்காலை 5 மணிக்கு, ஸ்ரீ ஸ்வாமிகள் தஞ்சையில் ஜபம் செய்து கொண்டிருக்கும் போது திருவையாற்றிலுள்ள கோயில் யானைக்கு திடீரென மதம் பிடித்து, சங்கிலியை அறுத்துக் கொண்டு, இரண்டு கிலோமீட்டர் ஓடிவந்து அம்பாள் அக்ரஹாரத்திலுள்ள பாடசாலை முதல்வர் வீட்டு வாசலில் வந்து உக்ரமாக நின்றது. முதல்வர் அரண்டு போய் எட்டு ப்ரஹ்மசாரிகளை ஸங்கடஹர சதுர்த்திக்கு கணபதி அக்ரஹாரம் அனுப்புவதாக வாக்குக் கொடுத்தார். உடனே அந்த யானை ஸாதாரணமாக திருவையாறு திரும்பியது.

மேற்கண்ட நிகழ்ச்சியால் முதல்வர் குடும்பத்தினர் மிகவும் பயந்துபோய் ஸ்வாமிகளிடம், அவர்கள் செய்த செயலுக்கு மன்னிப்பு கேட்டு, குழந்தைகளை அனுப்புவதாக மகிழ்ச்சியுடன் கூறினர். ஸ்வாமிகளின் வாயினாலேயே குழந்தைகளுக்கு ''உபநிஷத் ஜபம்'' எடுத்துவைக்க வேண்டிக் கொண்டனர். இவ்விதமாக முதல் ஸங்கடஹரசதுர்த்தி (30-1-1994) ஞாயிறு அன்று ஆரம்பித்து தொடர்ந்து 88 மாதங்கள் அம்பாள் ஆணைப்படி நடந்து, ஒரு லட்சம் ஆவர்த்திக்கு மேல் பூர்த்தியானது. (அதன் பிறகும் நிற்காமல் தொடர்ந்து இன்றும் தற்போதுள்ள யோக பீடத்தில் மாதாமாதம் நடந்து வருகிறது. வரும் 7-5-2004 வெள்ளி அன்று 127-வது ஸங்கடஹரசதுர்த்தி நடக்க விருக்கிறது).

இத்தனை தீக்ஷைகளைப் பெற்றும் ஸ்ரீ ஸ்வாமிகளின் கடுமையான வயிற்றுவலி தீரவில்லை. பொறுமையோடு வ்யாதியை ஸஹித்துக் கொண்டிருந்தார். அம்பாள் ஆணைப்படி பௌர்ணமி, ஸங்கடஹர சதுர்த்தி தினங்களில் உப்பில்லாத த்ரவ ஆஹாரத்துடன் உபவாஸத்தையும் ஆரம்பித்தார். 30-1-1994, முதல் ஸங்கடஹர சதுர்த்தியன்று ஸ்ரீ ஸ்வாமிகள் கடுமையான வயிற்று வலியாலும், தலை சுத்தலாலும் அவதிப்பட்டு ஜபத்தின் நடுவே குழந்தைகளுக்குக் கொடுத்த

வாழைப்பழம் ஒன்றைச் சாப்பிட்டு விட்டார். அன்றிரவு கனவில் தஞ்சையில் ஸ்ரீ குருநாதர் வந்து, ''குழந்தாய் ! நீ ஏன் அம்பாள் சொன்ன நியதியை மீறினாய்?'' என்று கேட்டார். அதற்கு ஸ்வாமிகள் தாங்கமுடியாத வயிற்றுவலியாலும், தலை சுத்தலாலும் வாழைப் பழத்தைச் சாப்பிட்டு விட்டேன். மன்னிக்க வேண்டுகிறேன் என்றார். அதற்கு குருநாதர், ''பரவாயில்லை. ஸாஷ்டாங்கமாக என்னை நமஸ்காரம் செய்'' என்றார். ஸ்வாமிகள் செய்த பிறகு ஸ்ரீ குருநாதர் ஸ்வாமிகளின் வயிற்றைத் தன் கையால் நன்றாகத் தடவி கொடுத்து, இனி இந்த வலி உனக்கு இருக்காது. நீ எந்த மருந்தும் சாப்பிட வேண்டாம். அம்பாள் சொன்ன நியதியைத் தீவ்ரமாகக் கடைப்பிடி'' என்று சொல்லி மறைந்தார். வியப்பிலும் வியப்பாய் ஸ்ரீ ஸ்வாமிகளை 16 மாத காலமாய் வாட்டிவந்த கடுமையான வலி அன்று முதல் மறைந்தது.

பிறகு பல முறை ஸ்ரீ குருநாதரும், கோமதி அம்பாளும் ஸ்வாமிகளிடம் நேரிலும், கனவிலும் வந்து பல ஸூக்ஷ்மங்களையும், தீக்ஷைகளையும் அருளினார்கள். ஸ்ரீ கோமதி அம்பாள் ஸ்ரீ ஸ்வாமிகளை அவரது பூர்வாச்ரமத்தில் ஏற்க்குறைய 45 தடவைகள் சங்கரன் கோயிலுக்கு அழைத்து பல அதிசயங்களை நடத்தி பல ஜீவன்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் மூலம் அனுக்ரஹம் செய்திருக்கிறாள். ஸ்வாமிகள் தஞ்சையில் இருந்து எடுத்துச் செல்லும் சப்பாத்தியை ஸ்ரீ குருநாதரும், ஸுவாஸினி உருவத்தில் ஸ்ரீ கோமதி அம்பாளும் நேரில் வந்து ஸ்வாமிகள் தங்கியிருக்கும் இடத்திலேயே சாப்பிடுவார்கள். பிறகு மீதத்தைப் ப்ரஸாதமாக குடும்பத்திற்கக் கொடுத்து அனுப்புவார்கள். ஒவ்வொரு தடவையும் சங்கரன் கோயில் செல்லும்போது பல அதிசய நிகழ்ச்சிகள் நடக்கும். விரிவுக்கு அஞ்சி எல்லாவற்றையும் விளக்காமல் ஓரிரண்டு உத்தரவுகளை மட்டும் இங்கு சொல்கிறேன்.

1) மஹாகணபதி ஸஹஸ்ரநாமத்தை ப்ரகடனபடுத்தி ஸித்தம் செய்ய வேண்டும். லக்ஷ பாராயண முறையில் கோடிக்கணக்காக பாராயணம் நடத்த வேண்டும்.

2) ஸ்ரீ ஸ்வாமிகளால் அகில உலக நலனிற்காக ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி விக்ரஹம் ப்ரதிஷ்டை செய்யப்பட வேண்டும்.

முதல் உத்தரவின்படி இதுவரை பல ஊர்களில் உள்ள பல ஆலயங்களில் சதுர்லக்ஷ பாராயணங்கள் நடந்து இதுவரை 600 லக்ஷங்கள் பூர்த்தியாகியுள்ளன. இப்போதும் விடாமல் ஞாயிற்றுக்கிழமைகளில் பீடத்திலோ அல்லது வேறு இடத்திலோ லக்ஷ பாராயணங்கள் நடந்து வருகின்றன.

இரண்டாவது உத்தரவு பிறப்பித்த பின்னர், 6-7 மாதங்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. திடீரென்று ஒருநாள் கனவில் வந்த குருநாதர், ''குழந்தாய் ! ஏன் அம்பாள் சொன்ன விஷயத்தில் முயற்சி செய்யாமல் இருக்கிறாய் என்று கேட்டார். ஸ்வாமிகள் எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை என்றார். ஸ்ரீ குருநாதர் ''அம்பாள், உன் குஹ்யாவதாரத்தில் ஆக வேண்டியதைத்தான் சொல்லி இருக்கிறாள். உடனே முயற்சி செய். நான் உன்னோடு இருக்கிறேன்'' என்று சொல்லி மறைந்தார்.

அடுத்த 2-3 நாட்களிலேயே ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு நண்பர் மூலம் ஸ்வாமிமலையில் உள்ள ஸ்ரீ தேவ சேனாதிபதி ஸ்தபதியிடம் ஸ்ரீ வித்யா கணபதி விக்ரஹம் செய்யச் சென்றார். ஸ்தபதியும் சிற்ப சாஸ்த்ரதிலேயே இல்லாத இந்த அதிசய மந்த்ர ஸ்வரூபத்தைக் கேட்டு வியப்படைந்தவராய், செய்து தருவதாக வாக்குக் கொடுத்தார். கிட்டத்தட்ட 7-8 மாதங்கள் ஸ்தபதியிடம் விக்ரஹம் ஸம்பந்தமான கார்யங்களுக்காக ஸ்ரீ ஸ்வாமிகள் அலைந்தார். கடைசியில் 17-8-1999 ஞாயிறு ஆவணிமாத பௌர்ணமி அன்று ஸ்ரீ குருநாதர் ஆணைப்படி ஸ்ரீ வித்யாகணபதி விக்ரஹத்தை, ஸ்ரீ ஸ்வாமிகளின், பூர்வாச்ரம பூஜாக்ருஹத்தில் ப்ராணப்ரதிஷ்டை செய்வதற்கு நாள் பார்த்து அதற்கான பஞ்சலோஹ ஸ்ரீ மஹாகணபதி ஸ்ரீ சக்ர யந்த்ரங்களுக்கு ஜபம் நடந்து வந்தது. 15-8-97 வெள்ளி அன்று விக்ரஹத்தைப்

பெறுவதற்காக ஸ்தபதியிடம் ஸ்வாமிகள் சென்றபோது திடுக்கிடும் தகவல் காத்திருந்தது. ஸ்தபதி விக்ரஹம் தயாராக 2-3 வாரங்களுக்கு மேலாகும் என்றார். ஸ்வாமிகள் மனமுடைந்து போய் ஞாயிறு அன்று ஸ்ரீ குருநாதர் ஆணைப்படி ப்ராணப்ரதிஷ்டை செய்யப்பட வேண்டும் என்றும், சனி இரவிற்குள் விக்ரஹத்தை மட்டுமாவது பூர்த்தி செய்து தருமாறும் கேட்டுக் கொண்டார். திருவாசியை ஓரிரண்டு மாதங்கள் கழித்து வாங்கிக் கொள்கிறேன் என்றார். ஸ்தபதி அது இயலாத கார்யம் என்றும் எப்படியும் 2-3 வாரங்கள் தாமதம் ஆகும் என்றும், கொஞ்சம் பொறுத்து வேறு நாளில் ப்ராணப்ரதிஷ்டை செய்து கொள்ளுங்கள் என்றும் சொல்லிவிட்டார்.

ஸ்வாமிகள் மிகுந்த வருத்தத்துடன் தஞ்சை கிளம்ப முயற்சித்தபோது, ஸ்ரீ ஸ்வாமிகளின் வலது காதில் ஸ்ரீ குருநாதர், ''குழந்தாய் ! தஞ்சை செல்ல வேண்டாம். ஸ்தபதியைப் பார்த்து மௌனமாக மூல மந்த்ரத்தை மனனம் செய். அவர் வாயாலாயே விக்ரஹத்தை நாளை தருகிறேன் என்று சொல்ல வைக்கிறேன் என்றார்.

ஸ்வாமிகள் குருநாதர் ஆணைப்படி செய்ததில் வியப்பிலும் வியப்பாய், ஸ்தபதி விக்ரஹத்தை மறுநாள் சனிக்கிழமை இரவு தருவதாக ஒப்புக் கொண்டார். பிறகு ஸ்வாமிகள் தஞ்சை திரும்பினார். சனியன்று விடியற்காலை ஸ்ரீ குருநாதர் ஸ்தபதியை விரட்டி விரட்டி விக்ரஹத்தையும் பூர்த்தி செய்ய வைத்தார். திட்டமிட்டபடி 17-8-1997 ஞாயிறு விக்ரஹம் ப்ராணப்ரதிஷ்டை செய்யப்பட்டது.

பின்னர் பல நாட்கள் ஸ்ரீ ஸ்வாமிகளுக்குக் குருநாதர் கணபதி அக்ரஹாரம் செல்லும்போது ஸ்கூட்டரின் பின்புறமும், பசுபதி கோயிலுக்கு அருகிலுள்ள மாமரத்தடியிலும், தஞ்சை மேல வீதியிலுள்ள சங்கர நாராயணர் கோயிலிலும், ஸ்தூல சரீரத்திலேயே வந்து பல ஸூக்ஷ்மங்களையும், தீக்ஷைகளையும் அருளியிருக்கிறார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் ''ஏகாதசாவதான'' ஸ்வரூபங்களையும் தன்னுடைய பல ஸ்வரூபங்களையும் காட்டி அருளினார். ஸ்ரீ ஸ்வாமிகளின் குஹ்யாவதார ரஹஸ்யங்களைப் பற்றியும் முற்பிறவிகளைப் பற்றியும் விளக்கினார். இதன் பிறகே ஸ்ரீ குருநாதர் ஸ்ரீ ஸ்வாமிகள் மூலம் யோகக்ரியைகளைச் செய்ய ஆரம்பித்தார்.

20-9-1997 அன்று ஸ்ரீ ஸ்வாமிகளின் கனவில் ஸ்ரீ குருநாதர் வந்து 'தான் மஹாகணபதி என்றோ லலிதா த்ரிபுரசுந்தரீ என்றோ சொல்வது மனதிற்கு ஒரு எண்ணம் வருவதற்குத் தான்' என்றும் ஸித்தர்கள் நாமரூபங்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஸத்சிதானந்த நிர்குணப்ரஹ்ம ஸ்வரூபம் என்றும், தன்னுடைய மூன்று (மந்த்ர சாஸ்த்ரப்படி சொல்லப்பட்ட) ஸ்ரீகுரு, ஸ்ரீபரமகுரு, ஸ்ரீ பரமேஷ்டி குரு என்ற ஸ்வரூபங்களையும் காட்டி அதனதன் நாமங்களையும் உபதேசித்தருளினார். நாமம், ரூபம் இரண்டும் உபாஸகனுக்கு, உபாஸனை ஸித்திப்பதற்காக உள்ள படிக்கட்டுகள் தான் என்றும் அவை அழிந்த பிறகே ஜீவனுக்கு ப்ரஹ்ம ஜ்ஞானம் ஏற்பட்டு அகண்ட ப்ரஹ்மானந்த ஸித்தி ஏற்படுகிறது என்றும் கூறினார். ஸ்ரீ ஸ்வாமிகளை உலகநலனிற்காக ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனையைச் ச்ரத்தையாகச்செய்யச் சொன்னார். அப்பொழுதுதான் மந்த்ர நாமதேயங்களை ஸ்ரீ குருநாதர் தெளிவுபடுத்தி ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஸ்ரீ குரு பாதுகையையும் தந்தார். அதுவரை ஸ்ரீ ஸ்வாமிகள் குருநாதரை ''நமோ வ்ருத்தாய ச ஸம்வ்ருத்த்வநே ச நம:'' என்ற ருத்ர வாக்யத்தைக் கொண்டே வழிபட்டு வந்தார். விக்ரஹ ப்ரதிஷ்டை ஆவதற்கு முன்பே 13-8-1996-ல் ஸ்வாமிகள் ஸ்ரீ குருநாதரின் உத்தரவுடன் அவரது வ்ருத்த ஸ்வரூபத்தைச் சித்ரமாக வரைய ஏற்பாடு செய்து பூஜை அறையில் ப்ராண ப்ரதிஷ்டையும் செய்து விட்டார். ஸ்ரீ குருநாதருடைய ஸ்வரூப லக்ஷணங்களை, ஸ்ரீ ஸ்வாமிகள் சொல்ல அதை விளக்கும் த்யானச்லோகத்தையும் நான் எழுதி ஸ்ரீ குருநாதரும் அதை ஸந்தோஷத்துடன் அனுக்ரஹித்தார். அந்த த்யான ச்லோகம் பின் வருமாறு.

शान्तः कारुण्यमूर्तिः धवलकचभरश्मश्रुकूर्चो वसानः
स्वच्छे वस्त्रे महार्घे कनककवचित स्फाटिकेशाक्षमालः ।
दृष्टो वृद्धस्वरूपो मयि सदयमनाः शश्वदाश्वासयन् मां
साक्षात् देवो गणेशः स्खलितमगण्यन् मामकं शं तनोतु ।।
फाले भस्मत्रिपुण्ड्री पुरहरशिरसो निर्गतेव त्रिमार्गा-
धारा मध्येललाटं छुरितमलयजा कुङ्कुमाङ्का विभाति ।
मालाऽस्याऽऽनाभिलम्बा सुरसरिदलका पूरसंभेदहृद्या
साक्षात् देवो गणेशः स्खलितमगणयन् मामकं शं तनोतु ।।
रक्तक्षौमान्तरीयः शुकहरित दुकूलोत्तरीयोऽभिगम्यो-
ऽधृष्योऽत्यन्तं कृपालुः श्रवणयुगलसत्कुण्डलो यष्टिहस्तः ।
रक्षामन्त्रार्थ सूक्ष्मं विशदमुपदिशन् मह्यमारूढ पादुः
साक्षात् देवो गणेशः स्खलितमगणयन् मामकं शं तनोतु
मार्गदर्शिन् मार्गबन्धो कृपासिन्धोऽभिरक्ष माम् ।
क्षमस्वागांसि मूढस्य त्वामस्मि शरणं गतः ।

*ஸ்வாமிகளுக்கு துரீயாதீத பரமஹம்ஸ தீக்ஷை கொடுப்பதற்காக, ஸ்வரூபங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்ட ஸ்ரீ குருநாதர் தன் உருவத்தை பரமஹம்ஸ ஸந்நியாசியாக மாற்றிக் கொண்டு அந்த நிலையிலேயே தற்போது இருந்து வந்தாலும் இன்றும் ஸ்வாமிகளின் பூஜையில் அவரது பழைய ஸ்வரூபத்தை விளக்கும் த்யான ச்லோகம் தினமும் சொல்லப்படுகிறது.*

*சில நாட்களிலேயே ஸ்ரீ ஸ்வாமிகளின் சரீரத்தில் ஸ்ரீ குருநாதர் ஸித்தயோக க்ரியைகளைச் செய்ய ஆரம்பித்தார். அதற்காக என்னிடமிருந்து செப்டம்பர் 1997ல் மந்த்ர சாஸ்த்ர முறைப்படி அர்க்யம் விடச் சொல்லி, ஸ்ரீ ஸ்வாமிகளைத் தானமாக வாங்கிக் கொண்டார். இந்தச்*

செயலாலேயே, என்னைக் குருநாதர் பெரிதும் மதித்து 'दाता' என்ற ஸ்தானத்தை அருளினார். அந்த ஸ்தானத்தின் மஹிமையால்தான் இன்று நான் துரீயாதீத ஹம்ஸாச்ரமியாக உள்ளேன் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. ஸ்ரீ குருநாதர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு கற்றுக் கொடுத்த சில யோக தீக்ஷைகளையும்/ க்ரியைகளையும் இங்கு விளக்குகிறேன். அவையாவன :

*1) ஸூக்ஷ்ம ஜீவப்ரவேசம், 2) ஸூக்ஷ்ம சரீர ப்ரயாணம், 3) பேதாபேத நிரூபண ஸூக்ஷ்ம யோகம், 4) ஸஹஜ ஸமாதி, 5) ஆவிர்பாவ ஸ்வரூபம், 6) ஹடயோகம், 7) அந்தர்முகதீக்ஷை.*

***1) ஸூக்ஷ்ம ஜீவப்ரவேசம் :-***

ஸூக்ஷ்ம ஜீவ ப்ரவேசம் என்பது தசமஹாஸித்திகளையும் வென்ற மஹாஸித்த புருஷர்களால் மட்டுமே செய்யக் கூடிய அதிஸூக்ஷ்மமான யோக க்ரியை. அதில் குருவானவர் தன்னுடைய யோக சக்தியால் சிஷ்யனுடைய சரீரத்தில் ஸூக்ஷ்மமாக நுழைந்து சிஷ்யனுடைய ஜீவசக்தியுடன் ஒன்றி, அதைத் தன் வசமாக்கி, சிஷ்யனுடைய ஜீவனிலும் சரீரத்தினுள்ளும் செய்ய வேண்டிய தீக்ஷைகளைச் செய்து விட்டு, சிஷ்யனுடைய சரீரத்தின் மூலம் வெளி உலகிற்குச் செய்ய வேண்டிய கார்யங்களையும் செய்துவிட்டு மறுபடி வேகமாக சிஷ்யனது ஜீவனைப் பிரித்து வைத்து வெளியேறுவது. இது மிகவும் கடினமான யோக க்ரியை. மயிரிழை தவறு ஏற்பட்டாலும் சிஷ்யனது சரீரம் உருக்குலைந்துவிடும். இதில் குருவானவர் சிஷ்யனது ஜீவ சக்தியுடன் ஒன்றியவுடன் சிஷ்யன் தன் சுயநினைவை இழக்கிறான். திரும்பவும் குரு வெளியேறியவுடன் சிஷ்யனது சரீரம் மயங்கி விழுந்துவிடும். அப்போது அருகில் உள்ளவர்கள் சரீரத்தைத் தொடாமலும் சரீரத்திற்கு எந்தவித துன்பமும் ஏற்படாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். மயில்விசிறியால் லேசாக விசிறலாம். திரும்பவும் சிஷ்யன் தன் சுயநினைவை அடைய

15 முதல் 45 நிமிடங்கள் ஆகும். 15 நிமிடத்திற்கு ஒருமுறை மூல மந்த்ரத்தால் லேசாக ஜல ப்ரோக்ஷணம் செய்வதைத் தவிர வேறொன்றும் செய்யக் கூடாது.

*2. ஸூக்ஷ்ம சரீர ப்ரயாணம் :* **(Astral Travel)**

இது ஸ்தூல சரீரத்தை விட்டு ஜீவன் ஸூக்ஷ்ம சரீரத்துடன் சஞ்சரிப்பதே. இதைப் பலர் "Astral Travel" என்ற பெயரில் அறிந்திருப்பார்கள். இந்த யோக சக்தியை உலகியல் விஷயங்களுக்காகப் பயன்படுத்துவது என்பது மாபெரும் தவறு. கலியுகத்தில் அது போன்ற சில முறைகேடுகள் நடந்ததால்தான் இந்த யோக க்ரியை தற்போது மிகவும் குறைந்து கோடானு கோடி உபாஸகர்களில் யாரேனும் ஒருவருக்குத்தான் ஸித்திக்கும் நிலையில் உள்ளது. இதைச் செய்வதற்கு உயர்ந்த மனப்பக்குவமும், வைராக்யமும் திடமான குருபக்தியும் தன்னம்பிக்கையும் மிக அவச்யம். இதிலும் சரீரத்தைப் பாதுகாப்பதில் மிகுந்த கவனம் தேவை. அதனால்தான் மஹாஸித்தபுருஷர்கள் ஸூக்ஷ்ம சரீரத்தை ஸ்தூல சரீரத்திலிருந்து எடுத்த பிறகு ஸ்தூல சரீரத்தை மற்றவர் கண் பார்வையிலிருந்து மறைத்துப் பாதுகாப்பான இடத்தில் விட்டுச் செல்கிறார்கள். இதில் ஸ்ரீ ஸ்வாமிகள், ஸ்ரீ குருநாதருடன் மஹா கைலாஸத்திலுள்ள ப்ரஹ்மமானஸ் ஸரோவரம் மஹாமேரு ச்ருங்கம், திருவண்ணாமலை, காசி, காச்மீர யோகாக்னி குண்டம் முதலிய ஸித்த க்ஷேத்ரங்களுக்குச் சென்று வருகிறார். குறிப்பாக ஸ்ரீ வித்யாகணபதி விக்ரஹத்திற்கு மஹா கைலாஸத்திலுள்ள ப்ரம்மமானஸ ஸரோவரம் என்ற மஹாபுண்ய தீர்த்தத்தில் இருந்து (ஸித்தர்களுக்கும், யோகிகளுக்கும், தேவர்களுக்கும் மட்டும் தெரியக் கூடியது). 6 தடவை தீர்த்தம் எடுத்துவந்து பீடத்தில் அபிஷேகம் செய்யப்பட்டுள்ளது. இதில் சொல்லப்படும் 'ப்ரஹ்மமானஸ ஸரோவரம்' என்பது நாம் செல்லும் மானஸ ஸரோவர் யாத்திரையிலிருந்து முற்றும் வேறுபட்டது. மானஸ ஸரோவர் ஸ்தூல கைலாஸத்தில் உள்ளது. ப்ரஹ்ம மானஸஸரோவரம் மஹாகைலாஸம் என்று ஸித்தர்களாலும் யோகிகளாலும் அழைக்கப்படுகிற ஸூக்ஷ்ம கைலாஸத்தில் உள்ளது. மானஸ ஸரோவரில் வருடத்தில் ஏறக்

குறைய 2 மாதங்களே தீர்த்தத்தைக் காண முடியும். மற்ற நாட்களில் பனியால் உறைந்துவிடும். ப்ரஹ்மமானஸ ஸரோவரிலோ வருடம் முழுவதும் இளம் சூடான நிலையில் தீர்த்தம் இருக்கும். தேவர்களுக்காகவும் யோகிகளுக்காகவும் இந்த ப்ரஹ்மமானஸரோவரை ஸ்ரீ பரமேச்வரர் ஸ்ருஷ்டித்தார் என்று ஸ்ரீ குருநாதர் சொல்வார். அதன் கதை பின் வருமாறு :-

ஸ்ரீ பரமேஸ்வரர் தன்னுடைய மூன்று கண்களில் இருந்து மூன்று சக்திகளை உருவாக்கி மஹாகைலாஸத்தில் உள்ள பனிப்பாறைகளில் துளைக்கச் செய்தார். அதன் விளைவாக அந்த மூன்று இடங்களிலிருந்தும் ரஜத (வெள்ளி) தாரை ஸ்வர்ண(தங்க) தாரை மற்றும் அம்ருததாரை என்ற மூன்று உக்ரமான வெப்பக் குழம்புகள் கிளம்பி நீர்வீழ்ச்சி போல் இப்போது இருக்கும் மானஸஸ்ரோவருக்கு மேலுள்ள ப்ரஹ்மமானஸஸரோவரில் உள்ள பனிப்பாறைகளில் வேகமாக விழுந்தன. அதனால் ப்ரஹ்மமானஸ ஸரோவரில் உள்ள பனியுருகி மூன்று தாரைகளின் வெப்பத்தால் இளம்சூடான நீராக வருடம் முழுவதும் இருக்கின்றது. இங்கிருந்துதான் மஹாகைலாஸம், மஹாமேரு, ப்ரஹ்ம மானஸ ஸரோவரம், தபோவனம் போன்ற ஸித்த க்ஷேத்ரங்களுக்குத் தீர்த்தம் செல்கின்றது. தேவர்களும் ஸித்தர்களும் இந்த தீர்த்தத்தில் தான் ஸ்நானம் செய்வர். மனிதன் ஸ்தூல சரீரத்துடன் இந்த இடத்திற்குச் செல்ல முடியாது. ஸூக்ஷ்ம சரீரம் தீர்த்தத்தில் பட்டவுடன் திவ்ய சரீரம் கிடைக்கும். இதெல்லாம் நம்மால் நம்பமுடியாதவை. ஸ்வாமிகள் தற்போதும் அனுபவித்து வரும் உண்மைகளிவை.

### 3. பேதாபேத நிரூபண ஸூக்ஷ்ம யோகம் :-

இதுவும் மஹாஸித்த புருஷர்களால் மட்டுமே செய்யக் கூடிய யோகச் செயல். இதில் ஸாதகர் தன்னை இரண்டுக்கும் மேற்பட்ட பல இடங்களில் ஸ்தூல சரீரத்துடனோ அல்லது திவ்ய சரீரத்துடனோ செயலாற்ற வைக்கிறார். இந்த யோகம்தான் பாகவதத்தில் ஸ்ரீ க்ருஷ்ணர், ப்ரஹ்மாவிற்குப் பாடம் புகட்டும் போது செய்ததாக சொல்லப்படும் யோகம். இந்த முறையில்தான் ஸ்ரீ குருநாதரும் ஸ்ரீ ஸ்வாமிகளை

ப்ரஹ்மமானஸ ஸரோவ - தபோவனத்திற்கு அகில உலக நலனுக்காகத் ஜபம் செய்ய அழைத்துச் செல்கிறார். இரவு பகலாக ஸ்ரீ ஸ்வாமிகளின் 12000 திவ்ய ஸ்வரூபங்கள் நிமிடத்திற்கு 10,80,000 அக்ஷர வேகம் என்ற யோக வேகத்தில் ஸ்ரீ வித்யாகணபதி மூல மந்த்ரத்தை ஜபம் செய்கின்றனர். ஸ்ரீ ஸ்வாமிகளுடன் சேர்த்து மொத்தம் 10 ஸித்தர்கள் ஜபம் செய்கின்றனர். அவர்கள் ஸ்ரீ குருநாதரின் வாக்குப்படி—

1) கணேச பரம ஹம்ஸானந்த நாதர் (ஸ்ரீ ஸ்வாமிகள்)

2) மஹாகணேச பரமஹம்ஸானந்த நாதர்

3) பரசிவ பரமஹம்ஸானந்தநாதர்

4) பரப்ரஹ்ம பரமஹம்ஸானந்தநாதர்

5) ப்ரஹ்ம ப்ரஹ்மபரமஹம்ஸானந்த நாதர்

6) சிவானந்தநாதர்

7) விமலானந்தநாதர்

8) பாஸுரானந்தநாதர்

9) குழந்தையானந்தநாதர்

10) த்ரைலிங்க ஸ்வாமிகள்

இவர்களில்2-5 ஸ்வரூபங்கள் ஸ்ரீகுருநாதரே.

12000 x 10 = 1,20,000 திவ்ய ஸ்வரூபங்கள் ஜபம் செய்து இதுவரை யோக பீடத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளால் அர்க்யம் மூலமாக 8 கோடி கோடிக்கு மேல் ஸ்ரீ வித்யா கணபதிக்கு அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. தபோவனத்தில் ஜபம் செய்யும் போது, ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸ்தூல சரீரமும் இங்கு பீடத்தில் வழக்கம் போல் இருக்கும். யாரும் எந்த விதவெளிப்புற வித்தியாசங்களைக் கண்டுகொள்ள முடியாது. முன்னர் ஸ்ரீ குருநாதர் ஸ்வாமிகளை 2-3 நாட்கள் அல்லது ஒரு வாரம் பேதாபேதத்தில் அழைத்துச் சென்று திரும்ப கொண்டு விடுவார். ஸ்தூல சரீரத்தில் பேதாபேத யோகத்தை நீக்கியவுடன் அந்த 2-3 நாட்கள் ஸ்தூல சரீரத்தில் நடந்த

செயல்கள் எதுவும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கும் சரியாகத் தெரியாது. தற்போதோ 26-11-2002 முதல் தொடர்ந்து ஸ்ரீ ஸ்வாமிகள் வருடத்தில் ஒரு சில நாட்களைத் தவிர, தபோவன ஜபத்திற்காக முழுவதுமாய் பேதாபேதத்தில் தான் இருக்கிறார். 2-3 மாதத்துக்கு ஒருமுறை மந்த்ர அர்க்யம் விடுவதற்காக மட்டும் பீடத்திற்கு வரும்போது ஸ்ரீ ஸ்வாமிகள் பேதாபேத யோகத்தில் இருந்து நீக்கப்படுவார். அப்படி வரும்போது பீடத்தில் இருக்கிற 12 மணி நேரத்திற்கு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு லோக ப்ரக்ஞை இருக்காது. பீடத்தில் நடந்த நிகழ்ச்சிகள் எதுவும் சரியாகத் தெரியாது. சரீரமும் பீடத்தில் இருப்பு கொள்ளாது. அதனால் ஸ்ரீ குருநாதர் ஆணைப்படி பீடத்தைப் பூட்டி ஸ்ரீ ஸ்வாமிகள் எங்கும் வெளியில் செல்லாமல் பார்த்துக் கொள்வோம்.

**4. ஸஹஜ ஸமாதி :-**

ஸ்வாமிகள் எப்போதும் அனாயாஸ மந்த்ர மனனத்தில் இருப்பதால், பல நேரங்களில் ஸஹஜ ஸமாதிக்குச் சென்று விடுவார். இதில் வெளிப் பார்வைக்கு எல்லோருடனும் ஸாதாரணமாகப் பேசிக் கொண்டு சரீரத்தின் மூலமும் எல்லா செயல்களையும் செயலாற்றிக் கொண்டும் இருப்பார். பின்னால் ஒரு ஸமயம், நடந்த செயல்களெல்லாம் அவருக்குத் தெரியும் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கும் போது, எந்தச் செயலையும் அவர் அறிந்திருக்கமாட்டார். மனம் த்யானத்தில் லயித்து விடுவதால் சரீரம் இயந்திரம் போல வெளிச் செயல்களைச் செய்து கொண்டிருக்குமே தவிர ஸ்வாமிகளுக்கு லோக ப்ரக்ஞை இருக்காது.

**5. ஆவிர்பாவ ஸ்வரூபம் :-**

பல நேரங்களில் ஸ்ரீ குருநாதர் ஸ்ரீ ஸ்வாமிகளின் சரீரத்தில் வெளியில் எந்தவித வித்யாஸமும் தெரியாதவாறு வந்து போவார். ஸ்ரீ ஸ்வாமிகள் மாதிரி அதே குரலில் பேசுவார். நாம் ஸ்ரீ ஸ்வாமிகள் தான் பேசுகிறார் என்று நினைத்துக் கொண்டிருக்க, உள்ளே ஸ்ரீ குருநாதர் இருந்து கொண்டிருப்பார். துளி கூட வித்யாசம் நம்மால் கண்டு பிடிக்க

முடியாது. இதுவே ''ஆவிர்பாவ ஸ்வரூபம்'' இந்த ஸமயம் நிகழும் நிகழ்ச்சிகளும் ஸ்வாமிகளின் நினைவில் சரியாக இருக்காது. இதைப் பிறிதொரு ஸமயம்தான் நம்மால் உணர முடியும்.

**6. ஹடயோகம் :-**

ஸ்ரீ குருநாதரும் ஸ்ரீ ஸ்வாமிகளும் சேர்ந்து மாடியில் யோக பீடத்தில் கதவைப் பூட்டிக் கொண்டு இதுவரை ஏறக் குறைய 30 தடவைகள் யோக தீக்ஷைகளுக்காகவும் வேறு சில காரணங்களுக்காகவும் ஹடயோகம் செய்திருக்கிறார்கள். ஹடயோகத்தின் போது ஸ்ரீ குருநாதரும் பாஞ்ச பௌதிக சரீரத்தில் ஸ்தூல ரூபத்தில் யோக பீடத்திற்கு வந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அப்யாஸம் கொடுப்பதற்காக இந்த யோகத்தைத் தானும் செய்வார். இதில் ஸாதகர் உடலை, தலை, இரண்டு கைகள், இரண்டு கால்கள், முண்டம் என 6 பிரிவுகளாகப் பிரித்து மறுபடி யோக முறையில் சேர்ப்பார். ஒரு துளி ரத்தம் கூட வெளியில் சிந்தாது. இதைப் பற்றிய விளக்கங்கள் மிகவும் ரகசியமானவை என்பதால் விளக்கப்படவில்லை. பீடத்தில் நடக்கும் ஹடயோகத்தையும் யாரும் பார்க்க அனுமதி கிடையாது. இது இரவில்தான் நடக்கும்.

**7. அந்தர்முக தீக்ஷை :-**

இது ஒரு யோக தீக்ஷை. ஸ்ரீ குருநாதர், ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு இதுவரை ஆயிரத்துக்கும் மேற்பட்ட அந்தர்முக தீக்ஷைகளை அருளியிருக்கிறார். இது ப்ரஹ்மமானஸ ஸரோவரில் உள்ள தபோவனத்தில் அல்லது திருவண்ணாமலையில் நடக்கும் தீக்ஷை. இதை நாம் காணமுடியாது. இதில் குருவின் 1) சிரஸ், 2) இரண்டு கண்கள், 3) புருவமத்தி, 4) வாய், 5) நெஞ்சுக்குழி, 6) ஹ்ருதயம், 7) தொப்புள், இவைகளில் இருந்து மிகவும் உஷ்ணமான யோகாக்னி சிஷ்யனது அந்தந்த பாகங்களுக்குள் செல்லும்.

இது முடிந்ததும் மதுபர்க்கம் போன்ற ஒரு பானத்தைக் குருநாதரும், சிஷ்யரும் அருந்துவர். அதை அருந்திய சிறிது

நேரத்திற்குப் பிறகு தான் இருவரின் சரீரமும் சரியான நிலைக்கு வரும். ஸ்ரீ ஸ்வாமிகள் தனக்கு முதல் அந்தர்முக தீக்ஷை ஆனதும்தான் மஹாமேரு ச்ருங்கத்திலுள்ள ஸ்ரீ காமேச்வரியின் ஆணைப்படி இப்போது நாம்பாடும் குருகீதத்தைப் பாடினார். ஸ்ரீ ஸ்வாமிகள் இப்பிறவியில் ஸங்கீதம் கற்றவரல்ல. ஸங்கீத ஜ்ஞானமும் துளியும் இல்லாதவர் என்றே சொல்லலாம். ராகங்களைக் கூட சரியாக கண்டுபிடிக்கத் தெரியாதவர். அப்படிப்பட்டவர் ஸ்ரீ குருநாதர் - அம்பாளின் அனுக்ரஹத்தால் ஸ்வர சுத்தமாக ஸ்ரீ குருநாதர் ஆணைப்படி தன் முற்பிறவியில் சிவானந்தநாதர் என்ற நாமதேயத்தில் பாடிய ஸ்ரீ கோமதி அம்பாளைப் பற்றிய ''ஹரிஹரபுர வாஸினி'' என்கிற கல்யாணி ராகத்தில்அமைந்த ஸம்ஸ்க்ருத ஸாஹித்யத்தைத் த்யானம் செய்து எழுதிப் பாடினார். இன்றும் இது பூஜையில் தினம் பாடப்பட்டு வருகிறது.

விக்ரஹம் ப்ரதிஷ்டை செய்வதற்கு முன்பே ஸ்வாமிகள் தசமஹாஸித்திகளையும் வென்றுவிட்டார். ஸ்ரீ கோமதி அம்பாள், ஸ்ரீ குருநாதர் அனுக்ரஹத்தால் ஒவ்வொரு ஸித்தி தேவதையும் பௌர்ணமி அன்று கனவில் வந்து செய்யும் பரீக்ஷைகளில் ஸ்ரீ ஸ்வாமிகள் வெற்றி பெற்று ஸித்திகளுக்குத் தான் மசியாமல், ஸித்திகளைத் தன் வசமாக்குக் கொண்டார். இன்றும் எல்லா ஸித்திகளுக்கும் தலைவியான ஸர்வகாமஸித்தி அடிக்கடி ஸ்ரீ ஸ்வாமிகளின் கனவில் வந்து ஸ்ரீ ஸ்வாமிகள் செய்த ஜபத்தைத் தானமாக வாங்கிக் கொள்கிறாள் என்பதை நாங்கள் உணர்ந்துள்ளோம். இரவில் ஸ்ரீ ஸ்வாமிகளின் கனவில் ஸ்ரீ குருநாதரோ, ஸ்ரீ கோமதி அம்பாளோ, ஸித்தி தேவதைகளோ வந்தால், ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களிடம் பேசுவதை மட்டும் பக்கத்தில் படுத்திருக்கும் எங்களால் கேட்க முடியும். ஸ்ரீ குருநாதரோ, ஸ்ரீ கோமதி அம்பாளோ, ஸித்தி தேவதைகளோ ஸ்ரீ ஸ்வாமிகளுடன் பேசுவதை நாங்கள் கேட்க முடியாது.

ஸ்ரீ குருநாதர் ஸ்வாமிகளுக்கு ஆயிரம் அந்தர்முக தீக்ஷை முடிந்ததும் கடந்த விஷுவர்ஷத்திய வியாச பௌர்ணமியில் ப்ரஹ்மமாஸன ஸரோவர தீர்த்தக் கரையில் (ஜுலை 2001)

*துரீயாதீத (அதிவர்ணாச்ரம) பரமஹம்ஸ ஆச்ரம தீக்ஷையை அனுக்ரஹத்துக்கு அருளினர். ஸ்வாமிகளே குருநாதருக்குக் கொடுத்த ''दाता'' என்ற முறையில் எனக்கும் ஸ்வாமிகள் மூலமே ஸ்தூல சரீரத்தில் யோக பீடத்திலேயே 30-11-2001 அன்று துரியாதீத ஹம்ஸாச்ரம தீக்ஷையை அருளப் பெறும் பாக்யம் பெற்றேன். தற்போது எனக்கு துரீயாதீத மஹாஹம்ஸ தீக்ஷக்கான 'ஜபங்கள்' நடந்து வருகின்றன.*

*நாளுக்கு நாள் ஸ்ரீ ஸ்வாமிகளின் யோகநிலை மாறிவருகிறது என்பதை அவருடன் நெருங்கிப் பழகும் சிஷ்யர்கள் அறிவார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் தற்போது பேதாபேத நிரூபண ஸூக்ஷ்ம யோகத்தில் இங்கு யோக பீடத்தில் இருக்கும் ஸ்தூல சரீரத்தைத் தவிர 12,180 திவ்ய சரீரங்களில் கீழ்கண்ட இடங்களில் அகில உலக நலனிற்காக ஜபம் செய்து வருகிறார்.*

1. *ப்ரஹ்மமானஸ ஸரோவருக்கு மேல் உள்ள மஹாதபோவனத்தில் - 12036 நபர்கள்*
2. *திருவண்ணாமலையின் ஸூக்ஷ்ம சிகரத்திலுள்ள ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசான்யம், யோகாக்னிக் குண்டங்களில் (6 x 6) = 36 நபர்கள்.*
3. *மஹாமேரு ச்ருங்கத்தில் 36 நபர்கள்.*
4. *மஹா கைலாஸ ச்ருங்கத்தில் 36 நபர்கள்.*
5. *காச்மீர் குஹையிலுள்ள யோகாக்னி குண்டத்தில் - 36 நபர்கள் (மொத்தம் 12,180 நபர்கள்).*

*இது தவிர ''ஏகாதசாவதானம்'' என்கிற ஸ்வரூபங்கள்.*

***இதுவரை நடந்த முக்ய நிகழ்ச்சிகள் :-***

*26-11-1993 - ஸ்ரீ குருநாதர் ஸ்வப்னம்*

*8/9-1-1994 - ஸ்ரீ சங்கரன் கோயிலில் ஸ்வாமிகளுக்கு கோமதி அம்பாளின் பிலத்வார தீக்ஷை*

ஏப்ரல் 1994 - மதுரையில் குழந்தையானந்தர் மீனாக்ஷி ஸந்நிதிகளில் மஹாஷோடசி, ராஜமாதங்கி மந்த்ரங்கள் தீக்ஷை

13 - 8- 1996 - ஸ்ரீ குருநாதர் படம் ப்ரதிஷ்டை

13-6-1997 - வார்ஷிக ஷோடச கணபதி நாம ஸமாராதனை ஆரம்பம்

17-8-1997 - ஸ்ரீ வித்யாகணபதி விக்ரஹ ப்ரதிஷ்டை

20-9-1997 - ஸ்ரீ ஸ்வாமிகளிடம் யோக க்ரியைகள் ஆரம்பம் - ஸ்ரீ குருபாதுகா மந்த்ரோபதேசம்

செப்டம்பர் 97ல் - என்னிடமிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளை குருநாதர் தானம் வாங்கிக் கொண்டது.

31-10-1998 - அந்தர்முக தீக்ஷை - ப்ரஹ்மமானஸ ஸரோவர யாத்ரா

19-11-1998 - ஸ்ரீ ஸ்வாமிகள் தீக்ஷாவஸ்த்ர ஸ்வீகரணம்

29-11-1998 - பீடவாஸ்து பூஜா

17-11-1999 - முதல் பூர்ணபக்ஷ அதித்ரிசதீ அர்ச்சனோத்ஸவ ஆரம்பம்

19-5-1999 - ஸ்ரீ வித்யாகணேச நிகேதத்தில் க்ருஹப்ரவேசம், விக்ரஹ ப்ரதிஷ்டை

19-11-1999 - எனக்கு ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யா கணபதி மந்த்ரோபதேசம்

11-12-2000 - ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஆயிரம் அந்தர்முக தீக்ஷைகள் பூர்த்தி, குண்டல - கங்கண தாரணம்

15-1-2001 - த்யான மண்டப - கட்டடப் பணி துவக்கம்

11-3-2001 - த்யான மண்டபத்தில் யந்த்ர ப்ரதிஷ்டை

ஜூலை 2001 - வ்யாஸ பௌர்ணமியில் ப்ரஹ்மமானஸ ஸரோவர தீர்த்தக் கரையில் ஸ்ரீ குருநாதரால் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு பரமஹம்ஸாச்ரம தீக்ஷை

*24-11-2001 - எனக்கு வைதிக ஸந்நியாஸம்*

*20-11-2001 - எனக்கு ஹம்ஸாச்ரம தீக்ஷை*

***3.** பாமர மக்களுக்காக ஸ்ரீ குரநாதர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தமிழில் உபதேசித்து அருளிய "ஸ்ரீ மஹாகணபதி ப்ரார்த்தனா மஹாமந்த்ரம்"*

***1)** கலியுக ப்ரத்யக்ஷ தெய்வமும் பரம கருணாமூர்த்தியுமான ஸ்ரீ மஹாகணபதி நமக்கு எல்லா விக்னங்களேயும் நீக்கி,*

***2)** நம் மனதிலுள்ள எல்லா அசட்டு எண்ணங்களேயும் அழித்து,*

***3)** நல்ல எண்ணங்களேயே கொடுத்து,*

***4)** எப்போதும் அவரிடம் சஞ்சலமில்லாத ஸ்திரமான பக்தி இருக்கும்படி செய்து,*

***5)** அவருடைய ப்ரீதியை அனுக்ரஹிக்க,*

***6)** அவரைப் பரிபூர்ண சரணாகதி அடைவோமாக.*

———

மேற்கண்ட மந்த்ரத்தை மஹாகணபதி ஸஹஸ்ரநாம பாராயணம் ஆரம்பிக்கும்போது சொல்லி வருகிறோம். இது தமிழில் இருப்பதால் எல்லோருக்கும் எளிதில் பொருள் விளங்கும். ஸ்ரீ குருநாதர் இங்கு சொல்லும் அர்த்தம் ப்ரஹ்ம தத்வத்தை விளக்கக் கூடியதாகவும், இதில் மந்த்ர சாஸ்த்ரத்தில் உள்ள ஸ்ரீ மஹாகணபதியின் மூலமந்த்ரத்தில் அடங்கியிருக்கம் ஸூக்ஷமத்தை பற்றியதாகவும் உள்ளது.

*ரஹஸ்ய அர்த்தம் :-*

இதில் ஸ்ரீ மஹாகணபதியின் மூலமந்தரமே மிகவும் ஸூக்ஷமமாக உள்ளது. முழுமுதற்கடவுளான ஸ்ரீ மஹாகணபதிக்கு மொத்தம் 11 ஸ்வரூபங்கள். அவை

*1 - 2 -* யானே முகமான ஸ்ரீ மஹாகணபதி — வல்லபாம்பா என்ற மஹாலக்ஷ்மி ஸ்வரூபங்கள்

3 - ப்ரணவம் அல்லது காயத்ரி அல்லது பரப்ரஹ்ம ஸ்வரூபம்

4 - 5 - லக்ஷ்மி– விஷ்ணு ஸ்வரூபங்கள்

6 - 7 - பார்வதி — பரமேச்வர ஸ்வரூபங்கள்

8 - 9 - ரதி — மன்மத ஸ்வரூபங்கள்

10 - 11 - பூ - பூபதி ஸ்வரூபங்கள்

இப்போது ப்ரார்த்தனா மந்த்ரத்திலுள்ள ஆறு பகுதிகளின் அர்த்தத்தைத் தனித்த னியே பார்ப்போம்.

1) முதலில் யானை முகமான ஸ்ரீ மஹாகணபதி — ஸ்ரீ மஹாலக்ஷ்மீ ஸ்வரூபங்களால் நமக்கு இம்மை மறுமையில் உள்ள எல்லா விதமான இன்னல்களையும் நீக்குகின்றார்.

2) பின்பு ப்ரணவம் அல்லது காயத்ரீ அல்லது பரப்ரஹ்ம ஸ்வரூபத்தால் நம் மனத்தில் குடிகொண்டுள்ள எல்லா அசட்டு எண்ணங்களையும் போக்குகின்றார்.

3) பின்பு அந்த மனதில் லக்ஷ்மீ, விஷ்ணு ஸ்வரூபங்களால் நல்ல எண்ணங்களைக் கொடுக்கின்றார்.

4) பார்வதி, பரமேச்வர ஸ்வரூபங்களால் எப்போதும் அவரிடம் கலங்காத, திடமான பக்தி இருக்கும்படி செய்கிறார்.

5) ரதி, மன்மத ஸ்வரூபங்களால் அவருடைய ப்ரீதியை, அதாவது, அன்பை உபாஸகனுக்கு அள்ளி வழங்குகிறார்.

6) மேற்கண்டவற்றைப் பெறுவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? எள்ளளவும் ஸந்தேஹமில்லாத எண்ணத்துடன் பூர்ணமாக எந்தவித அஹங்காரம் இல்லாமல் அவரை நமஸ்காரம் செய்து சரணடைய வேண்டும். அப்படிநாம் சரணடைவதற்கும் உதவியாய் அவர் பூ, பூபதி ஸ்வரூபங்களாய் இருந்து நமஸ்காரம் செய்யும் நம்மைத் தாங்கி அருள்புரிகிறார்.

**2. ப்ரார்த்தனா மந்த்ரத்தில் ஸ்ரீ மஹாகணபதி மூலமந்த்ரம் அடங்கியிருக்கும் ஸூக்ஷ்மம் :**

*(இது மஹாகணபதி மூலமந்த்ரம் உபதேசம் ஆனவர்கள் இதன் பெருமையை உணரும் பொருட்டு சொல்லப்படுகிறது. மூலமந்த்ரத்தைத் தகுந்த குருக்கள் இடமிருந்து முறையாக உபதேசம் பெறாமல், புத்தகத்தில் இருந்து பார்த்து சொல்லவே கூடாது).*

ப்ரார்த்தனா மஹாமந்த்ரத்தில் ஆறு பகுதிகளைப் பார்த்தோம். பீஜாக்ஷரங்களுடன் கூடிய மூலமந்த்ரமும் ஆறு பகுதிகளாகி அந்தந்த தேவதா ரூபமாய் இருந்து நம்முடைய ப்ரார்த்தனையை நிறைவேற்றித் தருகிறது. மூலமந்த்ரத்தில்

பகுதி 1) ''கம் கணபதயே ........ ஸ்வாஹா'' என்ற பகுதியாக இருந்து (ஸ்ரீ மஹாகணபதி, ஸ்ரீ மஹாலக்ஷ்மீ ஸ்வரூபங்களால் நமக்கு எல்லா இன்னல்களையும் நீக்குகிறார்.

2) ''ஓம்'' என்ற ப்ரணவ ரூபமாய் இருந்து நம் மனதிலுள்ள எல்லா அசட்டு எண்ணங்களையும் போக்குகிறார்.

3) ''ஸ்ரீம்'' என்ற பீஜாக்ஷரமாகி ஸ்ரீ - ஸ்ரீபதி ஸ்வரூபங்களால் நல்ல எண்ணங்களைக் கொடுக்கிறார்.

4) ''ஹ்ரீம்'' என்ற பீஜாக்ஷரமாகி பார்வதி - பரமேச்வர ஸ்வரூபங்களால் அவரிடம் கலக்கமில்லாத திடமான பக்தியைத் தருகின்றார்.

5) ''க்லீம்'' என்ற பீஜாக்ஷரமாகி ரதி - மன்மத ஸ்வரூபங்களால் அவருடைய அன்பை அருளுகிறார்.

6) ''க்லௌம்'' என்ற பீஜாக்ஷரமாகி பூ - பூபதி ஸ்வரூபங்களால் அவரை நமஸ்காரம் செய்யும் நம்மைத் தாங்கி அருளுகிறார்.

இங்கு 'ஸ்ரீ மஹாகணபதி' என்ற சொல் சிவனது புதல்வனான பிள்ளையார் என்பவரை மட்டும் குறிப்பதல்ல. ''கணானாம் பதி: கணபதி:'' என்றபடி அகில உலகங்களுக்கும் ஆதாரமான மூலப் பொருள்களின் கூட்டத்தை

தோற்றுவித்தவராகவும், அதை ஆள்பவராகவும் உள்ளவர் என்று பொருள். எனவே ஆதி மூலமான மஹாகணபதி எல்லா தோற்றங்களுக்கும் அப்பாற்பட்ட பரம்பொருள்.

**4. உபாஸனா யோகபீட குறிக்கோள் - தினசரி நடக்கும் பூஜைகள் - வருட உத்ஸவங்கள் :**

ஸ்ரீ ஸ்வாமிகள் இக்கலியுகத்தில் அகில உலகிலுள்ள எல்லா உயிர்களின் நலனுக்காகச் சொல்லும் உயர்ந்த தத்வம் 'சரணாகதி தத்வம்' என்கிற ஆத்ம ஸமர்ப்பண தத்வம். இவ்வுலகில் நாம் அனுபவித்து வரும் துன்பங்களும், இன்பங்களும் பொய்யானவை. காலத்தால் அழியக் கூடியவை. முற்பிறவிகளில் செய்த வினைப் பயனால் ஏற்பட்டவை. உண்மையில் நமது துன்பம் என்பது பிறப்பு - இறப்பு என்ற சுழலே. இதிலிருந்து மீண்டு நாம் நமது உண்மையான பேரானந்த நிலையில் திளைக்க வேண்டும் என்பதே மனிதப் பிறவியின் குறிக்கோள். இதற்கு முதற்படி, நாம் நமது இன்ப - துன்பங்களுக்காக குறுகிய நோக்கில், சுயநலத்துடன், கடவுளிடம் வேண்டிக் கொள்ளாமல் நமது ஜீவனை அவரிடம் பூர்ணமாய், மனத்தளவில் ஒப்படைத்து சரணாகதி அடைவதே. தர்மத்திற்கு எதிரான கார்யங்களைச் செய்யாமல், செய்கிற நல்ல கார்யங்களையும் கடவுளுக்கு என்று அர்ப்பணிக்க வேண்டும். இந்தச் செயல் மூலம் அகில உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் நலம் உண்டாகி, நமக்கும் மிகுந்த நன்மை உண்டாகும். யோக பீடத்தில் நடக்கும் பூஜைகள் மற்றும் உத்ஸவங்கள் அனைத்தும் மேற்கண்ட முறைப்படி, அகில உலகநலனுக்காகவே செய்யப்படு கின்றன.

***தினசரி பூஜைகள் மற்றும் வருட உத்ஸவ்ஙகள் :-***

ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனை என்பது மிகவும் கடுமையான நியதிகள் அடங்கியது. இதில் பல முறைகள் உள்ளன. இங்கு ஸ்ரீ குருநாதர் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு உபதேசித்துள்ள முறை எல்லாவற்றிலும் சிறந்தது. அந்தர்முக தீக்ஷை பெற்றவர்களால் மட்டுமே செய்யக் கூடியது.

*1) ஸித்தயோக முறைப்படி தினமும் இருகால பூஜை. காலை 5.30 - 11.00 பூஜையின் போது ஸ்ரீ மஹாகணபதி, ஸ்ரீ லலிதா மற்றும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணங்கள், ஸ்ரீமத் ஸுந்தரகாண்ட ஸப்தஸர்க பாராயணம், ஸ்ரீமத் பாகவத பாராயணம் மற்றும் ஸ்ரீ வித்யாகணபதி பர்யாய ஜபம் யந்த்ரங்களுக்கு அபிஷேகம், மிச்ராவரண அர்ச்சனை, பர்யாய அர்ச்சனை, லகு ஸுவாஸினீ பூஜா, ஸ்ரீ குருபூஜா, கீதம் - ஆகியவை நடக்கின்றன.*

*பிற்பகல் 2.00 - 4.00 ஸ்ரீமத் பகவத்கீதை அல்லது துர்கா ஸப்தசதீ மூல பாராயணம்*

*மாலை 4.00 - 6.00 - ஸ்வாமிகளை தர்சிக்கும் நேரம்*

*இரவு 6.00 - 7.30 - உபன்யாஸம்*

*இரவு 7.30 - 8.00 அர்த்த ஜாம பூஜை, கீதம், தீபாராதனா*

*இங்கு 'பர்யாயம்' என்பது ஸ்ரீ குருநாதர் ஸித்தக்ரமத்தில் சொன்ன கீழ்கண்ட மந்த்ரங்களின் தொகுப்பு :-*

*1) கணபதி அதர்வசீர்ஷ உபநிஷத், 2) ஸ்ரீ ருத்ரம், 3) ஸ்ரீ சமகம், 4) ஸ்ரீ லலிதா த்ரிசதீ, 5) ஸௌந்தர்யலஹரியில் முக்யமான பத்து ச்லோகங்கள் (1,6,8,11,32,33,47,59,60,100) (6) தேவ்யதர்வசீர்ஷ மூலமந்த்ரம், 8) ஸ்ரீ வித்யாகணபதி பரமதத்வ மாலா மந்த்ரம்.*

*மேற்கூறிய எட்டு மந்திர தொகுப்புகளும் சேர்ந்தது ஒரு பர்யாய ஜபம். விசேஷ நாட்களில் 12 பர்யாய ஜபம் நடைபெறும். மற்ற நாட்களில் குறைந்தது நான்கு அல்லது ஒரு பர்யாய ஜபம் நடக்கும். அர்ச்சனை, ஜபம் எல்லாமே ஸித்தயோக க்ரமத்திலுள்ள த்ரிபுடீகரண முறைப்படி நடக்கின்றன. இந்த முறையைத் தகுந்த குருக்களிடமிருந்தே நேரிடையாக பெற வேண்டும் என்பதால் இங்கு விளக்கப்படவில்லை.*

*விக்ரஹத்திற்குப் பௌர்ணமி, ஸங்கடஹர சதுர்த்தி தினங்களில் மட்டும் அபிஷேகம். தினசரி ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனா மண்டலத்திலுள்ள குருபாதுகை, நர்மதேச்வரர்,*

பஞ்சலோஹ ஸ்ரீ மஹாகணபதி - ஸ்ரீ சக்ர யந்த்ரங்களுக்கு மட்டும் அபிஷேகம். மிச்ராவரண அர்ச்சனை என்பது 19 ஆவரணங்கள் கொண்டது. ஸ்ரீ மஹாகணபதிக்கு ஐந்து, ஸ்ரீ சக்ரத்திற்கு ஒன்பது, ஸ்ரீ வித்யாகணபதிக்கு ஐந்து என மொத்தம் 19. இதற்கு முன்னும் பின்னும் சில ரக்ஷாமந்த்ரங்கள். மிச்ராவரண அர்ச்சனைக்குப் பிறகு விக்ரஹத்திற்கு தினசரி ஆறு பர்யாய அர்ச்சனைகள் நடக்கின்றன. வார்ஷிக ப்ரஹ்மோத்ஸவத்தில் 1331 பர்யாய (8 லக்ஷம்) அர்ச்சனைகளும் மற்ற நான்கு உத்ஸவங்களிலும் 726 பர்யாய (4 1/2 லக்ஷம்) அர்ச்சனைகளும் நடக்கின்றன.

2) ப்ரதி வெள்ளியிலும் நித்ய பூஜையைத் தவிர பிற்பகல் (4-6 மணி) ஸ்ரீ கணபதி - ஸ்ரீ லலிதா - ஸஹஸ்ரநாம - ஸ்ரீ ருத்ர - ஸ்ரீ லலிதாத்ரிசதீ அர்ச்சனைகள் மற்றும் பூர்ண மந்த்ர புஷ்பாஞ்ஜலி.

3) ப்ரதி ப்ரதோஷம் - நித்ய பூஜையைத் தவிர பிற்பகல் (4-6 மணி) ப்ரதோஷ பூஜை.

4) ப்ரதி பௌர்ணமி - நித்ய பூஜையைத் தவிர விடியற்காலை 5.30 மணிக்கு த்யான பீடத்தில் ப்ராண ப்ரதிஷ்டை யந்த்ரத்திற்கு அபிஷேகம், பூர்ண மந்த்ர புஷ்பாஞ்ஜலி- பிற்பகல் 6-8 மணி ஸ்ரீ வித்யாகணபதிக்கு பௌர்ணமி பூஜை - ஸ்ரீ கணபதி - ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம - ஸ்ரீ ருத்ர - ஸ்ரீ லலிதா த்ரிசதி அர்ச்சனைகள் மற்றும் பூர்ண மந்த்ர புஷ்பாஞ்ஜலி.

5) ப்ரதி ஸங்கடஹர சதுர்த்தி - நித்ய பூஜையைத் தவிர விடியற்காலை 3.30 முதல் ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி ஹோமம், காலை 10.00 முதல் 2.00 வரை ஸ்ரீ கணபதி அதர்வசீர்ஷ உபநிஷத் ஜபம் (1008 முறை). மாலை ஸங்கடஹரசதுர்த்தி அபிஷேகம், ஸ்ரீ கணபதி - லலிதா ஸஹஸ்ரநாம - ஸ்ரீ ருத்ர - ஸ்ரீ லலிதா த்ரிசதீ அர்ச்சனைகள்.

6) வருடத்திற்கு ஐந்து உத்ஸவங்கள் :- (ஆனி, புரட்டாசி, தை மற்றும் பங்குனி மாத அமாவாஸ்யை முதல் ஸங்கடஹர சதுர்த்தி முடிய) விநாயக சதுர்த்திக்கு முன்வரும் பௌர்ணமி

முதல், விநாயக சதுர்த்திக்கு பின்வரும் ஸங்கடஹர சதுர்த்தி முடிய வார்ஷிக ப்ரஹ்மோத்ஸவம்.

ஒவ்வொரு உத்ஸவத்தின் போதும் ''ஸுவாஸினி பூஜை, ஒரு வடுக பூஜை, கன்யா பூஜை, தம்பதி பூஜை மற்றும் நான்கு லக்ஷத்திற்கு மேல் அர்ச்சனை.

7) ஒவ்வொரு வருஷமும் வார்ஷிக - ப்ரஹ்மோத்ஸவத்தின் போது 16 வேத அத்யயனம் செய்யும் ப்ரஹ்மசாரிகளை வைத்து 16 கணபதிகளை ஆவாஹனம் செய்து ''ஷோடச கணபதி நாமயஜ்ஞ ஸமாராதனை'' - 128 முறை ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம பாராயணம். அடுத்த நாள் 16 ஸுவாஸினிகளை வைத்து ''ஷோடச ஸுவாஸினீ ஸமாராதனை.

8) அகில உலக நலனுக்காக, ப்ரதி ஞாயிறு பிற்பகலில் பல ஆலயங்களில் ஸ்வாமிகளே முன்னின்று ''சதுர்லக்ஷ நாம பாராயணங்கள்'' உபதேசித்து நடத்தி, மக்களை நல்வழிப்படுத்தி, அருளாசி வழங்கி வருகிறார்கள். ஆலயங்களில் நடக்காத ஞாயிறன்று யோகபீடத்திலேயே பிற்பகல் 3 முதல் 5 மணி வரை ''லக்ஷ பாராயணத்தை'' நடத்துகிறார்கள்.

9) ஸ்ரீ குருநாதர் சொல்லும் எளிமையான கோட்பாடுகளை கடைப்பிடிக்கக் கூடிய பக்தர்களுக்கு, அவரவர் குடும்ப நலனுக்குரிய மந்த்ரங்களையும் ஸ்ரீ ஸ்வாமிகளே ஸித்தயோக முறைப்படி உபதேசித்து அருளுகிறார்கள்.

**5) ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனா தத்வம் - ஸ்வரூப விளக்கங்கள் :-**

ஸ்ரீ வாஞ்சா கல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி (மந்த்ரநாமதேயம் - வித்யாகணேச:)

1) ஆணுமில்லை, பெண்ணுமில்லை, அலியுமில்லை, மனிதனுமில்லை, மிருகமுமில்லை, தேவனுமில்லை, அசுரனுமில்லை.

2) ப்ரஹ்மமும் ப்ரஹ்மசக்தியும் சேர்ந்த ஐக்ய ஸ்வரூபம்

3) ஸ்ரீ மஹாகணபதியும், ஸ்ரீ மஹாஷோடசியும் சேர்ந்த - சிவசக்தி - ஸம்யுக்த ஸ்வரூபம்

4) ஷண்மதங்களையும், உள்ளடக்கிய ஷண்மதங்களுக்கும் அப்பாற்பட்ட ஸ்வரூபம்.

5) ஐந்து தொழில்களையும் உள்ளடக்கிய, ஐந்து தொழில்களுக்கும் அப்பாற்பட்ட ஸ்வரூபம்.

6) பரிபூர்ண அத்வைத (நிர்குண ப்ரஹ்ம) நிலைக்கு முந்தைய கடைசி நிலை.

7) மூர்த்தியின் ஸ்வரூபம் கழுத்திற்கு மேல் யானை முகமும் கழுத்திற்குக் கீழ் மங்கை உருவமும் கொண்டது. ப்ரஹ்மாவின் ப்ரபஞ்ச ஜீவராசிகளின் படைப்பிற்குள் அடங்காத அதற்கப்பாற்பட்ட - ஆண், பெண், அலி, மனிதன், மிருகம், அசுரன் முதலிய பாகுபாட்டிற்குள் அடங்காத எல்லா வரையறைகளையும் கடந்த புதுமையான ஸ்வரூபம் ப்ரஹ்மமும், ப்ரஹ்மசக்தியும் சேர்ந்த ஐக்ய ஸ்வரூபம் :-

சுத்த அல்லது நிர்குண ப்ரஹ்மத்திற்கு எந்தவித உருவமோ, செயலோ, வரையறையோ, மற்ற எந்த கட்டுப்பாடோ இருப்பது ஸாத்தியமில்லை. அதனை வார்த்தைகளால் விவரிக்க ஸாத்யமில்லை. அந்த வார்த்தைகளால் விவரிக்க முடியாத. மனதால் த்யானிக்க முடியாத, ஜ்ஞானிகளால் மட்டுமே உணர்ந்து லயப்படக் கூடிய பேரானந்த நிலை. அதில் உபாஸனைக்கே இடமில்லை. இங்கு சொல்லக்கூடிய 'ப்ரஹ்மம்' என்ற சொல் சராசரி மக்களுக்கு புரிவதற்காக அந்த பெரிய நிலையைக் கோடி காட்டுவதற்காக வந்த சொல். ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியைப் பற்றி சொல்லும்போது 'தான் பலவாக ஆக நினைத்தது. அந்த நினைப்பிலேயே அதற்கே உரித்தான யோக மாயையால் ப்ரஹ்மசக்தி வெளிக்கொணரப் பெற்று ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி ஏற்பட்டது' என்பார்கள். எனவே நிர்குண ப்ரஹ்மத்தின் சக்தி வெளிப்பாடே ப்ரஹ்மசக்தி. ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியின் போது

நிர்குண ப்ரஹ்மத்தில் லயமடைந்ததனைத்தும் அதற்கே உரித்தான யோகமாயையால் ப்ரபஞ்சமாக விரிவாகிறது. பெரியோர்கள் அந்த ப்ரஹ்மசக்திக்குப் பெண் உருவத்தையும், ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு ஆண் உருவத்தையும் தந்து வழிபாட்டை அமைத்தார்கள். உலகிலும் கருவிற்கு ஆதாரமான 'பிந்து' ஆணிடமிருந்து வெளிப்பட்டு அதைப் பெண் தாங்கி கர்ப்பத்தில் போஷித்து 'சிசுவாக' உரிய காலத்தில் வெளியில் கொண்டு வருவது என்பதே இயற்கை நியதி. எனவே தான் எல்லா சக்திகளுக்கும் ஆதாரமான மூலசக்தியான ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு ஆண் உருவத்தைத் தந்தார்கள். யோக மாயை மூலம் வெளிப்பட்ட ப்ரஹ்ம சக்திக்குப் பெண் உருவத்தைத் தந்தார்கள். சுத்த ப்ரஹ்மம் தனித்த நிலையில் ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி இல்லை. அது செயலற்ற ஸத்சிதானந்த நிலை. இந்த ப்ரஹ்மதத்வத்தை விளக்கினால் இதுவே ஸாரம் என்று ஸ்ரீ குருநாதர் கூறுவார்.

''அவளின்றி நானுண்டு, நானின்றி அவளில்லை.
அதில் லயித்தவனுக்கு அவளுமில்லை, நானுமில்லை''

இங்கு 'நான்' என்பது நிர்குண ப்ரஹ்ம ஸ்வரூபம் 'அவள்' என்பது ப்ரஹ்மசக்தி ஸ்வரூபம். 'அதில் லயித்தவன்' ப்ரஹ்ம ஜ்ஞானி.

மஹாப்ரளயத்தின் போது ப்ரஹ்மசக்தியைத் தன்னுள் அடக்கி, அதன் மூலம் அநேக கோடி ப்ரஹ்மாண்டங்களையும் தன்னுள் அடக்கி, எந்தச் செயலும் இல்லாத எல்லாவரையறைக்கும் அப்பாற்பட்ட தனித்த நிர்குண ப்ரஹ்மமே மிஞ்சுகிறது. அது ஒன்றே எக்காலத்திலும் அழியாது, நீக்கமற எங்கும் நிறைந்திருப்பது. இதுதான் 'நான்'.

'அவள்' என்ற ப்ரஹ்மசக்தியோ பரப்ரஹ்மத்தில் மறைந்தோ, ஸ்ருஷ்டியின்போது வெளிக்கொணரப்பட்டோ உள்ளதே தவிர ப்ரஹ்மமின்றி அதற்கு தனி இருப்பு இல்லை.

'அதில் லயித்தவனுக்கு' அதாவது, ப்ரஹ்ம ஜ்ஞானிக்கு ப்ரஹ்மம், ப்ரஹ்ம சக்தி என்றே தெரியாத செயலற்ற நிலை ஸித்திக்கிறது. இதைத்தான் 'திருமூலரும்

'பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்
பரத்தை மறைத்ததுபார்முதல் பூதம்
மரத்தில் மறைந்தது மாமத யானை
மரத்தை மறைத்தது மாமத யானை'' என்றார்.

எனவே நிர்குண ப்ரஹ்மோபாசனை, சுத்த ப்ரஹ்மோபாசனை, ஆத்மோபாசனை என்ற பல பெயர்களால் அழைக்கப்படுகிற - 'அந்தர்முகமான' (உள்நோக்குடன் கூடிய) பல கோடி மனிதர்களில் யாரோ ஒருவருக்கு ஸித்திக்கக் கூடிய, யோக முறையே 'அந்தர்முகோபாஸனை''. அந்தச் சொல்லும் நமக்கு புரிவதற்காகவே சொல்லப்பட்ட சொல். உபாஸனை என்றாலே 'த்ரிபுடி' வந்து விடுகிறது. 'த்ரிபுடி' என்றால் மூன்று பொருள்கள். அவை உபாஸகன், உபாஸனா தெய்வம், உபாஸனை. இந்த மூன்றும் அழிந்த நிலையிலேயே ஜ்ஞானிக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஸித்திக்கும். அப்போது அவன் செயலற்ற நிலையில் இருக்கிறான். அந்த நிலைக்கு முன் அவன் செய்யும் யோக முறைக்கே 'உபாஸனை' என்ற பெயர்.

'நாம் ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனையில் பார்ப்பது 'பஹிர்முக உபாஸனை' - வெளிப்புற வழிபாடு. மாயையில் தவித்துக் கொண்டிருக்கும் நாம் தெய்வத்திற்குள்ளேயும், நாமம் உருவம் என்கிற மாயையை ஏற்றி முள்ளை முள்ளாலேயே எடுப்பது போல், மாயையை வைத்துக் கொண்டே மாயையை ஜெயிக்க முற்படுகிறோம். அதற்கு நியதிகளும், விதிமுறைகளும் தேவைப்படுகின்றன. அந்த விதிமுறைகளை அனுசரித்தே ஷண்மதங்களிலும் ப்ரஹ்மத்திற்கு புருஷ ஸ்வரூபத்தையும், பரப்ரஹ்ம சக்திக்கு ஸ்த்ரீ ஸ்வரூபத்தையும் தந்து இரண்டையும் சேர்த்து வழிபட்டார்கள். அதனால்தான் உலகில் சிலர் தனித்த சிவனையோ, தனித்த சக்தியையோ வழிபடுவது சரியல்ல என்று கூறுகிறார்கள். ஷண்மதங்களில் காணாபத்யம் - ஸ்ரீ வல்லபாம்பா ஸமேத ஸ்ரீ மஹாகணபதி. கௌமாரம் - ஸ்ரீ வள்ளீ, தேவசேனா ஸமேத ஸ்ரீ சுப்ரமணியர். சைவம் - ஸபரிவார ஸ்ரீ ஸாம்ப பரமேஸ்வரர். சாக்தம் - ஸ்ரீ காமேச்வராங்கஸ்த்த ஸ்ரீ காமேச்வரி. வைஷ்ணவம் -

ஸ்ரீ தேவீ, பூதேவீ ஸமேத ஸ்ரீ மஹாவிஷ்ணு. ஸௌரம் - ஸ்ரீசாயா, ஸுவர்சலாம்பா ஸமேத ஸ்ரீ சூர்ய நாராயணர். மேலே சொல்லப்பட்ட ஆறு மதங்களிலும் பரப்ரஹ்மம் ஆணாகவும், பரப்ரஹ்ம சக்தி பெண்ணாகவும் தனித் தனி உருவங்களில் உள்ளன. இங்கு ஸ்ரீ வித்யாகணபதியிலோ அந்த இரண்டு உருவங்களும் சேர்ந்து ஒரே உருவத்தைப் பெற்றுவிட்டன. 3, 6 ஸ்ரீ மஹாகணபதியும் ஸ்ரீ மஹாஷோடசியும் சேர்ந்த சிவசக்தி ஸம்யுக்த ஸ்வரூபம், பரிபூர்ண அத்வைத நிலைக்கு முந்தைய கடைசி நிலை ஸ்ரீ மஹாகணபதி - ஸ்ரீ வல்லபாம்பா ஸமேத ஸ்ரீ மஹாகணபதி ஸ்வரூபம்

இங்கு வல்லபாம்பா - ப்ரஹ்மசக்தி, ஸ்ரீ மஹாகணபதி - பரப்ரஹ்ம ஸ்வரூபம், ஸ்ரீ காமேச்வரி - பரப்ரஹ்மசக்தி, ஸ்ரீ காமேச்வரர் - ப்ரஹ்ம ஸ்வரூபம், இரண்டிலும் ப்ரஹ்ம ஸ்வரூபம் என்று சொல்வது நிர்குண அல்லது சுத்த ப்ரஹ்மம் அல்ல. ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியின் பொருட்டு நமக்குப் புரியும்படி நிர்குண நிலையில் இருந்து கீழிறங்கி வந்த நிலை என்று புரிந்து கொள்ள வேண்டும். நிர்குண ப்ரஹ்மத்தில் வ்யவஹாரம் இல்லை. எல்லா வரையறைகளையும் கடந்த எங்கும் நிறைந்த பரம்பொருளான அது ஸகுண ரூபமான மஹாகணபதியாகவோ, காமேச்வரனாகவோ இருக்க முடியாது என்பதுதான் உண்மை. பின்னர் அந்த நிலையை நாம் புரிந்து கொள்வதற்காகவே நமக்கு ஜ்ஞானத்தைக் கொடுப்பதற்காகவே இறங்கிய ஸகுண நிலை என்று வைத்துக்கொள்ள வேண்டும். சுத்த ப்ரஹ்மம் இந்த நிலைக்கு இறங்கினாலும் தன் உண்மை நிலையிலிருந்து எப்போதும் மாறாமல் தான் இருக்கும். இதற்குப் பெரியோர்கள் தாமரை இலைத் தண்ணீரை உதாரணமாகக் கூறுவர்.

ஸ்ரீ மஹாகணபதி, ஸ்ரீ மஹாஷோடசி ஆகிய இரண்டு ஸ்வரூபங்களிலும் ப்ரஹ்மமும், பரப்ரஹ்மசக்தியும் தனித்தனியே ஆண், பெண்ணாக தோன்றுகிறார்கள். பூர்ணமான ஸாமுத்ரிகா லக்ஷணங்களுடன் இருக்கிறார்கள். இங்கு ஸ்ரீ வித்யாகணபதியிலோ ஆணாகவும் இல்லை.

பெண்ணாகவும் இல்லை. அலியாகவும் இல்லை. ஆனால் படைப்பின் வரையறைக்குள் அடங்காத புதிரான ஸகுண ஸ்வரூபம்.

ஆண், பெண் என்ற இரண்டு உருவங்களாக, இரண்டு உடல்களுடன் இருந்தது ஒரே உடலாகி விட்டது. இங்கு த்வைதம் (இரண்டு) என்பது 'அத்வைதம்' (இரண்டற்ற நிலை) ஆகிவிட்டது. ஆனாலும் ஸகுண ரூபம் இருப்பதாலும் சுத்த அல்லது நிர்குண ப்ரஹ்ம நிலைக்குப் பொருந்தாததாலும் 'பரிபூர்ண அத்வைத நிலைக்கு முந்தைய கடைசிநிலை என்கிறோம்.

**4&5 ஷண்மதங்களையும் உள்ளடக்கிய ஷண்மதங்களுக்கும் அப்பாற்பட்ட ஸ்வரூபம்/ஐந்து தொழில்களையும் உள்ளடக்கிய ஐந்து தொழில்களுக்கும் அப்பாற்பட்ட ஸ்வரூபம் :-**

ஸ்ரீ வித்யாகணபதியின் மந்த்ரநாமம் 'வித்யாகணேச:' 'வித்யா' என்றால் உலகில் படிப்பு என்று பொருள். பொதுவாக நாம் உலகியல் படிப்பைத் தான் படிப்பு என்று நினைத்துக் கொண்டு இருக்கிறோம். உண்மையில் 'வித்யை' என்பதற்கு 'எதை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாக ஆகுமோ' அந்த பரம்பொருளை அறிவதற்கு உதவும் படிப்பு என்று பொருள். 'அஜ்ஞான' நிலையில் இருந்து நம்மை 'ஜ்ஞான' நிலைக்குக் கொண்டு வரும் உயர்ந்த அறிவே வித்யை. கணேச: என்றால் 'கணானாம் ஈச:' கணம் என்றால் அகில உலகிற்கும் ஆதாரமான மூலப் பொருள்கள். அனைத்திற்கும் தலைவன்/தாங்குபவன்/பாதுகாப்பாளன் என்று பொருள். எனவே 'வித்யாகணேச: என்ற சொல் எல்லாவிதமான தெய்வங்களையும் தன்னகத்தே கொண்டுள்ள ஒரு பெயர். மந்த்ர சாஸ்த்ரத்திலுள்ள ஸ்ரீ வித்யாகணேசரின் த்யான ச்லோகம் :

द्राभ्यां विभ्राजमानं धृतकलश महाभृङ्गलाभ्यां भुजाभ्यां
बीजापूरादि बिभ्रद् दशभुजमरुणं नागभूषं त्रिनेत्रम्।

सन्ध्यासिन्दूरवर्णं स्तनभरनमितं तुन्दिलं चन्द्रचूडम्
कण्ठादूर्ध्वं करीन्द्रं युवतिमयमधो नौमि विद्यागणेशम् ॥

धृतकलश महाशृङ्खलाभ्यां द्वाभ्यां भुजाभ्यां विभ्राजमानं *அம்ருத கலசத்தையும், மஹாச்ருங்கலையையும் தாங்கி இருக்கும் இரண்டு கைகளால் விளங்குபவரும்* बीजापूरादि बिभ्रद् दशभुजं - *(ஸ்ரீ மஹாகணபதி த்யானத்தி லுள்ளபடி) மாதுளை முதலியவற்றைத் தாங்கும் கைகளால் விளங்குபவரும்,* अरुणं - *உதய ஸூர்யனின் நிறமுடையவரும்,* नागभूषं - *பாம்புகளை அணிகளாக உடையவரும்,* त्रिनेत्रं - *முக்கண்களை உடையவரும்,* सन्ध्यासिन्दूरवर्णं - *ஸந்த்யாகாலத்திலுள்ள ஸிந்தூர நிறத்தவரும்,* स्तनभरनमितं - *ஸ்தனங்களின் பாரத்தால் குனிந்தவரும்,* तुन्दिलं - *தொந்தி உடையவரும்,* चन्द्रचूडं - *சந்த்ரனைச் சூடியவரும்,* कण्ठादूर्ध्वं करीन्द्रं - *கழுத்திற்குமேல் யானையாகவும்* अधो युवतिमयं - *கீழே மங்கை உருவமாகவும் உள்ள* विद्यागणेशम् नौमि - *வித்யா கணேசரை வணங்குகிறேன்.*

***ஸ்ரீ வித்யா கணபதி விக்ரஹத்தின் தத்துவம் :-***

*பகவானுக்குப் பன்னிரு திருக்கரங்களும் துதிக்கையுமாக பதிமூன்று திருக்கரங்கள். வலது திருக்கரங்களில் கீழிருந்து மேலாக*

*1. அம்ருத கலசம் (காமேச்வரர்), 2. மாதுளை (மஹாகணபதி), 3. கதை (ஸூர்ய நாராயணர்), 4. கரும்புவில் (மன்மதன்), 5. சூலம் (பரம சிவன்), 6. சக்ரம் (மஹா விஷ்ணு). இடது திருக்கரங்களில் மேலிருந்து கீழாக, 7. சங்கு (மஹா லக்ஷ்மி), 8. பாசக் கயிறு (பரமேச்வரீ), 9. உத்பல புஷ்பம் (ரதி), 10. நெற்கதிர் (சாயா - ஸுவர்சலா), 11. உடைந்த தந்தம் (வல்லபாம்பாள்), 12. மஹா ச்ருங்கலா (காமேச்வரீ), 13. துதிக்கையில் ரத்ன கலசம் (நிர்குண ப்ரஹ்மம்).*

*ஸ்வாமியின் (14) வலது கண் ஸூர்யன், 15. இடது கண்-சந்த்ரன், 16. நெற்றிக் கண். யோகாக்னி ஆக இந்தப் பதினாறும் ஸ்வாமியிடம் ஷண் மதங்களையும் மாயையையும் நிர்க்குண ப்ரஹ்ம தத்துவத்தையும் பஞ்ச க்ருத்யங்களையும் விளக்குகின்றன.*

*2,11* காணாபத்யம் - அனுக்ரஹம்

*16.* கௌமாரம் - ஸம்ஹாரம்:

*4,9,15* சாக்தம் - ஸ்ருஷ்டி

*5,8* - சைவம் - ஸம்ஹாரம்

*6,7* வைஷ்ணவம் - ஸ்த்திதி

*3,10,14* ஸௌரம் - திரோதானம்

*1,12* மஹாமாயா - மாயாதத்வம்

*13,16* நிர்குண ப்ரஹ்மம் - ப்ரஹ்ம தத்வம்

மேலே கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்தில் இருந்து இவை எளிதாக விளங்கும். ஸ்ரீ வித்யாகணபதியின் வலது பக்கக்கீழ்கையில் இருந்து ப்ரதக்ஷிணமாக இடது பக்கக் கீழ்க்கை வரை ஆயுதங்கள் வருகின்றன.

**காணாபத்யம்** - மாதுளம் பழமும், தன்னுடைய உடைந்த தந்தமும்

**கௌமாரம்** - நெற்றிக்கண்

**சாக்தம்** - கரும்புவில், உத்பலபுஷ்பம், இடது கண்ணான சந்த்ரன்

**சைவம்** - சூலமும், பாசக்கயிறும்

**வைஷ்ணவம்** - சங்கும், சக்ரமும்

**ஸௌரம்** - கதை, நெற்கதிர், வலது கண்ணான சூரியன்

**மஹாமாயா** - அம்ருத கலசம், மஹாசிருங்கலை

**நிர்குண ப்ரஹ்மம்** - நெற்றியிலுள்ள யோகாக்னி மற்றும் துதிக்கையில் உள்ள ரத்ன கலசம்

**ஐந்து தொழில்கள் :-**

**ஸ்ருஷ்டி** - கரும்புவில், உத்பல புஷ்பம், இடது கண்ணிலுள்ள சந்த்ரன்

**ஸ்திதி** - சக்ராயுதமும், சங்கும்

**ஸம்ஹாரம்** - சூலமும் பாசக் கயிறும்

**திரோதானம்** - கதை, நெற்கதிர், வலது கண்ணிலுள்ள ஸூரியன்

**அனுக்ரஹம்** - மாதுளம் பழம், உடைந்த தந்தம்

**மஹாமாயா** - அம்ருத கலசம் மஹா ச்ருங்கலே

**நிர்குண ப்ரஹ்மம்** - நெற்றிக் கண்ணின் யோகாக்னி, ரத்ன கலசம்.

7. மூர்த்தியின் ஸ்வரூபம் கழுத்திற்கு மேல் யானே முகமும், கழுத்திற்கு கீழ் மங்கை உருவமும் கொண்டது. ஸ்ரீ மஹாகணபதியிலும் ஸ்ரீ மஹாஷோடசியிலும் தனித் தனியாக இருந்த ப்ரஹ்மமும், ப்ரஹ்ம சக்தியும் ஒன்றாகி கழுத்திற்கு மேல் யானே முகத்துடனும் கழுத்திற்குக் கீழ் மங்கை உருவத்துடனும் காட்சி அளிக்கிறார்கள். யானே முகம் என்பது ஸ்ரீ மஹாகணபதி - சிவ ப்ரஹ்ம ஸ்வரூபம். கழுத்திற்குக்கீழ் மங்கை உருவம் என்பது ஸ்ரீ மஹாஷோடசீ சக்தி - ப்ரஹ்ம சக்தி ஸ்வரூபம். ப்ரஹ்மமும் ப்ரஹ்ம சக்தியும் ஒன்றாகி ஒரே உடம்பாகி விட்டன. இங்கு மேலே சொன்ன மற்றொரு ஸூக்ஷ்மத்தையும் நாம் கவனிக்க வேண்டும். 'ப்ரஹ்மசக்தி' ப்ரஹ்மத்தினுள் அடங்கும். ப்ரஹ்மம் ப்ரஹ்ம சக்தியில் அடங்காது (இதைத்தான் 'நானின்றி அவளில்லே அவளின்றி நானுண்டு. என்பதில் விளக்கினோம்).

மஹா ப்ரளயத்தின் போது ப்ரஹ்ம சக்தி ப்ரஹ்மத்தினுள் செயலற்று ஒடுங்கி விடுகிறது. நிர்குண ப்ரஹ்மத்தைத் தவிர வேறொன்றும் இல்லே என்று ஆகிவிடுகிறது. இந்த தத்வத்தை நாம் கற்பனே செய்து பார்க்கலாமேயொழிய அனுபவிப்பது என்பது முடியாது - ஏனென்றால் ஸ்ருஷ்டிக்கு முன்னும் லயத்திற்கும் பின்னும் ஒரு அனுபவமும் இல்லே.

ஸ்ரீ வித்யா கணபதி ஸ்வரூபம் ப்ரஹ்ம ஸ்வரூபத்தின் முக்யத்துவத்தைக் காட்டுவதாக அமைகிறது. உடலிற்கு

முக்கியமானது முகம். ப்ரஹ்மம் அந்தர்யாமியாக இல்லாத நிலையில், ப்ரஹ்மசக்திக் கு இருப்பு இல்லை.

கழுத்திற்கு மேல் யானைமுகமும், கழுத்திற்குக் கீழ் மங்கை உருவமும் படைப்பிற்குப் பொருந்தாதது. மங்கையின் உடம்பு யானைத் தலையைத் தாங்காது. ஆனால் இங்கு தாங்குகிறது. இவ்வாறு இயற்கை வரையறைகளுக்கு அப்பாற்பட்டு இருப்பதாலேயே, நிர்குண ப்ரஹ்மத்திற்குரிய சில நிலைகள் வந்துவிடுவதாலேயே அத்வைத நிலைக்கு முந்தைய கடைசி நிலை என்று சொல்கின்றோம். யானைத் தலையைக் கவனித்தால் வலது பக்கம் தந்தம் இல்லாமல் பெண் யானையாகவும் இடது பக்கம் தந்தத்துடன் ஆண் யானையாகவும் உள்ளது. 'அர்த்தநாரீச்வர ஸ்வரூபத்திலோ இடது பக்கம் பெண்ணாகவும் வலது பக்கம் ஆணாகவும் உள்ளது. இங்கு அந்த நியதியும் மாறிப் புதுமையாக உள்ளது. கழுத்திற்குக் கீழ் மங்கை உருவம் என்பதும் லக்ஷணங்களுக்குப் புறம்பாகவே உள்ளது. பெண்களின் அழகே கொடியிடை. இங்கோ ஸ்ரீ வித்யாகணபதி பருத்த தொந்தியுடன் இருக்கிறார். பெண்கள் நளினமான ஆபரணங்களையே அணிவர். இங்கு இவரோ கொடிய விஷயப் பாம்புகளை ஒட்டியாணமாகவும், வளையல்களாகவும் அணிந்துள்ளார். இரண்டு கண்களுடன் இல்லாமல், யோகிகளும் ஸித்த புருஷர்களும் த்யானம் செய்யக் கூடிய மூன்றாவதான நெற்றி நடுவில் யோக (அக்னி) நேத்ரத்தையும் கொண்டுள்ளார். இப்படி பல விதங்களில் நிர்குண ப்ரஹ்மத்தின் நிலையை நெருங்குவதால் 'அத்வைத' நிலைக்கு முந்தைய கடைசி நிலை என்கிறோம்.

**'ஸ்ரீ வாஞ்சாகல்பலதா' என்ற சொல்லுக்குஸ்ரீ குருநாதர் ஸ்வாமிகளுக்குக் கொடுத்த விளக்கங்கள் :-**

1. 'ஸ்ரீ வாஞ்சாகல்பலதா' என்பதற்குக் கற்பகக் கொடி போல், தெய்வீக அருள் நிறைந்த, விரும்பியதைக் கொடுக்கக் கூடிய, தெய்வீகக் கொடி என்று பொருள்.

2. வாஞ்சாகல்பலதா - வாஞ்சா - கல்ப - லதா 'வாஞ்சா' என்றால் விருப்பம் அல்லது ஆசை. இது ஜீவனுக்கு எப்படி

ஏற்படுகிறது? என்பது கேள்வி. இந்த உயர்ந்த மனிதப் பிறவியை அடையும் முன் ஒன்வொரு ஜீவனும் அதனதன் பல பிறவிகளில், அதனதன் கர்ம பலனுக்கு ஏற்ப உழன்று நிறைய ஸத்வாஸனைகளையும், துர்வாஸனைகளையும் தன்னுள் பதித்துக் கொண்டிருக்கிறது. இந்த வாஸனைகளில் ஏற்றமும், குறைவும் அதனதன் கர்ம பலன்களையும், அஹங்காரத்தையும் பொருத்ததே. நாம் முன் சொன்ன விருப்பம் அல்லது ஆசை என்பதற்கும் தற்போது சொன்ன வாஸனை என்பதற்கும் உள்ள தொடர்பை அறிவோம். 'வாஸனா' என்பதுதான் ஒவ்வொரு ஜீவனின் விருப்பு, வெறுப்புகளுக்கு மூல காரணமாக இருப்பது. ஒவ்வொரு ஜீவனும் பல பிறவிகளில் பல உடல்களை அடைந்து பல நற்செயல்கள். தீய செயல்கள் செய்து, கால க்ரமத்தில் உடலை இழந்து, மறுபிறவி எடுக்கின்றது. ப்ரஹ்ம சக்தி நற்செயல்களையும், தீய செயல்களையும் முறையே ஸத்வாஸனா, துர்வாஸனா என்ற பதிவலைகளாக மாற்றி அந்தந்த ஜீவசக்தியில் ஏற்றிவிடுகின்றது. இந்த வாஸனைகளின் அடிப்படையில்தான் ஒவ்வொரு ஜீவனின் மறுபிறவியும் நிர்ணயமாகின்றது. ஸத்வாஸனைகள் அதிகமாக இருந்தால் உயர்ந்த பிறவி, துர்வாஸனைகள் அதிகமாக இருந்தால் தாழ்ந்த பிறவி. ஜீவனின் பரம லக்ஷ்யமான மோக்ஷத்தை அடைவதற்கு பல பிறவிகளில் ஏற்படுத்திக் கொண்ட வாஸனைகளை அழிக்க வேண்டும். 'வாஸனாக்ஷயம்' ஸித்திக்காமல் மோக்ஷம் ஸித்திக்காது.

மனத்தின் இயல்பான ஸங்கல்ப விகல்பங்களை எழாமல் செய்து நல்ல செயல்களையும், தீய செயல்களையும் பலனற்றதாக்கி மனோநாசம் செய்து காலக்ரமத்தில் பிறவியை முடித்ததும் ஜீவனில் வாஸனாக்ஷயம் ஏற்பட்டு முக்தியை அடைகிறான். அந்த மனோநாச நிலைக்கு நாம் உயர முதலில் தீய எண்ணங்களைக் குறைத்து, முழுதும் நல்ல எண்ணங்களாக மாற்றி ஸத்விஷயங்களிலும் ஈச்வரனது ஸகுண மந்த்ர ஸ்வரூபங்களிலும் மனதை த்யானிக்கச் செய்ய வேண்டும். அந்தத் தீய எண்ணங்களை முதலில் நல்ல எண்ணங்களாக

மாற்றப் பயன்படும் மருந்துதான் கல்பம். ஸாதகனின் மனத்தில் உள்ள எல்லா தீய எண்ணங்களையும் அழிக்கிறது. அந்த இடத்தில் நல்ல எண்ணங்களைக் கொண்டு வந்து ஈச்வரனின் ஸாத்விகமான ஸகுண மந்த்ர ஸ்வரூபங்களை த்யானிக்கிறது. ஸாதகன் பக்குவமடைய பக்குவமடைய அந்த உபாஸனா ஸகுண ப்ரஹ்மத்தின் அனுக்ரஹத்தால் அதனுடைய உண்மையான அழியாத எங்கும் நிறைந்த நிர்குண ஸ்வரூபத்தை உணர்ந்து மனோநாசத்தையும் வாசனாக்ஷயத்தையும் பெற்று மோக்ஷ நிலையை அடைய வைக்கிறது. 'லதா' என்றால் மிகவும் உயர்ந்தது. இந்த பிறவிப் பிணி என்ற பெரிய வியாதியைப் போக்கக் கூடிய மிகவும் உயர்ந்ததான மருந்து 'வாஞ்சாகல்பலதா என்று பொருள்.

வாஞ்சாகல்ப -லதா முன் யுகங்களில் யோகிகளாலும், ஸித்த புருஷர்களாலும், ரிஷிகளாலும் மிகவும் ரகசியமாகவும் ச்ரத்தையாகவும் போற்றி வாய் வழியாகவே பாதுகாக்கப்பட்டு வந்த மந்த்ர ஸம்ஹிதைக்கு 'வாஞ்சாகல்ப' ஸம்ஹிதை என்று பெயர். (தற்போது நியமம் இல்லாததால் அந்த ஸம்ஹிதை அழிந்து போய்விட்டது) இதில் மோக்ஷ பர்யந்தம் ஸகல விதமான புருஷார்த்தங்களையும் தரக்கூடிய கோடிக் கணக்கான மந்த்ரங்களும், க்ரமங்களும், நியமங்களும் கூறப் பட்டிருக்கும். அந்த கோடிக்கணக்கான மந்த்ரங்களில் மிகவும் சிறந்ததான 'லதா' கொடிபோன்ற மந்த்ரமே 'ஸ்ரீ வித்யா கணபதி மந்த்ரம்' என்று பொருள்.

இந்த மந்த்ரத்திற்கு மற்றொரு பெருமையும் உண்டு. மஹாமந்த்ரங்களான பாலா, பஞ்சதசீ என்ற இரண்டு ப்ரஹ்ம சக்திகளும், ஸ்ரீ மஹாகணபதி, ப்ரஹ்ம காயத்ரீ என்ற இரண்டு ப்ரஹ்ம ஸ்வரூபங்களால் ''ஸம்புடீகரணம்'' செய்யப்பட்டுள்ளன. இந்த ஸூக்ஷ்மத்தை மந்த்ர சாஸ்த்ரம் அறிந்த குருமார்களிடமிருந்தே தெரிந்து கொள்ளவேண்டும்.

**(6) ஸ்ரீ ஸ்வாமிகளிடம், ஸ்ரீ குருநாதர் செய்யும் யோகக்ரியைகள் - தீக்ஷைகள் - யோக பீடத்தில் நடக்கிற உபாஸநா யோகங்கள்.**

யோக பீடத்தில் ஸ்ரீ குரு நாதரின் விளக்கப்படி நான்குவிதமான உபாஸநா யோகங்கள் நடைபெறுகின்றன. இந்த நான்கிலுமே ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஸ்ரீ குருநாதரால் பூர்ண தீக்ஷை கொடுக்கப்பட்டுள்ளன.

அவை - 1) தேவதா உபாஸநா யோகம் எனும் ஸ்ரீ வித்யா கணபதி உபாஸநா யோகம். (2) ஜப உபாஸநா யோகம் எனும் புரச்சரண உபாஸநா யோகம். (3) பஞ்ச ஸாமரஸ்ய உபாஸநா யோகம் எனும் மோக்ஷ உபாஸநா யோகம். (4) ஆத்ம ஸமர்பண உபாஸநா யோகம் எனும் குண்டலினீ உபாஸநா யோகம்.

இந்த நான்கு யோகங்கள் ஒன்வொன்றிலும் 5 உட்பிரிவுகள் உள்ளன.

தேவதா உபாஸநா யோகத்தில் :- (1) மூல மந்த்ர உபாஸநா, (2) நர்மதேச்வர உபாஸநா, (3) யந்த்ரோபாஸநா, (4) விக்ரஹோபாஸநா, (5) விக்ரஹத்தில் நிர்குண ப்ரஹ்ம ஐக்யோபாஸநா. (ஸ்ரீ வித்யா கணபதி பரம தத்வமாலா மந்த்ரோபாஸநா).

2. ஜப உபாஸநா யோகத்தில் :- (1) மூல மந்த்ரஜபம், (2) ஹோமம், (3) தர்பணம், (4) மார் ஜநம், (5) ப்ராம்ஹண போஜநம்.

மேற்சொன்ன இரண்டு யோகங்களும் யோக பீடத்தில் ஸ்தூலமாக நடந்து வருபவையே. இதை யாவரும் அறிவர். இவற்றை வெளிப்படையாக எவரும் பார்க்கலாம். எனவே இவை இரண்டும் ''ஸ்தூல உபாஸனை'' அல்லது ''பஹிர்முக உபாஸனை'' என்ற பிரிவில் சேர்ந்தவை.

மூன்றுவதான பஞ்ச ஸாமரஸ்ய உபாஸனா யோகமும், நான்காவதான ஆத்ம ஸமர்ப்பண உபாஸனா யோகமும் அந்தர்முக தீக்ஷை பெற்ற மஹாஸித்த புருஷர்களால் மட்டுமே செய்யக் கூடிய மிகவும் கஷ்டமான உபாஸனா யோகங்கள், இவை ஸ்தூலமான கண்களால் பார்த்துப் புரிந்துகொள்ள முடியாததாதலால் ''ஸூக்ஷ்மோபாஸனா'' அல்லது

''அந்தர்முகோபாஸனா'' என்ற பிரிவைச் சேர்ந்தவை.

இந்த நான்கு யோகங்களையும் ஸ்ரீ குருநாதரின் அனுக்ரஹத்தில் ஸ்ரீ ஸ்வாமி யோகபீடத்தில் இன்றும் செய்து வருகிறார்கள். இந்த நான்கு யோகங்களிலும் சேர்த்து மொத்தமாக 63 யோகக் க்ரியைகள், யோக பீடத்தில் நடந்து வருகின்றன.

**3. பஞ்ச ஸாமரஸ்ய உபாஸனா யோகம் (மோக்ஷோபாஸனா யோகம்)**

இதில் 5 உட்பிரிவுகள் உள்ளன. அவை :- (1) ஸ்ரீ குரு உபாஸனா, (2) மந்த்ரோபாஸனா, (3) யந்த்ரோபாஸனா, (4) மூல தேவதோபாஸனா, (5) ஆத்மோபாஸனா.

இது ஒரு அந்தர்முகோபாஸனா. இதை வெளிப்படையாக எல்லோரும் பார்க்கும்படி செய்வது இயலாது, இதன் ''பரமலக்ஷ்யம்'' சிஷ்யனுக்கு மந்த்ரத்தை நேரிடையாக உபதேசித்த ஸ்ரீகுரு, ஸ்ரீகுரு உபதேசித்த மந்த்ரம், அந்த மந்திரத்திற்குரிய யந்த்ரம், அந்த மந்த்ர, யந்த்ரத்திற்குரிய மூலதேவதா ஸ்வரூபம் மற்றும் சிஷ்யன் இந்த ஐந்திற்கும் வேறுபாடு இல்லாது, த்ரிபுடி மறைந்து, ஐந்தும் ஒன்றே என்று ''அத்வைத ஸித்தி'' அனுபவத்தில் சிஷ்யனுக்கு ஏற்பட்டு அதில் திளைக்க வேண்டும் என்பதே. உண்மையில் அது கிடைத்தவுடன் அனுபவம், உபாஸனை, ஸ்ரீகுரு, சிஷ்யன், மந்த்ரம், யந்த்ரம், மூலதேவதை என்ற தனைத்தும் மறைந்துவிடும். ஏனென்றால் ப்ரஹ்மலயத்தில் எந்தவித உணர்விற்கும், செயலுக்கும் இடமில்லை. அது ஜீவ-ப்ரஹ்ம ஐக்யமான மோக்ஷமே. அதனால்தான் இதை மோக்ஷோபாஸனா யோகம் என்றும் சொல்கிறார்கள்.

இந்த யோகத்தை அப்யஸிக்கிற சிஷ்யன், முதலில் தனக்கு மந்த்ரத்தை நேரிடையாக உபதேசித்த தனது ஸ்ரீகுருவிடம், த்வைத பாவத்தைத் தான் பார்க்க வேண்டும். தான் ஸ்ரீ குருவைவிட எல்லாவற்றிலும் தாழ்ந்தவன். அவருக்கு தாஸன் (அடிமை). அவரது அனுக்ரஹத்தால் தனக்கு மந்த்ரம், உபாஸனை மற்றும் ஞானம் ஸித்திக்கும்

என்ற திடமான குருபக்தியும், எண்ணமும் மனத்தில் பதிய வேண்டும். தன்னைத் தனியாகப் பிரித்துக் கொண்டு, மற்ற ஸ்ரீகுரு, மந்த்ரம், யந்த்ரம், மூல தேவதா ஸ்வரூபம் என்ற நான்கிலும் ''ஏகத்வ'' பாவத்தைக் கொண்டு வர அப்யாஸம் செய்ய வேண்டும். ஸ்ரீ குருவைவிட மந்த்ரம் முக்யம் என்றும், மந்த்ரத்தைவிட யந்த்ரம் முக்யம் என்றும், யந்த்ரத்தைவிட மூல தேவதா ஸ்வரூபம் முக்யம் என்றும், எண்ணுவதை அடியோடு விட வேண்டும். மாறாக ஸ்ரீ குரு ஸ்வரூபத்திலேயே எல்லாவற்றையும் பார்க்க முயற்சிசெய்ய வேண்டும். ஸ்ரீ குருவின் வெவ்வேறு ஸ்வரூபங்களே இந்த மந்த்ரம், யந்த்ரம், மூலதேவதா ஸ்வரூபம் என்ற நினைப்பு மனத்தில் ஆழத்தில் பதிய வேண்டும். அதற்காகக் குதர்கமாக ஸ்ரீ குருபாதுகா மந்த்ரத்தை மட்டும் சொல்லி, ஸ்ரீ குருவை மட்டும் உபாஸித்து, மந்த்ரம், யந்த்ரம், மூல தேவதா ஸ்வரூபம் இவைகளைப் புறக்கணித்து விடவும் கூடாது. ஸித்தர்களின் ஸங்கல்பத்தில் கூறுவது போல், ''श्री गुरोराज्ञया, श्री गुरोरभिन्न'' என்ற முறைப்படி, எனது ஸ்ரீ குருவின் ஆணையால், ஸ்ரீ குருவைத் தவிர் வேறுபடாத, மந்த்ரம், யந்த்ரம், மூல தேவதா ஸ்வரூபம் இவற்றைத் த்யானிக்கிறேன், உபாஸிக்கிறேன். என்ற எண்ணத்துடன் ஸ்ரீ குரு சொன்ன நியமப்படி உபாஸனையைச் செய்ய வேண்டும். இப்படி செய்தாலேயே நமது பூர்ணமான குரு பக்தியால், சதுஸ்ஸாமரஸ்யம் ஏற்படும். குருவின் அனுக்ரஹத்தாலேயே, சிஷ்யன் தனது ஜீவனை ஸ்ரீ குருவிடம் அர்பணித்து லயமடைந்து, பஞ்ச ஸாமரஸ்யம் ஸித்தித்து மோக்ஷம் ஸித்திக்கும். பஞ்ச ஸாமரஸ்யம் ஸித்தித்தால் அங்கு எந்த செயலும், உணர்வும் இல்லை. அதுவே ஜீவப்ரஹ்ம ஐக்யம் - மோக்ஷம். அது ஸ்ரீ குருமூலம்தான் ஸித்திக்கும் என்பதையே சாஸ்த்ரம் சொல்கிறது. ஆகவே ஸ்ரீ குரு ஆணையிட்ட உபாஸனா வழியைத் தவிர, உபாஸனையைத் தாண்டிய வேறு உபாஸனை எதுவும் இல்லை என்பதே இந்த யோகத்தின் ஸாரம். ஸ்ரீ ஸ்வாமிகள் இதைப் பூர்ணமாக அப்யஸித்து, அனுபவித்த மஹாஸித்த புருஷர். ஸ்ரீ

மூலவித்யா பஞ்சதசீயின் 15 அர்த்தங்களில் ஒன்றாக இதையும் ஸ்ரீ பாஸ்கரராயர் ''வரிவஸ்யா ரஹஸ்யத்தில்'' விளக்குகின்றார்.

**4. ஆத்ம ஸமர்ப்பண உபாஸனா யோகம் (குண்டலினீ (உபாஸனா யோகம்)**

*இதிலும் 5 உட்பிரிவுகள் உள்ளன. அவையாவன :-*

*1. ஆஸன உபாஸனா ஸித்தி (ஸ்தூல சரீரஸித்தி)*

*2. ப்ராணாயாம உபாஸனா ஸித்தி (ஸ்தூல சரீர ஸித்தி)*

*3. ஸ்தம்பன உபாஸனா ஸித்தி (ஸூக்ஷ்ம சரீர ஸித்தி)*

*4. தசமஹா உபாஸனா ஸித்தி (ஸூக்ஷ்ம சரீர ஸித்தி)*

*5. நிர்யாண உபாஸனா ஸித்தி (காரண சரீர ஸித்தி)*

*முன் சொன்னது போல் இதுவும் ''ஸூக்ஷ்ம அல்லது அந்தர்முகோபாஸனா யோகம்''*

*இந்த உபாஸனையால் உண்டாகும் பல ஸித்திகளை, உபாஸகன் சிறிதும் சுயநலத்திற்காகவோ, இப்பூவுலகில் புகழ் பெறுவதற்காகவோ உபயோகிக்கவே கூடாது. இந்த யோகத்தை உபதேசிக்கும் விஷயத்தில் குருமார்களும், சிஷ்யனிடமிருந்து மிகவும் கண்டிப்பான ''வாக்கு'' வாங்கிக் கொண்டே செய்வார்கள். இதில் ஏதாவது தவறு நேர்ந்தால் கடுமையான குருத்ரோஹத்திற்கு ஆளாக நேரிடும்.*

*ஸ்ரீ ஸ்வாமிகள் இந்த ஸித்திகளை ஸ்ரீ குருநாதரின் ஆணையின்படியே லோகோபகாரத்திற்காகவும் மற்ற ஸித்தர்களுக்குத் தீக்ஷை கொடுக்கும் போதும் மட்டும் உபயோகிப்பார்கள்.*

*இவற்றில் ஆஸன ஸித்தியும் ப்ராணயாம ஸித்தியும் ஸ்தூலசரீர ஸித்தியாகும். ஸ்தம்பன ஸித்தியும் தசமஹாஸித்தியும் ஸூக்ஷ்ம சரீர ஸித்தியாகும். நிர்யாண ஸித்தியே காரண சரீர ஸித்தியாகும். இவ்வாறு ஸித்தர்கள் வரிசைப்படுத்துவர். இதற்குக் குண்டலினீ உபாஸநா யோகம்*

என்ற பெயரும் உண்டு. முன் சொன்ன மூன்று யோகங்களைக் காட்டிலும் இது மிக சிரமமானது. கடும் நியமங்கள் அடங்கியது. ஆஸன ப்ராணாயாம யோகங்களைவிட ஸ்தம்பன - தசமஹா ஸித்தி உபாஸநாயோகம் மிகவும் கடினம். நிர்யாண உபாஸநா யோகம் எல்லா வற்றையும் விட உக்கிரமான தொன்று. இதில் 38 யோகக் க்ரியைகள் உள்ளன.

இந்த யோகங்களைக் கைதேர்ந்த மஹாஸித்த புருஷரான ஸ்ரீ குருநாதர் ஸ்தூலமாகப் பக்கத்திலிருந்து அவரது நேர்ப்பார்வையில்தான் அப்ப்யஸிக்க வேண்டும். ஸ்ரீ குருநாதர்தான் அவருடைய சிறந்த அனுபவத்தால், சிஷ்யன் இந்த யோக முறையைப் பயிலும் போது இடையிடையே ஏற்படுகிற ச்ரமங்களைப் புரிந்து கொண்டு நீக்க இயலும்.

இதில் ஆஸன ப்ராணாயாம உபாஸனு ஸித்திகள், சரீரத்தில் பின் வரக் கூடிய ஸ்தம்பன - தசமஹா - நிர்யாண யோகங்களை அனுகூலமாகச் செய்வதற்கு உதவக் கூடியவை.

ஸ்தம்ப்பன உபாஸநா ஸித்தியில் 16 ஸ்தம்ப்பனங்கள் உள்ளன. ''ஆகாசஸ்தம்ப்பனம். 2. வாயு ஸ்தம்ப்பனம், 3. அக்னி ஸ்தம்ப்பனம், 4. ஜல ஸ்தம்ப்பனம், 5. பிருதிவீ ஸ்தம்ப்பனம், 6. ஓஷதிஸ்தம்ப்பனம், 7. அன்னஸ்தம்ப்பனம், 8. புருஷஸ்தம்ப்பனம், 9. மனஸ்ஸ்தம்ப்பனம், 10. புத்திஸ்த்தம்ப்பனம், 11. சித்த ஸ்தம்ப்பனம், 12. அஹங்காரஸ்தம்ப்பனம், 13. சரீர ஸ்தம்ப்பனம், 14. சரீர அர்த்தஸ்தம்ப்பனம், 15. சரீர மஹாஸ்தம்ப்பனம், 16. ஜீவஸ்தம்ப்பனம். இவற்றில் ஆகாசம் முதல் அஹங்காரம் முடிய உள்ள 12 ஸ்தம்ப்பனங்களால் ஸாதகன் தனது யோக சக்தியால் அதனதன் செயல்களை அடக்கி ஆள்கிறார்.

சரீர ஸ்தம்பனத்தில் சிஷ்யனுக்கு யோகாவஸ்தை யாலோ, சரீர உபாதைகளாலோ, சரீரம் சிரமப்படும்போது ஸ்ரீ குருநாதர் அவருடைய யோக சக்தியால் சில மணிநேரங்களுக்கு சரீரத்தை ஸ்தம்ப்பனம் செய்து உபாதை நீங்கியபின் ஸ்தம்ப்பனத்தை எடுப்பார். இதில் ஸமயத்திற்குத் தகுந்தாற்போல் கை, கால், கண், காது முதலியவை இயங்காதிருக்கும்.

சரீர அர்த்தஸ்தம்ப்பனத்தில் குருநாதரது யோக சக்தியால் சிஷ்யனது சரீரம் ஸாதாரணமாக இயங்கும். சரீரத்தின் உபாதை நீங்குவதற்கான சிகித்ஸைகளைச் செய்த பின் ஸ்தம்ப்பனத்தை எடுப்பார். அர்த்த ஸ்தம்ப்பனத்தில் அதிக பக்ஷம் பதினைந்து நாட்கள் இருக்கலாம்.

சரீர மஹாஸ்தம்பனம் என்பது சிஷ்யனது சரீரத்திற்கு ஏதாவது பெரிய அடியோ காயமோ ஏற்பட்டால் சரீரம் முழுவதையும் உணர்விழக்கச் செய்து பாதுகாப்பான இடத்திற்குக் கொண்டு சேர்ப்பார். இதில் மூச்சு தவிர மற்ற சரீரச் செயல்கள் இருக்காது.

ஜீவஸ்தம்பனத்தில் சிஷ்யனது சரீரம் சவம் போலாகும். ஸூக்ஷ்ம ஜீவ ப்ரவேசம், ஹடயோகம், பேதாபேத நிரூபண ஸூக்ஷ்ம யோகம் இவைகளுக்கு இந்த ஸ்தம்ப்பனம் அவச்யம்.

**4. தசமஹா உபாஸநா ஸித்திகள் -**

இதில் பத்து ஸித்திகள் உள்ளன. அவை அணிமா, லகிமா, மஹிமா, ஈசித்வம், வசித்வம், ப்ராகாம்யம், புக்தி, இச்சா, ப்ராப்தி, ஸர்வகாம ஸித்தி என. ஸ்ரீ குருநாதர் அனுக்ரஹத்தால் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு தசமஹாஸித்திகளும் உள்ளன. இன்றும் ஸ்ரீ ஸ்வாமிகளின் கனவு நிலையில் ஸர்வகாம ஸித்தி வந்து ஸ்ரீ ஸ்வாமிகளைப் பரீக்ஷித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகள் கையால் மந்த்ரதானம் வாங்கிச் செல்வதுண்டு,.

**5. நிர்யாண உபாஸநா ஸித்தி :-**

காரண சரீர ஸித்தி என்பர். இதில் 10 யோக க்ரியைகள் உள்ளன. அவையாவன. 1. ஸூக்ஷ்ம சரீர ப்ரயாணம். (astral travel) 2. பேதாபேத நிரூபண ஸூக்ஷ்ம யோகம். 3. ஆவிர்பாவ ஸ்வரூபம், 4. ஸஹஜ ஸமாதி, 5. ஹடயோகம், 6. அந்தர்முக தீக்ஷை, 7. ஹம்ஸ - மஹா ஹம்ஸ - பரம ஹம்ஸதீக்ஷைகள். 8. நிர்யாண தீக்ஷை, 9. ஸூக்ஷ்ம ஜீவ ப்ரவேச தீக்ஷை, 10. ஏகாதசாவதான ஸித்தி என. மேற்கூறியவைகளில் 1,6,9 யோக க்ரியைகள் முன்னர் விளக்கப்பட்டுள்ளன. ஏழாவதான

ஹம்ஸ - மஹா ஹம்ஸ - பரமஹம்ஸ தீக்ஷைகள், ஆயிரம் அந்தர்முக தீக்ஷை பெற்று துரீயாதீத பரமஹம்ஸாச்ரம தீக்ஷை பெற்றவரால் மட்டும் செய்யக் கூடியவை.; ஸ்ரீ ஸ்வாமிகள், ஸ்ரீ குருநாதரின் ஆஜ்ஞைப்படி ஸ்ரீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரம மாதாமஹருக்கு 30-11-2001 அன்று துரீயாதீத ஹம்ஸாச்ரம தீக்ஷையைப் பீடத்திலேயே செய்து அருளினுர். தற்போது மஹாஹம்ஸாச்ரம தீக்ஷைக்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

எட்டாவதான நிர்யாண தீக்ஷை மஹாஸித்த புருஷர்கள் தனக்குத் தானேயோ அல்லது தனது சிஷ்யருக்கோ அல்லது பிறகு யோகிகளுக்கோ ஸூக்ஷ்ம சரீரத்தில் செய்ய வேண்டிய யோக தீக்ஷைகளுக்காக ஸ்தூல சரீரத்தை யோகாக்கினியால் பிரித்து எடுப்பதே. நிர்யாண தீக்ஷைக்குப் பிறகு ஸ்தூல சரீரம். யோகாக்னியால் பஸ்மமாகிவிடும். ஸூக்ஷ்ம காரண சரீரங்களே எஞ்சி நிற்கும். அவை யோக சக்தியால் ப்ரஹ்மமானஸ ஸரோவர தபோவனம் போன்ற ஸித்த க்ஷேத்ரங்களில் தவம் செய்து நற்கதி பெறும்.

பத்தாவதான ஏகாதசாவதான ஸித்தி பதிஞேரு வகைப்படும். இதுவும் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ ஸ்வாமிகள் பீடத்திலுள்ள ஸ்தூல சரீரத்தைத் தவிர பத்து இடங்களில் திவ்ய சரீரத்துடன் தவம் செய்கிருர். அவை (1-6) திருவண்ணுமலையிலுள்ள ஸத்யோஜாத - வாமதேவ - அகோர - தத்புருஷ - ஈசான - யோகாக்னி குண்டங்கள். 7 ப்ரஹ்மமானஸ ஸரோவர தபோனம். 8. மஹாமேரு ச்ருங்க தபோவனம், 9. மஹாகைலாஸ தபோவனம், 10. காச்மீர யோகாக்னி குண்டம். இதுபோல் பதினென்று இடங்களில் ஒரே ஸமயத்தில் இருந்து கொண்டு ஜபாதிகளைச் செய்யும் யோகத்திற்கு ஏகாதசாவதான ஸித்தி என்று பெயர்.

**7. குரு தத்வம் - ஸ்ரீ மஹாமேரு ச்ருங்கத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளின் ப்ரத்யக்ஷ அனுபவம் - அம்பாள் ஆணையின்படி ஸ்ரீ குருநாதர் பாடிய "ஸ்ரீ குருகீதம்"**

ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு, ஸ்ரீ குருநாதர் 31-10-1998ல் ப்ரஹ்மமாஸன ஸரோவரிலுள்ள தபோவனத்தில் முதல் அந்தர்முக தீக்ஷையை அருளினார். அது முடிந்ததும் அம்பாளை தரிசிக்க ''மஹாமேருச்ருங்கம்'' அழைத்துச் சென்றார். அங்கு அம்பாள், ஸ்ரீ குருநாதர், ஸ்வாமிகள் இருவருக்கும் மதுபர்கம் போன்ற அம்ருத ரஸத்தைக் கொடுத்துச் சாப்பிடச் செய்து, ஸ்ரீ ஸ்வாமிகளைப் பார்த்து, இவ்வாறு சொன்னாள்.

''குழந்தாய், உனக்குக் கிடைத்த குருநாதர் ஸாதாரணமான குருநாதர் அல்ல. அவர் உனது கல்மஷமில்லாத, குழந்தைத்தனமான குருபக்தியால் உன்னை ஒரு மஹாஸித்த புருஷனாக, ஆதர்ச குருவாக இருக்க வைத்து, பல ஜீவன்களுக்கு நல்வழி காட்டுபவனாக விளங்க வைக்கப்போகிறார். ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனையிலும், யோக க்ரியைகளிலும் நீ தன்னிகரற்றவனாக விளங்குவாய். உன்னைப் பற்றிய ஸூக்ஷ்மங்களை உன் குருநாதரைத் தவிர யாராலும் அறிய இயலாது. எனவே ஒருவரது ஆலோசனையையும் கேட்காமல், எவ்வளவு விக்னங்கள் வந்தாலும், தளராமல் உன் குருநாதர் காட்டும் வழியில் தைர்யமாகச் செல். அவரிடமே எல்லாவற்றையும் காண்'' என்று சொல்லி விட்டு உன் குருநாதரின் பெருமைகளை ஒரு கீதமாகப் பாடு என்றாள். ஸ்ரீ ஸ்வாமிகள் எனக்கு பாட்டும் தெரியாது. ஸாஹித்யமும் வராது என்றார்.

அதற்கு அம்பாள், ''குழந்தாய் ! உன் குருவை நினைத்துப்பாடு. எல்லாம் அற்புதமாய் அமையும் என்றாள் !.

உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ குருநாதரைச் சரணடைந்து மடமடவென கீழ்வரும் குருகீதத்தைப் பாடினார்.

ஸ்ரீ குருநாதரும் அம்பாளும் கீதத்தைக் கேட்டு மனமகிழ்ந்து பீட பூஜையின் போது இதைத் தினம் பாடும்படி கட்டளையிட்டார்கள். அதன்படியே அன்றிலிருந்து இன்று வரை தினமும் பூஜையின்போது யோக பீடத்தில் இந்த கீதம் பாடப்பட்டு வருகிறது.

# ஸ்ரீ குருகீதம்

ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத பாஹி மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ரக்ஷ மாம் (பல்லவி)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத சாந்தஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத காருண்யமூர்த்தே பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத வ்ருத்த ஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத கோமத்யம்பாஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மார்கதர்ஶின் பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மார்க்கபந்தோ பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத அருணவர்ண பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத த்ரிநேத்ர பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத அந்தர்முகவிகாஸ பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ரக்ஷாமந்த்ரஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ஸுமுகஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத விகடஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ஹேரம்பஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத வத்ஸானுஜ பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மந்த்ரஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத ஸித்தஸ்வரூப பாஹி மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மஹாகணபதி ஸ்வரூப பாஹி மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மஹாகணபதி ஸ்வரூப ரக்ஷ மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மஹாஷோடஶீ ஸ்வரூப பாஹி மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத மஹாஷோடஶீ ஸ்வரூப ரக்ஷ மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத வித்யாகணேஶ ஸ்வரூப பாஹி மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத வித்யாகணேஶ ஸ்வரூப ரக்ஷ மாம் (ப)
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத அத்வைதஸ்வரூப பாஹி மாம்
ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத அத்வைதஸ்வரூப ரக்ஷ மாம் (ப)
தேஹி மாம் ஸ்ரீ குருநாத மௌனஸித்திம் மாம் தேஹி
தேஹி மாம் ஸ்ரீ குருநாத த்யான ஸித்திம் மாம் தேஹி
தேஹி மாம் ஸ்ரீ குருநாத யோகஸித்திம் மாம் தேஹி
தேஹி மாம் ஸ்ரீ குருநாத ஸமாதிஸித்திம் மாம் தேஹி
தேஹி மாம் ஸ்ரீ குருநாத ப்ரஹ்ஜ்ஞானம் மாம் தேஹி
தேஹி மாம் ஸ்ரீ குருநாத ப்ரஹ்மைக்யம் மாம் தேஹி

## ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத

பாஹி பாஹி மாம் பாஹி இஹ ஸம்ஸாராத் மாம் பாஹி
த்ராஹி த்ராஹி மாம் த்ராஹி இஹ ஸம்ஸாராத் மாம் த்ராஹி
அன்யதா ஶரணம் நாஸ்தி த்வமேவ ஶரணம் மம।
தஸ்மாத் காருண்ய பாவேன ரக்ஷ ரக்ஷ கணேஶ்வர॥

## ஸ்ரீ குருநாத ஸ்ரீ குருநாத

பாஹி பாஹி மாம் பாஹி இஹ ஸம்ஸாராத் மாம் பாஹி
த்ராஹி த்ராஹி மாம் த்ராஹி இஹ ஸம்ஸாராத் மாம் த்ராஹி
ஸ்வரூபநிரூபணஹேதவே ஸ்ரீ குரவே நமோநம: நமோ நம: நமோ நம:
ஸ்வச்சப்ரகாஶவிமர்ஶ ஹேதவே ஸ்ரீ பரமகுருவே நமோநம: நமோ நம: நமோ நம:
ஸ்வாத்மாராமபஞ்ஜரவிலீனதேஜஸே ஸ்ரீ பரமேஷ்டி குரவே நமோ நம: நமோ நம: நமோ நம:

கணேசானந்தநாத க்ருதமிதம் கீதம்·
ஸ்வீகுருஷ்வ ஸ்வீகுருஷ்வ ஸ்வீகுருஷ்வ தயாநிதே.

*சுபமஸ்து*